# மான பங்கம்

## ( கதைகள் )



ஆசிரியர் :

**ரவீந்திரநாத் டாகூர்**

வங்க மூலத்திலிருந்து
மொழிபெயர்த்தோர் :

**த. நா. குமாரஸ்வாமி,**

**த. நா. ஸேனுபதி**








[உரிமை பதிவு]

கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் :: சென்னை

[விலை ரூ. 2/50




# பொருளடக்கம்

## பதிப்புரை

ரவீந்திரரின் சிறு கதைகள் உலக இலக்கியத்தில் முக்கிய ஸ்தானம் வகிப்பவை. இவற்றைப்பற்றி விரிவாக எழுதத் தேவையில்லை. பல்வேறு சுவைகள் மலிந்து விளங்குவது இந்தத் தொகுதி.




# மான பங்கம்

## ஆபத்து

**சா**யங்காலம் ஆக ஆகப் புயலின் வலிமை ஓங்கியது. மழையின் சாரல், இடியின் ஓசை, பளிச்சிடும் மின்னல் எல்லாம் கலந்து ஒரு தேவாசுர யுத்தத்தை நடத்தின. இருண்ட மேகங்கள் ஊழிக்காலத்தின் வெற்றிக் கொடிகளெனத் திசைதோறும் பறந்தன. கங்கையின் இக்கரையிலும் அக்கரையிலும் கட்டுக்கு அடங்காத அலைகள் தை தை என்று நடனமாடின. தோட்டத்திலிருந்த பெரிய பெரிய மரக்கிளைகள் யாவும் வளைந்தன.

அந்தச் சமயத்தில், சந்தனநகரில் தோட்ட வீடு ஒன்றில், விளக்கு எரியும் ஓர் அறைக்குள், கதவையெல்லாம் போட்டுக்கொண்டு, படுக்கையில் உட்கார்ந்து இருவர் - புருஷனும் மனைவியும் - பேசிக்கொண்டிருந்தனர்.

"இன்னும் கொஞ்ச நாள் இருந்தால் உன் உடம்பு சரியாகிவிடும்; அப்புறம் போகலாம்" என்றான் சரத்.

"எனக்கு உடம்பு ஒன்றுமில்லை. இப்போதே ஊருக்குப் போனால் ஒன்றும் வராது" என்றாள் கிரண்மயி.

விவாகமானவர்களுக்குமட்டுந்தான் இது புரியும். நான் எவ்வளவு சுருக்கமாகச் சொன்னேனோ, அவ்வளவு சுலபத்தில் சம்பாஷணை முடிந்துவிடவில்லை. அது அப்படி ஒன்றும் கடினமான விஷயம் அல்ல. ஆனால் வாதப் பிரதிவாதம் ஒரு முடிவுக்கு வருகிற வழியாக இல்லை; சுக்கான் இல்லாத மரக்கலம்போல் ஒரே இடத்தில் சுழன்றுகொண்டிருந்தது. கடைசியில் கண்ணீர் அலைகளுக்கிடையே மூழ்கும் நிலைக்கு வந்துவிட்டது.

"இன்னும் கொஞ்சநாள் இருப்பது நல்லது என்று டாக்டர் சொல்கிருரே!" என்ருன் சரத்.

"உங்கள் டாக்டருக்கு எல்லாம் தெரியுமாக்கும்?" என்ருள் கிரண்மயி.

"இந்தச் சமயத்தில் ஊரில் பல வியாதிகள் வரலாம். இரண்டொரு மாசம் இருந்துவிட்டுப் போவது நல்லது."

"இங்கே மாத்திரம் யாருக்கும் வியாதி வரவில்லை யாக்கும்?"

மூன் கதை இதுதான். வீட்டிலும் சரி, ஊரிலும் சரி, கிரண்மயியின்மேல் எல்லாருக்கும் விசுவாசம்-மாமியாருக்குக்கூட. ஆகவே, கிரண் கடுமையான நோய் வாய்ப்பட்டபோது, எல்லாருக்கும் கவலை மூண்டது. டாக்டர் நல்ல காற்றுக்காக நாட்டுப்புறத்துக்குப் போகச் சொன்னுர். வீட்டையும் முக்கிய வேலையையும் விட்டுப் போவதை அவள் புருஷனும் மாமியாரும் தடுக்கவில்லை. ஊரிலுள்ள மற்றப் பெரியவர்கள், "காற்று மாறுவதால் உடம்பு தேருது. ஒரு மனைவிக்காக இவ்வளவு பிரமாதப் படுத்துவது பெண் பித்தனுடைய வேலை. இதற்கு முன் எவன் மனைவிக்கும் வியாதியே வந்ததில்லையா! சரத் போக இருக்கிற இடத்தில்மட்டும் எல்லாரும் சிரஞ்சீவிகளா? எந்த ஊருக்குப் போனுல் என்ன, விதி விடப் போகிறதா?" என்ருர்கள். ஆனுல் சரத்தோ அவன் தாயோ அதை யெல்லாம் காதில் போட்டுக்கொள்ளவில்லை. கிராமத்துப் பெரியவர்கள் ஒருமித்துச் சொல்லும் வார்த்தையைவிடத் தங்கள் இருதய லக்ஷ்மியான கிரண்மயியின் பிராணனே அவர்களுக்குப் பெரிதாகத் தோன்றியது. அன்புக்கு உரிய வருக்கு விபத்து வரும்போது இப்படித்தான் மனிதர்களுக்கு ஒரு மயக்கம் ஏற்படும்.

சரத் சந்தனநகர்த் தோட்டத்துக்கு வந்துசேர்ந்தான். கிரண்மயிக்கும் உடம்பு குணப்பட்டுவிட்டது. பலம் மட்டும் இன்னும் உடம்பில் வரவில்லை. வாட்டத்தின் குறி முகத்திலும் தென்பட்டது. அதைப் பார்த்தால் எப்படியோ பிழைத்து எழுந்தாளே என்று சொல்லத் தோன்றும்.

கிரணுக்கு நாலு பேரோடு கலகலப்பாக இருக்கும் சுபாவம். இங்கே தனியாக இருப்பது அவளுக்குப் பிடிக்கவில்லை; வீட்டிலோ வேலையில்லை. பேசவும் அக்கம் பக்கத்தில் கூட்டாளிகள் இல்லை. மணிக்கு மணி அளவு பார்த்து மருந்தைக் குடிப்பது, ஒத்தடம் கொடுத்துக்கொள்வது, பத்தியம் தவறாமல் இருப்பது: இவை யாவும் அவளுக்குக் கசந்தன. புயல் வீசும் அந்த மாலைப் பொழுதில், அறையில் அடைபட்டிருக்கும்போது கணவனும் மனைவியும் இதைப்பற்றித்தான் விவாதம் செய்துகொண்டிருந்தனர்.

கிரண் பதில் சொல்லிக்கொண்டிருந்தவரையில் வாதம் ஓயவே இல்லை. கடைசியில் அவள் பதில் சொல்லாமல் சரத்தைப் பார்த்துவிட்டுத் தலையைத் திருப்பிக்கொண்டாள். பாவம், புருஷனுக்கு வேறு வழியில்லை, பாணம் தொடுக்க. தோல்வியை ஒப்புக்கொள்ளப் போகும் தறுவாயில் வேலைக்காரன் வெளியே இருந்து உரத்த குரலில் என்னவோ அறிவித்தான்.

சரத் எழுந்துபோய்க் கதவைத் திறந்தான். புயலில் ஒரு படகு மூழ்கிவிட்டது, பிராம்மணச் சிறுவன் ஒருவன் மட்டும் நீந்தி அவர்கள் தோட்டத்துக்கு வந்திருப்பதை அவன் அறிவித்தான்.

இதைக் கேட்டதும் கிரணின் ரோஷமெல்லாம் பறந்தது. சட்டென்று கொடியிலிருந்து உலர்ந்த துணி

ஒன்றை எடுத்துக் கொடுத்தாள். ஒரு தம்ளரில பாலைச் சுட வைத்து, அந்தப் பிள்ளையை உள்ளே வரச் சொன்னாள்.

பையனுக்கு நீண்ட தலைமயிர். பெரிய கண்கள்; மீசை இன்னும் அரும்பவில்லை. கிரண் தானே நேரில் இருந்து அவனுக்குச் சாதம் போட்டானதும் அவனைப் பற்றி விசாரிக்கலானாள்.

ஜாத்திரைக் கூட்டத்தைச் சேர்ந்த சிறுவன். பெயர் நீலகாந்தன். பக்கத்து ஊர் ஸிம்ஹபாபுவின் வீட்டில் ஜாத்திரைக்காக அழைத்தார்களாம். இதற்குள் படகு மூழ்கி, அவன் கூட்டத்தாரின் கதி என்னவாயிற்றோ தெரியாது. அவனுக்கு நன்றாக நீந்தத் தெரியும். ஆகவே, உயிர் தப்பினான்.

அந்தச் சிறுவன் அங்கேயே தங்கிவிட்டான். இன்னும் கொஞ்சம் இருந்தால் செத்துப்போயிருப்பானே என்று இரங்கிக் கிரண் அவன்மேல் அன்பாக இருந்தாள்.

'நல்லதாயிற்று; கிரணுக்குக் கைமேல் வேலை ஒன்று கிடைத்துவிட்டது. இனிமேல் கொஞ்ச நாள் இந்த மாதிரி சழியும்' என்று எண்ணினான் சரத். பிராம்மணச் சிறுவனைப் போஷிப்பதில் புண்ணியம் உண்டு என்று எண்ணி மாமியாரும் முகமலர்ந்து இருந்தாள். ஜாத்திரைக் கோஷ்டியின் யஜமானன் கையிலிருந்தும் யமன் கையிலிருந்தும் சட்டென்று விடுதலை பெற்று, இந்தப் பணக்காரக் குடும்பத்தினரை வந்து அடைந்த நீலகாந்தன் மட்டில்லாத மகிழ்ச்சி யடைந்தான்.

கொஞ்ச நாட்களுக்குள்ளாகவே சரத், அவன் தாய் இருவருடைய மனமும் வேறுபட்டது. 'இனிமேல் அவசியமில்லை; இந்தப் பிள்ளையை அனுப்பிவிட்டாலே ஒரு தொல்லை ஒழியும்' என்று எண்ணலாயினர்.

நீலகாந்தன் மறைவாகச் சரத்தின் ஹுக்காவில் 'தம்' இழுக்க ஆரம்பித்தான். மழைக் காலத்தில், கொஞ்சங் கூடத் தயங்காமல், தன் இஷ்டம்போல் பட்டுக்குடையைப் பிடித்துக்கொண்டு, புது நண்பர்களைப் பிடிக்கும் வேட்டையில் ஊர் சுற்றலானான். எங்கிருந்தோ ஓர் அழுக்குப் பிடித்த நாயைக் கொண்டுவந்து கொஞ்ச, அது யாரும் உள்ளே வராத சரத்தின் அறைக்குள் சென்று, வெளேரென்றிருந்த படுக்கையின்மேல் தன் அழுக்குப் படிந்த நான்கு கால்களையும் தூக்கிவைத்து, தன் நல்வரவின் அடையாளத்தைப் பதித்தது. நீலகாந்தனைச் சுற்றி அவன் பக்தர்களாகிய சிறுவர் பலர் கூடினர். அந்த வருஷம் ஊர் மாந்தோப்பில் ஒரு பழத்தையாவது அவர்கள் பழுக்க விடவில்லை.

கிரண் இச்சிறுவனுக்கு அதிகமாக இடம் கொடுத்தாள், சரத்தும் அவன் தாயும் அது விஷயமாக எவ்வளவோ தடுத்தும் அவள் கேட்கவில்லை. சரத்தின் பழைய சொக்காய், ஸாக்ஸ், புது வேஷ்டி, பூட்ஸ், சால்வை எல்லாவற்றையும் வழங்கி அவனை ஒழுங்காக்கினாள். நடுநடுவே வேண்டுமென்றபோது அவனைக் கூப்பிட்டு அவன்மேல் அன்பையும் ஆதரவையும் சொரிவாள். கிரண் முறுவல் முகத்துடன் வெற்றிலைத் தட்டைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு கட்டிலின்மேல் உட்காருவாள். வேலைக்காரி ஈரக்குழலை நன்றாகச் சிக்கெடுத்துத் துவட்டி உலரவைப்பாள். நீலகாந்தன் கீழே நின்றுகொண்டு கையை அசைத்து 'நள-தமயந்தி' அபிநயம் பிடித்துக் காட்டுவான். இவ்வாறு நீண்ட பகல் பொழுது சீக்கிரத்தில் சென்றுவிடும். சரத்தையும் தன்னோடு ஓர் ஆசனத்தில் உட்கார்ந்து இதைப் பார்க்கச் சொல்வாள் கிரண். ஆனால் சரத்துக்கு

ஓரே அருவருப்பாக இருக்கும். சரத்தின் எதிரே நீலகாந்தனின் நடிப்பு தன் முழு வேகத்தில் ஓடாது. மாமியார் ஒரொரு நாள் ஸ்வாமியின் திருநாமத்தைக் கேட்கலாம் என்ற நம்பிக்கையுடன் வருவாள். ஆனால் கொஞ்ச நாழிகைக்கெல்லாம் வழக்கம்போல், ஸ்வாரஸ்ய மான பகல் தூக்கம் அவளை ஆட்கொள்ளும்.

தினமும் சரத் நீலகாந்தனின் காதைத் திருகுவான். அவன் அதிருஷ்டம் உதையும் குத்தும் அதிகமாகக் கிடைக்கும். ஆனால் அதைவிடக் கடுமையான தண்டனைகளை அநுபவித்திருந்ததால், அவனுக்குச் சூடோ சொரணையோ உண்டாகவில்லை. உலகத்தில் இரண்டு பாகம்—நீர், நிலம். அதேபோல மனிதப் பிறவியிலும் இரண்டு பிரிவு உண்டு— உண்பது, உதைபடுவது; இது நீலகாந்தனின் திட நம்பிக்கை. ஆனால் உதையின் பாகமே அவனுக்கு அதிக மாகக் கிடைத்தது.

நீலகாந்தனின் வயது இன்னதென்று சரியாகச் சொல்ல முடியாது. பதினான்கு பதினைந்து இருக்கலாம் என்றால் வயதைக்காட்டிலும் முகம் முற்றியிருந்தது. பதினேழு பதினெட்டிருக்கலாம் என்றால், பிராயத்துக்கு ஏற்ற பக்குவம் ஏற்படவில்லை. ஒன்று பிஞ்சிலே முற்றி யவன்; இல்லையேல் உரிய காலத்தில் பழுக்காதவன்.

உண்மை இதுவே: சிறு வயதிலேயே ஜாத்திரைக் கும்பலில் சேர்ந்து ராதை, தமயந்தி, சீதை, வித்யாவின் தோழி இந்த மாதிரி வேஷங்களில் நடிப்பான். நாடக அதிகாரியின் சௌகரியத்துக்கு ஏற்பக் கடவுளின் கிருபையால் கொஞ்சம் வளர்ந்தவுடன் அவன் வளர்ச்சி நின்றுவிட்டது. அவனைப் பார்த்தால் சிறுவனாகவே தோன்றும். தான் சிறுவன் என்பதே அவன் எண்ணமும்.

வயதுக்கேற்ற மதிப்பை அவனுக்கு யாரும் தருவதில்லை. இவ்வாறு, இயல்பானதும் இயல்புக்கு முரணானதுமான காரணங்களால், பதினேழு வயதில் பக்குவமற்றவனாகவும், பதினான்கு வயதில் நன்றாகப் பழுத்தவன்போலவும் இருந்தது அவனது தோற்றம். மீசையின் கீற்றே புலனாகாததால் இந்த ஐயம் மேலும் திடமாயிற்று. ஹுக்காவில் 'தம்' இழுத்ததாலோ, இல்லை, வயதுக்கு ஏற்காத வார்த்தைகளைப் பேசுவதனாலோ, நீலகாந்தனின் உதடுகள் இரண்டும் முற்றிக் கிடந்தன. ஆனால் பெரிய விழிகளில் ஒரு சரள பாவமும் இளமையும் தென்பட்டன. நீலகாந்தனின் உள்ளம் இயல்பாகவே பிஞ்சானது. ஆனால் ஜாத்திரைக் கூட்டத்தில் பழகியதால் அளவுக்கு மீறிக் கனிந்ததன் குறிகள் தென்பட்டன.

சரத்பாபுவின் பாதுகாப்பிலே சந்தனநகர்த் தோட்டத்துக்கு வந்து வசிக்கவே, நீலகாந்தன் தன் சுய ரூபத்தைக் காட்டிக் காரியங்களைச் செய்யலானான். வாலிபமும் இளமையும் கூடும் சமயத்தில் அவனுடைய விஷமங்கள் சில காலம் வெளிக்கிளம்பாமல் இருந்தன. இப்போது இங்கே வந்ததும் பதினெட்டு வயதுக்குரிய குணங்கள் பூரணமாக மலரத் தலைப்பட்டன.

அந்த மாறுதல் வெளியிலுள்ளோர் எவர் கண்களிலும் படவில்லை. ஆனால், கிரண் அவனைச் சிறுவனாக எண்ணி அவனுடன் பழகியபோது அவன் கூச்சமும் சங்கடமும் கொள்வான். ஒரு நாள் கிரண் வேடிக்கையாக, அவனை ஸ்திரீவேஷம் போட்டுக்கொண்டு நடிக்கச் சொன்னாள். அது அவன் மனத்தை வெகுவாக உறுத்தியது. அதற்குச் தக்க சாக்குகள் சொல்லித் தப்பித்துக்கொள்ளவும் வழி தெரியவில்லை. இப்போதெல்லாம் அவனைப் பாடவோ நடிக்கவோ சொன்னால் அவன் எங்கேயாவது போய்விடுவான்.

தான், சனியன் பிடித்த ஜாத்திரைக் கூட்டத்தின் ஒரு பயல் தான் என்ற எண்ணத்தை அவன் அடியோடு மறந்தான்.

அந்த வீட்டுக் குமாஸ்தாவிடம் எழுதப் படிக்கக் கற்றுக்கொள்வதென்று தீர்மானித்தான். ஆனால் யஜமானி அம்மாவின் ஆதரவில்வளரும் நீலகாந்தனிடத்தில் அவ்வளவு அக்கறை விழவில்லை அவருக்கு. பொறுமையுடன் மனம் ஒன்றி எழுதிப் படித்துவரும் வழக்கம் இல்லாததால் எழுத்துக்கள் தாறுமாருகப் புலப்பட்டன. கங்கைக் கரையில் சம்பக மரத்தின்மேல் சாய்ந்துகொண்டு, மடியின்மேல் திறந்த புஸ்தகத்துடன் நீலகாந்தன் உட்கார்ந்திருப்பான், நீர் சலசலவென்று ஓடும்; ஓடங்கள் மிதந்து செல்லும்; கிளையின்மேல் ஒரு பக்ஷி தன் விருப்பம்போல் பாடிக் கீச்சிடும். நீலகாந்தன் புஸ்தகத்தைப் பார்த்தவாறு என்ன யோசனையில் ஆழ்வானே! அது அவனுக்கே தெரியுமோ, தெரியாதோ! அவனால் இரண்டு வார்த்தை சேர்த்துப் படிக்க முடியவில்லை. புஸ்தகம் படிக்கிறேம் என்ற பெருமிதம்மட்டும் கொள்வான். எதிரே ஒரு படகு போகும்போது அதிக ஆர்ப்பாட்டமாகப் புஸ்தகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு முணமுணவென்று படிப்பதுபோல் பாவனை செய்வான். இதைக் கவனிப்பார் இராதுபோனுல் படிப்பிலிருக்கும் ஊக்கம் போய்விடும்.

முன்பெல்லாம் தெரிந்த பாட்டுக்களை அவன் யந்திரம் போல் பாடிக்கொண்டு செல்வான். இப்போது அந்த ஸ்வரங்கள் அவன் உள்ளத்தில் ஓர் அபூர்வமான சஞ்சலத்தைக் கிளப்பிவிட்டன. பாட்டின் சொற்கள் சாதாரணமானவையே; வெறும் பிராஸம் நிரம்பியவை. அவைகளின் அர்த்தமும் நீலகாந்தனுக்குத் தெரியாமல் போகவில்லை, ஆனல்,

"ஓரே ராஜஹம்ஸ, ஜன்மி த்விஜ வம்சே!
ஏமன் ந்ருசம்ஸ கேன ஹொலி ரே—
பலோ கீ ஜன்யே, ஏ அரண்யே
ராஜகன்யார் ப்ராணஸம்சய கரிலிரே!"

என்று அவன் பாடும்பொழுது வேறு உலகத்துக்கு அவன் எண்ணங்கள் செல்லும். சுற்றிலும் உள்ள உலகமும் துச்சமான வாழ்வும், பாட்டில் புதிய பொருளாக உருக் கொள்ளும். ராஜகுமாரி, ராஜஹம்ஸம் இவைகளின் நினைவு அவன் மனத்துக்குள் ஓர் அபூர்வமான சித்திரத்தை வரையும். தான் யாரென்று எண்ணிக்கொள்வானே தெரியாது. ஆனால் நாடகக் கம்பெனியில் உழைக்கும் ஒரு திக்கற்ற சிறுவன் என்பதை அவன் அடியோடு மறந்துவிடுவான். மிகவும் எளிய வீட்டில் வளரும் அதிருஷ்டக் கட்டையான குழந்தைகூட, இரவில் படுக்கப்போது, அரசகுமாரன், அரசன் மகள், ஏழு ராஜ்யங்களின் ரத்தினக் குவியல்கள் இவைகளைப்பற்றிக் கதைகள் கேட்கும்போது, அகல் விளக்குஎரியும் குடிசையின் மூலையில் தன் ஏழைமையையும் மீறிக் கதையில் வரும் அதிசய ராஜ்பத்தைக் கண்ணெதிரே பார்க்கிறுன். புதிய அழகும், பகட்டான உடுப்பும், யதேச்சையான வாழ்வும் அவன் எதிரே வந்து நிற்கும். அதே போல இந்தச் சிறுவனும் இன்னிசையில் மயங்கி, தன் வாழ்வையே ஒரு புது உருவில் அமைத்துக்கொள்வான். நீரின் ஒலி, இலைகளின் சலசலப்பு, பறவைகளின் இன்குரல், இந்த அதிருஷ்டவீனனுக்குப் புகலிடம் தந்த அந்த அன்னபூரணியின் அன்பு முகம், வனப்பார் வளையல்கள் பூண்ட அவள் கைகள், நிகரற்ற அழகும் மலர்களின் மென்மையும் வாய்ந்த அவளுடைய சிவந்த பாதங்கள் இவை யாவும் ஒன்ருகக் கூடி ஒரு மயக்கத்தைத் தரும். மற்ருெரு சமயம் இந்த இசை, கானல் நீர்போல்

எங்கேயோ மறைந்துவிடும். நாடகக் கோஷ்டிப் பையனுன பழைய நீலகாந்தனின் தலைவிரி கோலம் தென்படும். மாந்தோப்புச் சொந்தக்காரன், அண்டை வீட்டுக்காரன் இவர்கள் பேச்சைக் கேட்டுச் சரத், அவன் முதுகில் பளீர் பளீர் என்று அறைவான். தன்னைச் சூழ்ந்திருக்கும் சிறுவர்களுக்குத் தலைவனுக நீலகாந்தன் நீரிலும் நிலத்திலும் மரத்தின் உச்சாணிக் கிளையிலும் பல வகையாக உபத்திரவங்கள் இழைப்பான்.

இதற்குள் சரத்தின் இளைய சகோதரன் ஸதீசன் கல்கத்தாவிலிருந்து காலேஜ் விடுமுறையில் வந்து சேர்ந்தான். கிரணுக்கு மகா சந்தோஷம். கையில் இன்னொரு காரியம் கூடியது. உட்காரும்போதும் சாப்பிடும் போதும் உடை பூணும்போதும், தனக்குச் சமவயதினனுன மைத்துனனைப் பலவாருக ஏளனம் செய்வாள். கையில் குங்குமத்தைத் தடவிக்கொண்டு அவன் கண்களை மூடுவாள்; ஒரு சமயம் அவன் சொக்காயின் பின் பக்கத்தில் 'குரங்கு' என்று எழுதிவைப்பாள். கதவை வெளிப்புறத்திலிருந்து படீரென்று சார்த்திவிட்டுக் கலகலவென்று உரக்கச் சிரித்தவாறு ஓடிப் போய்விடுவாள். ஸதீசனும் ஏமாந்த பேர்வழி அல்ல. அவளுடைய சாவிக்கொத்தைத் திருடுவது, அவளுக்காக வைத்திருக்கும் பாக்குத் தூளில் மிளகாய்ப்பொடியைக் கலந்துவிடுவது, அவளுக்குத் தெரியாமல் கட்டில் சட்டத்தில் அவளுடைய தலைப்பை முடிந்துவிடுவது - இவ்வாறெல்லாம் வஞ்சம் தீர்த்துக் கொள்வான். இருவருமாக நாட்களை ஆட்டமும் ஓட்டமுமாகவே கழிப்பார்கள். நடுநடுவே சண்டையும் அழுகையுங்கூட வந்துவிடும். சமாதானம் செய்துகொண்டு திரும்பவும் விளையாடுவார்கள்.

நீலகாந்தனை எந்தப் பிசாசு பிடித்துக்கொண்டதோ தெரியாது. எதைச் சாக்கிட்டு யாருடன் வாதாடுவது என்று அவனுக்கு விளங்கவில்லை. ஆகவே, அவன் உள்ளம் கசந்தது. தன்னுடன் திரியும் சிறுவர்களை வீணுக்கு அழவைப்பான். தான் வளர்த்த நாட்டு நாயைக் காரண மின்றித் தடியால் அடிப்பான். அது வள் வள்ளென்று குரைத்து ஊரையே கூட்டிவிடும். வேகமாகக் கைத்தடியை வீசி, மரங்களின் கிளைகளை வீணாக ஒடிப்பான்.

நன்றாகச் சாப்பிடுபவர்களைத் தன் எதிரில் உட்கார வைத்துச் சாப்பிடச் செய்வதில் கிரணுக்கு ஓர் ஆசை. நீலகாந்தன் சாப்பாட்டில் கை தேர்ந்தவன். நல்ல பண்டங்களை அடிக்கடி சாப்பிடத் தூண்டுவது அவன் வரைக்கும் வீணானதே இல்லை. ஆகவே, கிரண் தினமும் தானே நேரிலிருந்து அவனைச் சாப்பிடச் செல்வாள். இந்தப் பிராம்மணச் சிறுவன் திருப்தியாக உண்பதைக் கண்டு மகிழ்வெய்துவாள். ஸதீசன் வந்தபின், நீலகாந்தன் சாப்பிடும்போது நடுநடுவே கிரணுக்கு வர ஒழியாது. முன்பெல்லாம் இதைப்போன்ற நிலைமையில் அவன் தன் பாட்டில் சாப்பிட்டுவிடுவான். பால் தம்ளரில் ஜலத்தை விட்டு அலம்பி, அந்த ஜலத்தைக்கூடக் குடித்துவிட்டுப் போவான். ஆனால் இப்போதோ கிரண் வந்து சாப்பிடக் கூப்பிடாவிட்டால் அவன் உள்ளம் வேதனையுறும்; ஒன்றும் பிடிக்காது. சாப்பிடாமலேயே எழுந்துவிடுவான். தொண்டை அடைக்க வேதனையுடன் வேலைக்காரியிடம், 'எனக்குப் பசி இல்லை' என்று சொல்லிவிட்டுச் செல்வான். 'கிரணுக்கு இந்த விஷயம் தெரிந்ததும் பச்சாத் தாபத்துடன் என்னைக் கூப்பிட்டனுப்புவாள்; சாப்பிடச் சொல்லி வேண்டுவாள்; அப்பொழுதுகூட ஒப்புக் கொள்ளக்கூடாது. எனக்குப் பசிக்கவில்லை என்றுதான்

சொல்ல வேண்டும்' என்று உறுதி கொள்வான். ஆனால் கிரணுக்கு யாரும் இந்த விஷயத்தைத் தெரிவிப்பதில்லை. அவளும் அவனைக் கூப்பிடுவதில்லை. மிகுதியிருக்கும் சாப்பாட்டையெல்லாம் வேலைக்காரியே சாப்பிட்டு விடுவாள். அவன் தன் அறையில் விளக்கை அணைத்து விட்டுத் தலையணையில் முகத்தைப் பொத்திக்கொண்டு விக்கி விக்கி அழுவான். அவன் யார்மேல் கோபித்துக் கொள்வது? அவனுக்கு என்ன உரிமை உண்டு? அவனைத் தேற்ற யார் வரப்போகிறார்கள்? உலகின் தாயான நித்திரா தேவிதான் கருணை கொண்டு தன் தளிர்க்கரங்களால் மெல்லத் தடவி, தாயற்ற அச்சிறுவனின் தாபத்தை அகற்றுவாள்.

ஸதீசன் எப்போது பார்த்தாலும், கிரணிடம் தன்னைப் பற்றிக் கோள் சொல்கிறான் என்று நீலகாந்தனுக்குப் பட்டது. எந்தக் காரணத்தாலாவது கிரண் மனச்சோர்வுடன் உட்கார்ந்திருந்தால், ஸதீசன் செய்த கலகத்தினால் தான் அப்படி இருக்கிறாள் என்று எண்ணிக்கொள்வான்.

இப்போதெல்லாம் நீலகாந்தன் மனப்பூர்வமாகக் கடவுளை வேண்டிக்கொள்வான்: "அடுத்த ஜன்மத்தில் நான் ஸதீசனாகவும், ஸதீசன் நானாகவும் பிறக்க வேண்டும்."

பிராம்மணன் முழு மனத்துடன் சாபம் கொடுத்தால் அது பலிக்கும் என்று அவனுக்குத் தெரியும்! ஆகவே, ஸதீசனைத் தன் மனத்துக்குள் பிரம்மதேஜஸால் எரிக்கப் போய்த் தானே புழுங்குவான். மேல்மாடியில் ஸதீசனும் அவன் மதனியும் உரக்கச் சிரிப்பதும் ஒருவரை ஒருவர் ஏசிக்கொள்வதும் அவன் காதில் விஷம்போல் விழும்.

வெளிப்படையாக ஸதீசனுடன் விரோதம் பாராட்ட நீலகாந்தனுக்குத் துணிவில்லை. ஆனால் சமயம்

வாய்த்தபோது சிறு சிறு இன்னல்கள் விளைவித்துத் திருப்தி அடைவான். துறைப் படிக்கட்டில் ஸோப்பை வைத்துவிட்டு ஸதீசன் கங்கையில் மூழ்கி நீராடும்போது நீலகாந்தன் கப்பென்று பாய்ந்து ஸோப்பை இடுக்கிக் கொண்டு போய்விடுவான். ஸதீசன் ஸாவதானமாக ஸோப்பைத் தேடிவந்து பார்க்கும்போது அது இராது. ஒரு நாள் குளித்துக்கொண்டிருக்கும்போது, சட்டென்று தன்னுடைய விலையுயர்ந்த சொக்காய் ஜலத்தில் மிதப்பதை அவன் கண்டான். காற்றில் பறந்துவந்து விழுந்திருக்குமோ என்று நினைத்தான். ஆனால் அந்தக் காற்று எந்தப் பக்கத்திலிருந்து வீசியது என்று யாருக்கும் தெரியாது.

ஒரு நாள் ஸதீசனின் பொழுதுபோக்கின் நிமித்தம் கிரண் நீலகாந்தனைக் கூப்பிட்டு, நாடகப்பாட்டு ஒன்று பாடச் சொன்னாள். நீலகாந்தன் கம்மென் றிருந்தான். கிரண் வியப்புற்று, "உனக்கு என்னடா வந்தது?" என்றாள். நீலகாந்தன் பதில் சொல்லவில்லை. கிரண் திரும்பவும், "அந்தப் பாட்டைப் பாடேண்டா" என்றாள். "அது மறந்து போய்விட்டது" என்று வெடுக்கென்று சொல்லிவிட்டு நீலகாந்தன் வெளியே போய்விட்டான்.

கடைசியில் கிரண் ஊருக்குப் போகும் நாள் நெருங்கியது. எல்லாரும் புறப்படத் தயாராயினர். ஸதீசனும் கூடப் போவதாக இருந்தது. ஆனால் நீலகாந்தனிடம் யாரும் ஒன்றும் சொல்லவில்லை. அவனையும் கூட அழைத்துச் செல்வதா வேண்டாமா என்பதைப்பற்றி யாருமே யோசிக்கவில்லை.

கிரண் மட்டும் நீலகாந்தனை அழைத்துப் போகலாம் என்றாள். மாமியார், புருஷன், மைத்துனன் எல்லாருமே அதற்கு ஒரே பேச்சாகக் குறுக்குச் சொல்லவே, கிரணும்

அந்த எண்ணத்தை விட்டுவிட்டாள். கடைசியில், போவதற்கு இரண்டு நாட்களுக்கு முன் கிரண் அந்தச் சிறுவனை அழைத்து, அன்புடன் சொந்த ஊருக்குத் திரும்புமாறு அவனிடம் சொன்னாள்.

எத்தனையோ நாட்கள் அவமானப்பட்ட பின், இன்று ஆதரவான வார்த்தைகளைக் கேட்டதும், அவன் துக்கம் தாங்காமல் ஓவென்று அழுதுவிட்டான். கிரணின் கண்களிலும் நீர் துளித்தது. நாடோடியான ஒரு சிறுவனை அழைத்துக் கொஞ்ச நாள் ஆதரவுடன் வளர்த்த பிறகு அவனை இப்படி விட்டுச் செல்வது பாபமாயிற்றே என்று அவள் மனம் அல்லலுற்றது.

ஸதீசன் அங்கே இருந்தான். இவ்வளவு பெரிய பிள்ளை அழுவது அவனுக்கு வெறுப்பை ஊட்டியது; "அடே சே, நிறுத்துடா! என்னவோ மூழ்கிவிட்டதுபோல் அழறானே...!" என்றான்.

இந்த மாதிரி அதட்டியதற்காகக் கிரண் அவனைக் கோபித்துக்கொண்டாள். ஸதீசன், "உனக்குத் தெரியாது, மன்னி. எல்லாவற்றையுமே நீ நம்பிவிடுகிறாய். யாரோ, எவனோ தெரியாது. அவன் இங்கே வந்து ராஜாவைப்போல் இருந்தான். உதைபடப் பழைய இடத்துக்குப் போய் விடப் போகிறோமே என்றதில்; மாய்மாலம் பண்ணுகிறான். இரண்டு சொட்டுக் கண்ணீர் சிந்தினாலே உன் மனம் இளகிவிடும் என்று அவனுக்குத் தெரியுமே!" என்றான்.

ஸதீசனைக் கொன்றுவிட வேண்டும், குத்திவிட வேண்டும் என்று ஆத்திரமாக வந்தது நீலகாந்தனுக்கு! ஆனால் அப்படி ஒன்றும் செய்ய முடியவில்லை. அவன் உள்ளத்தில் ரத்தம் கொதித்தது.

கல்கத்தாவிலிருந்து ஸதீசன் ஓர் அழகிய பேனு ஸ்டாண்டு வாங்கிக்கொண்டு வந்திருந்தான். அதன் இரு புறங்களிலும் இரண்டு சின்னஞ் சிறிய கிளிஞ்சில் படகுகள் பேனுவை ஏந்துவதற்கு; நடுவே, ஜெர்மன் வெள்ளியாலான ஹம்ஸம், தன் திறந்த மூக்கில் பேனுவைப் பிடித்துக் கொண்டு சிறகை விரித்து நிற்கும். ஸதீசன் அதை ஜாக்கிரதையாகக் காப்பாற்றி வந்தான். தினமும் அவன் பட்டுச் சவுக்கத்தினுல் அதைத் துடைத்து வைப்பான். கிரண் அதற்காக அவனை ஏளனம் செய்து, அந்த வெள்ளி அன்னப்புள்ளின் மூக்கைத் தன் விரலால் தட்டிச் சொல்வாள்: "ஓரே ராஜஹம்ஸ, ஜன்மி த்விஜவம்சே, ஏமன் ந்ருசம்ஸ கேன ஹொலீ ரே"—இதை அடிப்படையாகக் கொண்டு மைத்துனனும் மதனியும் வேடிக்கையாகப் பேசிக்கொள்வார்கள்.

ஊருக்குத் திரும்புவதற்கு முந்தின நாள் காலையில் அந்த வஸ்து அகப்படவில்லை. கிரண் சிரித்துக் கொண்டே, "உன் ராஜஹம்ஸம் தமயந்தியைத் தேடிப் பறந்து போயிருக்கும்" என்றுள்.

ஆனுல் ஸதீசனுக்குக் கோபம் தலைக்கேறியது. நீலகாந்தனே அதைத் திருடியிருக்க வேண்டும் என்று அவன் மனப்பூர்வமாக நம்பினுன். அன்று சாயங்காலம் ஸதீசனின் அறைப்பக்கமாக நீலகாந்தன் வட்டமிட்டுக்கொண்டிருந்ததாக யாரோ சொன்னுர்கள்.

ஸதீசனின் முன் குற்றவாளியை அழைத்து வந்தார்கள். அங்கே கிரணும் இருந்தாள். ஸதீசன் அவனை நோக்கி, "நீதானேடா என் பேனு ஸ்டாண்டைத் திருடியது? கொண்டுவந்து கொடுக்கிருயா, இல்லையா?" என்றுன்.

நீலகாந்தன் பல குற்றங்கள் செய்தபோதும், செய்யாத போதுங்கூடச் சரத்திடம் உதை வாங்கி அதை ஆனந்தமாகப் பொறுத்துக்கொண்டும் போயிருக்கிருன். ஆனல் கிரணின் எதிரே அவனைத் திருடன் என்று குற்றம் சாட்டவே அவன் விழிகள் இரண்டும் தீயைக் கக்கின. மார்பு கழுத்தளவு விம்மியது. ஸதீசன், மேலே ஒரு வார்த்தை பேசினலும் தன் பத்து நகங்களுடன் கோபங்கொண்ட பூனைபோல் அவன் மேல் பாயவேண்டுமென்று ஆத்திரம் வந்தது.

அப்போது கிரண் அவனைப் பக்கத்து அறைக்கு அழைத்துச் சென்று, "நீலு, அந்த வஸ்துவை எடுத்திருந்தால் என்னிடம் தா. ஸதீசன் உன்னை ஒன்றும் சொல்லமாட்டான்" என்ருள்.

நீலகாந்தனின் கண்களில் பலபலவென்று நீர் வடிந்தது. கடைசியில் தன் கைகளால் முகத்தைப் பொத்திக்கொண்டு அழலானன்.

கிரண் வெளியே வந்து, "நீலகாந்தன் திருடவே மாட்டான்" என்ருள்.

சரத், ஸதீசன் இருவருமாக, "நிச்சயமாக அவனைத் தவிர வேறு யாரும் அதைத் திருடியிருக்க முடியாது" என்ருர்கள்.

"ஒருகாலும் இல்லை" என்ருள் கிரண் அழுத்தமாக.

சரத் நீலகாந்தனை நேரில் விசாரணை செய்ய விரும்பினன். ஆனல் கிரண், "கூடாது, இந்தத் திருட்டுச் சம்பந்தமாக அவனை எதுவும் கேட்கக் கூடாது" என்ருள்.

"அவன் அறையையும் பெட்டியையும் சோதனை போடவேண்டும்" என்ருன் ஸதீசன்.

"அப்படிச் செய்தால் உங்கள் முகத்தில் விழிக்கவே மாட்டேன். அவன் குற்றமற்றவன்; அவன்மேல் சந்தேகப்பட இடமில்லை" என்றாள் கிரண்.

இதைச் சொல்லும்போது, அவள் கண்கள் பசந்தன. அந்தக் கண்ணீரின் ஆணைக்கு அஞ்சி நீலகாந்தன்மேல் யாரும் கை வைக்கவில்லை.

தான் வளர்த்த முன்பின் தெரியாத அச்சிறுவன்மேல் இவ்வாறு பழி சுமத்தவே கிரணின் உள்ளத்தில் தயை மூண்டது. அவள் நல்லதாக இரண்டு ஜதை பராஸ் டாங்கா வேஷ்டி, துப்பட்டி, இரண்டு சொக்காய், புதுச் செருப்பு, பத்து ரூபாய் நோட்டு ஒன்று, இவற்றுடன் சாயங்காலமானதும் நீலகாந்தனின் அறைக்குள் புகுந்தாள். அவனுக்குத் தெரியாமல் அவன் பெட்டியில் பரிசுகளை வைத்துவிட்டு வரவேண்டுமென்று அவளுக்கு ஆசை. தகரப்பெட்டியும் அவள் கொடுத்ததுதான்.

தலைப்பில் இருந்த சாவிக்கொத்தால் மெல்லப் பெட்டியைத் திறந்தாள். ஆனால் அந்தப் பரிசுகளை வைக்க இடமில்லை. பெட்டியினுள் வளைதடி, மாங்காயை அறுக்கும் துரட்டுக் கத்தி, உடைந்த கண்ணாடித் தம்ளர்களின் அடிப்பாகம் முதலிய பல வஸ்துக்கள் குவிந்து கிடந்தன. பெட்டியை நன்றாக ஒழித்துவைத்தால் எல்லாம் பிடிக்கும் என்று கிரணுக்குப் பட்டது. அவள் பெட்டியைக் காலி செய்தாள். தடி, கொக்கி, கண்ணாடித்துண்டுகள் எல்லாம் ஒவ்வொன்றாக வெளியே வந்தன. பின்னர் வெளுப்பான சில வேஷ்டிகளும், அழுக்கு வேஷ்டிகள் இரண்டொன்றும்; எல்லாவற்றுக்கும் அடியில் சட்டென்று, ஸதீசன் ஜாக்கிரதையாக வைத்திருந்த ராஜஹம்ஸம் வைத்த பேனா ஸ்டாண்டும் அவள் கண்களில் பட்டது!

கிரண் வியப்புடன் அதைக் கையில் எடுத்துக்கொண்டு யோசனையில் ஆழ்ந்துவிட்டாள்.

இந்தச் சமயத்தில் நீலகாந்தன் பின்புறம் அறைக்குள் நுழைந்தது அவளுக்குத் தெரியாது. நீலகாந்தன் எல்லாவற்றையும் பார்த்தான். தன் திருட்டைக் கண்டுபிடிக்கத்தான் அவள் வந்தாள் என்று எண்ணிக்கொண்டான்; கண்கூடாகப் பிடித்தும் ஆயிற்று. அவன் சாதாரணக் கள்ளன்போல் பேராசையுடன் அதைத் திருடவில்லை. பதிலுக்குத் துன்பம் தரவே அந்தக் காரியம் செய்தான். அதைக் கங்கையில் போட்டுவிடுவதென்றே நினைத்தான். ஆனால் கணநேரப் பலவீனத்தால் தன் பெட்டியிலேயே வைத்துக்கொண்டுவிட்டான். எப்படி இதையெல்லாம் சொல்வது? அவன் திருடனல்ல! அவன் வேண்டுமென்று திருடவில்லை. பின் யார் அவன்? அவன் திருடன்தானே? கிரண் அவனைக் கள்ளனாக நினைத்துச் சந்தேகம் கொள்வது அநியாயம்; இதை எப்படிச் சொல்வது? இதை அவனால் தாங்க முடியவில்லை.

கிரண் பெருமூச்செறிந்து, அந்தப் பேனாவ்டாண்டைப் பெட்டிக்குள் வைத்தாள். முன்போலவே எல்லாவற்றையும் அதன்மேல் அடைத்தாள். மேலே தன் பரிசுகளையும் பத்து ரூபாய் நோட்டையும் ஒழுங்காக வைத்தாள்.

ஆனால் மறுதினம் அந்தச் சிறுவன் போன இடமே தெரியவில்லை. ஊரார் யாருமே அவனைப் பார்க்கவில்லை என்றனர். போலீஸாரும், "அவன் அகப்படவில்லை," என்றார்கள். "இப்போது அவன் பெட்டியைச் சோதனை போடலாமே" என்றான் சரத்.

கிரண் அவனைத் தடுத்து, "கூடாது" என்றாள்.

அவன் பெட்டியைத் தன் அறைக்குள் கொண்டுவந்து அந்தப் பேனு ஸ்டாண்டை எடுத்து ஒருவருக்கும் தெரியாமல் கங்கையில் எறிந்துவிட்டாள்.

சரத் தன் குடும்பத்தினருடன் ஊருக்குத் திரும்பிச் சென்றுன். தோட்டமும் முன்போல் வெறிச்சென்று ஆகி விட்டது. நீலகாந்தன் வளர்த்த அந்த நாய்மட்டும் வயிற்றுக்கு உணவின்றி ஆற்றங்கரையிலேயே சுற்றிச் சுற்றி ஓலமிட்டது.

# மான பங்கம்

ராமநாத சீலரின் மூன்றடுக்கு வீட்டின் மேல்தளத்தில் ஓர் அறையில், கோபீநாத சீலனின் சம்சாரம் கிரிபாலா இருந்தாள். படுக்கை அறையின் தென்னண்டை வாசற்படியில் நாலைந்து தொட்டிகளில் மல்லிகை ரோஜாச் செடிகள். மெத்தையைச்சுற்றி நாலுபக்கமும் கைப் பிடிச் சுவர்கள். வெளிக் காட்சிகளைக் காணும்பொருட்டு நடு நடுவே இடைவெளிகள் இருந்தன. பள்ளியறையில் பலவிதமான மேல்நாட்டு அரம்பையர் பிறந்த மேனியாக நிற்கும் 'எங்கிரேவிங்' படங்கள் தொங்கின. வாசலுக்கு நேர் எதிரே பதினாறு வயதான யஜமானியம்மாளின் பெரிய படம். அவள் அழகு மற்ற இங்கிலீஷ் ரமணிகளின் அழகுக்குக் குறைந்து போய்விடவில்லை.

கிரிபாலாவின் அழகைத் திடீரென்று தோன்றும் ஒளிக் கதிருக்கும், நித்திரை கலைந்தவுடன் ஏற்படும் மனத் தெளிவுக்கும் ஒப்பிடலாம். சட்டென்று யாவரையும் மயக்கவல்லது. இத்தகைய அழகைக் கனவிலும் கண் டிருக்க முடியாது என்றே படும். நாம் நித்தியம் பார்க்கும் பழக்கமான காட்சியல்ல. அவள் வனப்பே தனிப்படை யானது.

கிரிபாலாவே தன் வனப்பின் பெருக்கில் மிதந்து சென்றாள். மதுவின் நுரை பொங்கிவழிவதுபோல, புது இளமையும் நூதனமான செவ்வியும் அவளுடைய அங்கங் களில் துளும்பின. அவள் உடையில், நகைகளில், அசைவில், முகவளைவில், காலடி வைக்கும் அழகிய சந்தத்தில், பாத

ஸரங்களின் ஒலியில், மெல்லிய சிரிப்பில், வெட்டென்ற மொழியில், பளபளக்கும் கண் விழியில் அந்த இளமை பொங்கி வழிந்தது.

இளமையின் இந்த இன்பத்தேறல் தன் அங்கங்களில் ஊறுவதைப் பார்த்துக் கிரிபாலாவே சொக்கி நின்றாள். ஒரு மெல்லிய வர்ணச் சேலையை உடுத்து, மாடியில் காரண மின்றி உலாவிக்கொண் டிருப்பாள். உள்ளத்தில் ஒலித்திடும் புலனுக்கு எட்டாத ஓர் இசையின் தாளக்கட்டுக்கு அவள் தேக உறுப்புகள் களிநடம் புரிய விரும்பின. தன் அங்கங்களைப் பல பாணிகளில் தூக்குவதிலும், தாழ்த்துவதிலும், வளைப்பதிலும் ஒரு தனி ஆனந்தம் அவளுக்கு. அழகின் பல அலைகள் எழும்பி உடலில் செல்லும் ரத்தத்தின் அமுதூறலை அநுபவிப்பதில் அவளுக்கு ஓர் இன்பம். சட்டென்று செடியிலிருந்து ஒரு தளிரைக் கிள்ளி, இடது கையை உயரத் தூக்கி அதைக் காற்றில் பறக்க விடுவாள்; அப்போது அவளுடைய வளையல்கள் கல்லென்று இசைக்கும்; முன்தானை நழுவி விழும். அவளுடைய மெல்லிய புஜங்களின் வளைவு, கூட்டைவிட்டு வெளிக்கிளம்பி எல்லையற்ற வானில் மேகங்களின் நாட்டை நோக்கி விரையும் பறவையெனத் தோன்றும். திடீரென்று தொட்டியிலிருந்து மண்கட்டி ஒன்றை எடுத்துக் காரண மின்றி அதை வீசி எறிவாள். விரல்களின்மேல் ஊன்றி நின்றவண்ணம், சுவரின் கண்ணுடிகள் மூலமாக வெளி உலகைச் சட்டென்று பார்வையிடுவாள். மறுபடியும் திரும்பித் தலைப்பைப் பறக்கவிட்டவாறு வருவாள். தலைப்பில் சாவிக்கொத்து 'சலுங்' என்று ஒலி செய்யும் கண்ணுடியின் எதிரே போய் உட்கார்ந்து கூந்தலை அவிழ்த்துவிட்டுக்கொண்டு, அகாலத்தில் தலைவாரிக் கொள்வாள். கூந்தலைப் பட்டுநூலால் முடிந்துகொண்டு,

கயிற்றின் நுனியை முல்லை அரும்பு போன்ற தன் பற்களால் கடித்துக்கொண்டிருப்பாள். கைகள் இரண்டையும் மேலே தூக்கிக் கூந்தலைத் தலையின்பின்னால் கெட்டியாகச் சுருட்டிச் செருகிக் கொள்வாள். இது ஆனதும் வேலை ஒன்றும் இராது. அப்போது சோம்பலுடன் மெல்லணையின்மேல் அவள் படுத்திருக்கும் காட்சி, இலைகளின் இடுக்கின் வழியாக விழும் ஒரு நிலாக்கதிர்போலவே இருக்கும்.

அவளுக்குக் குழந்தை குட்டி ஒன்றும் இல்லை. பணக்காரன் வீடு; வேலையும் ஒன்றும் இராது. தனிமையில் தனக்குத்தானே லயித்துப்போயிருப்பாள். இந்த வாழ்வு கடைசியில் அவளுக்குச் சலிப்பைத் தந்தது. கணவன் இருக்கிறான்; ஆனால் அவன் அவளுக்கு அடக்கம் இல்லை. கிரிபாலா பூரண யௌவனத்துடன் மலர்ந்திருந்தாலும் அது அவளுடைய கணவனின் கண்களில் படவில்லை.

தவிர, இளம்பிராயத்தில் கணவனின் ஆதரவு அவளுக்கு இருந்தது. அவன் அப்போது பள்ளிக்கூடத்திலிருந்து ஓடிவந்து, தூங்கும் பெரியவர்களை ஏமாற்றி மத்தியான்னம் தனிமையாகத் தன் இளம் மனைவியுடன் காதல் பேச்சுப் பேசுவான். ஒரே வீட்டில் இருந்தாலும், கடிதப் போக்குவரத்து இவர்களிடையே உண்டு. பள்ளிக்கூடத்தில் தன் அந்தரங்க நண்பர்களுக்கு அதைக் காட்டிப் பெருமை கொள்வான். அற்ப விஷயங்களுக்குக்கூடத் தானாகவே ஒரு குற்றம் கற்பித்து, ஊடல் கொள்ளும் குணம் அப்போது அவனிடம் இல்லை.

இந்தச் சமயத்தில் தன் தந்தை இறந்துபோய்விடவே கோபீநாதன் வீட்டின் சொந்தக்காரனானான். பச்சை மரத்தின் வேரைத்தான் புழு அரிக்கும். இள வயதில் கோபீநாதனுக்கு அதிகாரம் வந்துவிடவே, பல பூச்சிகள்

அவனை நாடி வாழலாயின. படிப்படியாக அவன் அந்தப்புரத்துக்குச் செல்வதே நின்றுவிட்டது. வெளி மேய்ச்சலுக்கு ஆரம்பித்தான்.

தலைவனாக இருப்பதில் ஒரு ஜோர் இருக்கிறது. மனிதர்களிடையே உயர்ந்தவனாக வாழவேண்டும் என்னும் ஆவல் கள்மோகம் போன்றது. பழைய மனிதர்களிடையேயும் சரித்திரத்திலும் இதற்கு எவ்வளவோ உதாரணம் உண்டு. தன் பெருமை பரவ வேண்டுமென்று நெப்போலியன் பித்துக்கொண்டிருக்கவில்லையா? சாதாரண மனிதனைப்பற்றிச் சொல்ல வேண்டுமா! இந்தமாதிரி ஒரு மோகத்தில் ஈடுபட்டுப் பல வீணர்களைத் தோழர்களாக ஆக்கிக்கொண்டு அவர்களுக்குத் தானே ராஜா என்று எண்ணிக்கொள்கிறான். இப்படி எத்தனையோ பேர்கள் பொருளை இழந்து, கடன்காரர்களாகிப் பல பழிகளுக்கும் ஆளாகிறார்கள்.

கோபீநாதன் இந்த மாதிரி ஒரு கூட்டத்தினரோடு சேர்ந்து தலைகால் தெரியாமல் ஆடினான். நண்பர்கள் துதிருக்குழாத்துக்கு நாளுக்கு நாள் கியாதியும் கௌரவமும் ஏற்பட்டன. அவனுடைய நண்பர்கள் எல்லோரும் மச்சான் கோபீநாதனுக்கு ஈடு யார் என்று தூக்கிவைத்து உறவாடுவார்கள். அந்தப் பெருமிதத்தில் மயங்கி மற்றச் சுக துக்கங்களையும், தன் கடமைகளையும் மறந்து கோபீநாதன் இரவு பகலாக ஒரு பாபச் சுழலில் அமிழ்ந்து கிடந்தான்.

உலகை வசியம் செய்யும் பேரெழில் வாய்ந்த கிரிபாலா, தன் அறையில், சூன்யமான படுக்கையில் தனிமையில் வாடிக்கொண்டிருந்தாள். ஆட்டிவைக்கும் கோல் தன் கையில் இருப்பதை அவள் அறிவாள். சுவரின்

கண்ணறை மூலம் தெரியும் உலகைத் தன் கண் வீச்சிலேயே கவர முடியும் என்ற நம்பிக்கை அவளுக்கு உண்டு. ஆனால் பரந்த இவ்வுலகில் ஒரு மனிதனை மட்டும் அவளால் வசம் செய்துகொள்ள முடியவில்லை.

கிரிபாலாவிடம் ஒரு குடியான வேலைக்காரி இருந்தாள். அவள் பெயர் ஸுதோ அதாவது ஸுதாமுகி. இவள் பாடுவாள், ஆடுவாள், சிலேடைக் கவிதை புனைவாள். யஜமானியின் அழகைப் பலவிதமாக வர்ணிப்பாள். அநுபவிக்கத் தெரியாதவன் கையில் பிரமன் இந்த அதிரூப வதியைக் கொடுத்தானே என்று வேதனைப்படுவாள். ஸுதோ இருந்திராவிட்டால் கிரிபாலாவுக்குப் பொழுதே போயிருக்காது. பலவிதமாகத் தன் முகப்பொலிவையும், தேகவனப்பையும், மாமைக் கவினையும் ஸுதோ புகழக் கேட்பாள். அப்போது, இன்பத்தால் மயிர்க்கூச்செடுக்கும் அவளுக்கு. வேடிக்கையாக, "அடி வம்புக்காரி, உனக்கு வேறு என்ன வேலை!" என்று மறுப்பாள். ஸுதோ தான் சொல்வதில் கொஞ்சங்கூடப் பொய்யில்லை என்று பல ஆணைகள் வைத்துச் சொல்வாள். கிரிபாலாவும் அதை எளிதில் நம்பிவிடுவாள்.

ஸுதோ கிரிபாலாவுக்குப் பாடிக் காட்டுவாள்: "அடிமை உன் செஞ்சீரடிக்கே என் ஆவணம் எழுதினேன்..."

இந்தப் பாட்டின் மூலம் கிரிபாலா செம்பஞ்சு பூசிய தன் நிகரற்ற தளிர்ப்பாதங்களின் மகிமையைக் கேட்டு மகிழ்வாள். அவள் காலடிகளில் ஏங்கியிருக்கும் அடிமைக்காரன் கற்பனைக் கண்முன் தோன்றுவான். ஆனால், பாவம்! அவள் இரு சேவடிகளின் சதங்கையொலி தனிமையான வராந்தாவில் தன் புகழைத் தானே சொல்லிப் புலம்பும்.

தானே வலிய வந்து அடிமை என்று சொல்லிக்கொள்ள ஆள்தான் இல்லை.

கோபீநாதன் லவங்கி என்ற ஒரு பெண்ணின் மயலில் சிக்கி இருந்தான்; அவள் தியேட்டரில் நடிகை. பிறர் மயங்குமாறு அரங்கில் மூர்ச்சை அடைவதில் பெயர் வாங்கியவள். மூக்கைச் சிந்திக்கொண்டு அழும் பாணியில், பெருமூச்சு வாங்க, அரைகுறையாக, 'பிராணநாதா, பிராணேசுவரா' என்று அவள் மிழற்றும்போது, மெல்லிய ஆடையின்மேல் 'வெயிஸ்ட் கோட்' அணிந்து, 'பூட்ஸ்' போட்டு 'ஸாக்ஸ்' பூண்ட ஜனங்கள், 'எக்ஸலன்ட், எக்ஸலன்ட்,' 'சபாஷ், சபாஷ்,' என்று அலறுவார்கள்.

லவங்கியின் வியப்பூட்டும் நடிப்புத் திறனைப்பற்றித் தன் புருஷன் சொல்லக் கேட்டிருக்கிறாள் கிரிபாலா. அப்போது அவன் முற்றும் அவளைத் துறந்துவிடவில்லை. அப்போதெல்லாம் தன் கணவன் மீது அவள் அவநம்பிக்கை கொள்ளாமல் இருந்தாலும், மனத்துக்குள் மட்டும் ஒரு வித வெறுப்பு இருந்து வந்தது. வேறு ஒரு பெண்ணிடம் மனத்தைக் கவரும் சக்தி இருக்கிறதென்றால் அதை எவ்வாறு பொறுத்துக்கொள்வார்கள் பெண்கள்? பொறாமை ஒரு பக்கம், ஆவல் ஒரு பக்கம், இரண்டும் தூண்டத் தன்னையும் தியேட்டருக்கு அழைத்துச் செல்ல வேண்டினாள்; ஆனால் கோபீநாதன் இசையவில்லை.

கடைசியில் ஒரு நாள் ஸுதோவின் கையில் ஒரு ரூபாய் கொடுத்து அவளைத் தியேட்டருக்கு அனுப்பினாள். ஸுதோ திரும்பி வந்து, "ராம! ராம! என்ன கோரம்! என்னமோ அழகுன்னு பார்த்தேன்! காரி உமியணும் இவர்கள் மூஞ்சியில்! எப்படித்தான் இந்தப் புருஷர்களும் அவர்கள் முகத்தைப் பார்த்து மயங்குகிறார்களோ!" என்று

முகத்தைச் சுளித்துக்கொண்டு சொன்னுள். இதைக் கேட்கக் கிரிபாலாவுக்குக் கொஞ்சம் குளிர்ச்சியாக இருந்தது.

ஆனல் கணவனின் தொடர்பு இற்றுப் போனதும் அவளுக்கு அவநம்பிக்கை மூண்டது. ஸுதோவின் வார்த்தைகளை நம்பாதபோது, அவள் கிரிபாலாவின் கால்களைத் தொட்டுச் சொன்னுள்; "கொள்ளிக்கட்டைக்குத் துணி சுற்றினல் எப்படி இருக்கும்? அவ்வளவு விகாரம்! போங்களேன்!" தன் அழகுக்கு உள்ள ஒரு வசிய சக்தியைக் கிரிபாலா உணரவில்லை. தன் பிணக்கில் தானே பொரிந்து போனதுதான் பாக்கி.

கடைசியில் ஒரு நாள் சாயங்காலம், ஸுதோவை அழைத்துக்கொண்டு யாருக்கும் தெரியாமல் தியேட்டருக்குச் சென்ருள். கூடாதென்று தடை செய்தால் அதைச் செய்யத்தான் தோன்றும். அவள் இருதயத்துள் ஒரு லேசான நடுக்கம் மூண்டது. அந்த வேகத்தில், தீபாலங்காரமும், ஜனங்கள் நெருக்கமும், ஸங்கீத கோஷங்களும், அழகிய திரைகளும் உடைய அந்த ஆடரங்கு இருமடங்கு அழகுள்ளதாக அவள் கண்முன் தோன்றியது. சுவர் சூழ்ந்த அவளுடைய தனிமையான அந்தப்புர வாழ்வை விட்டு, விழா நிரம்பிய புதிய உலகுக்கு வந்தது கனவோ என்று அவள் மருளும்படியாக இருந்தது.

அன்று 'மான பங்கம்' என்ற நாடகம் நடந்து கொண்டிருந்தது. ஆரம்பிக்கும் மணியும் அடித்தாகி விட்டது. வாத்தியகோஷமும் அடங்கியது. ஜனங்களின் கூச்சலும் ஓய்ந்தது. மேடைக்கு எதிரே இருந்த விளக்கு வரிசைகள் பின்னும் ஒளியுடன் விளங்கின. திரை தூக்கியாயிற்று. பின்னணி இசையுடன், அழகாக உடைகள் அணிந்த நடிகையர், கோபியர் வேஷம் தரித்து ஆடல்

புரிந்தனர். ஜனங்களின் கரகோஷங்களும் புகழுரைகளும் ஒவ்வொரு நிமிஷமும் தியேட்டரின் கூரையைக் குலுக்கின. யுவதி கிரிபாலாவின் உடலினுள் அலை நிமிஷத்துக்கு நிமிஷம் ஓடியது. இசையின் சந்தத்திலும், ஒளியிலும், அழகின் பகட்டிலும், குழுமியிருந்த ஜனங்களின் புகழ் உரைகளிலும் மயங்கிச் சமூகம், சம்சாரம் எல்லாவற்றையும் கணப்போதில் மறந்தாள். யதேச்சையாக எவரும் அழகைக் காட்டக் கூடிய இடம் இதுவல்லவா என்று எண்ணினாள்.

ஸுகேதா நடுநடுவே வந்து ரகசியமாகப் பயத்துடன், "நேரமாகிறதே, அம்மா, வந்து விடுங்கள். அவருக்குத் தெரிந்தால் அப்புறம்......" என்பாள். கிரிபாலா அதை ஒரு பொருளாக மதிக்கவில்லை. அவளுக்குப் பயம் தெளிந்து விட்டது.

நாடகம் முக்கால்வாசி நடந்தாகி விட்டது. ராதை ஊடலில் வெற்றி பெற்றுவிட்டாள். கண்ணனால் அவள் மனத்தின் ஆழத்தை அறிய முடியவில்லை; எவ்வளவோ கெஞ்சிக் கேட்கிறான்; காலைப் பிடித்து வேண்டுகிறான்; கண்ணீர் விட்டுப் பார்க்கிறான்! பலன் ஒன்றும் இல்லை. அப்போது கிரிபாலாவின் மார்பு விம்மியது.—தன்னையே ராதையாக எண்ணிக்கொண்டாள். 'எவ்வளவு பிகு பார் எனக்கு!' என்று தன்னைப்பற்றி எண்ணிக்கொண்டு மகிழ்ச்சி அடைந்தாள். 'கணவன் ஒதுக்கிய பெண் நாம்' என்ற எண்ணத்தையும் மறந்தாள். இப்படித் தன் கணவனைக் கடுமையாக அழவைக்கும் சக்தி தனக்கும் உண்டென்று நம்பினாள். அழகின் கீர்த்தியை இதுவரையில் பிறர் புகழக் கேட்டிருக்கிறாள். அன்று பிரகாசமான வெளிச்சத்திலும் கீத வாத்தியங்களின் இன்னிசையிலும் அந்த நாடக மேடையின் அலங்காரத்தின் நடுவிலும் அதைத்

தெளிவாகப் பார்த்தாள். அந்த மயக்கத்தில் அவள் மூளை குழம்பிக் கிடந்தது.

திரை விழுந்தது; கியாஸ் விளக்குகளின் ஒளி மங்கியது. ஜனங்கள் கலைய ஆரம்பித்தனர். மந்திரத்தால் கட்டுண்டவள் போல் உட்கார்ந்திருந்தாள் கிரிபாலா. வீட்டுக்குச் செல்ல வேண்டும் என்ற எண்ணமே அவளுக்கு இல்லை. 'நாடகம் முடியவில்லை; திரை மீண்டும் எழும்' என்றுதான் நினைத்தாள். அவள் வரைக்கும் ராதையிடம் கண்ணன் தோல்வி யுறுவதைத் தவிர வேறு விஷயமே இல்லை. ஸுதோ, "என்னம்மா இது! இதோ விளக்குகளை எல்லாம் அணைத்துவிட்டார்களே!" என்றாள்.

நள்ளிரவில் கிரிபாலா தன் அறைக்குள் நுழைந்தாள். ஒரு மூலையில் விளக்கு மினுக் மினுக்கென்று எரிந்து கொண்டிருந்தது. வீட்டில் வேறு ஆட்களே இல்லை. ஒரு சந்தடியும் இல்லை. அறையின் மூலையில் படுக்கையின்மேல் பழைய கொசு வலை ஒன்று காற்றில் மெல்ல ஊதி அசைந்தது. நித்தியம் தான் கழிக்கும் வாழ்வு சுவையற்றதாகவும் அழகற்றதாகவும் தோன்றியது கிரிபாலாவுக்கு. அழகும் ஒளியும் இழைந்த அந்த அரங்கு எங்கே! அந்த இடத்தில் அல்லவா தனக்குள்ள மகிமை விரிந்து மணக்கும்! அந்த இடத்தில் அவள் இருளில் மட்கும் சாதாரணப் பெண் அல்ல; கணவன் ஒதுக்கிய வாய் செத்த மனையாளல்ல.

அதுமுதல் அவள் வாரந்தோறும் தியேட்டருக்குச் செல்ல ஆரம்பித்தாள். நாளடைவில் அவள் முதலில் கொண்ட மயக்கம் குறையக் குறைய, நடிகைகளின் உண்மையான ரூபம், அவர்கள் செய்துகொள்ளும் செயற்கை அழகு யாவும் அவளுக்கு ஒவ்வொன்றாகப் புலனாயின.

இருந்தும் அந்த மோகம்மட்டும் தெளியவில்லை. போர் முரசைக் கேட்ட வீரனின் உள்ளம் துள்ளி எழும். அதே போல அரங்கின் திரை விலகும்போது அவள் உள்ளத்தில் ஒரு துடிப்பு உண்டாகும். பொற் கோலங்கள் வரைந்த உயர்ந்த மேடை, வர்ணத் திரைகள், காவியத்தின் மணம், இசையின் இந்திரஜாலம், எண்ணற்ற கண்கள் பாயும் ஓர் இலக்கு, ரகசியம் குடிகொண்ட திரையின் உட்புறம், பளிச்சென்று விளங்கும் தீப மாலைகள், இவை ஒருங்கு சேர்ந்த இடத்தைத் தவிர, யதேச்சையாக வாழ விரும்பும் மூவுலகையும் வென்று வரக்கூடிய பேரெழில் வாய்ந்த ஓர் அரசிக்கு உகந்த அரியணை வேறு எங்குள்ளது ?

நாடகம் பார்க்கக் கூடியிருந்த ஜனங்களிடையே தன் கணவனைக் கண்ட அன்று, அவன் ஒரு நடியின் அபிநயத்தில் சொக்கிப் போய்ப் பித்தன்போல் கூச்சலிட்டான். கிரிபாலாவுக்கு அவன்மேல் ஓர் அசூயை ஏற்பட்டது. கோபத்தில் தீய்ந்து, என்றைக்காவது தன் அழகில் மயங்கி, சிறகு பொசுங்கிய விட்டில்போல் காலடியில் வந்து விழுவான். அன்று தன் கால்களைத் தூர இழுத்துக் கொண்டு அவன் வேண்டுகோளை அலக்ஷியம் செய்ய வேண்டும். ரோஷத்துடன் அவனை விட்டு வந்தால்தான் வீணாகச் செல்லும் தன் அழகு, இளமை எல்லாம் பயன் பெறும் என்று தீர்மானம் செய்துகொண்டாள்.

ஆனால் அந்த நன்னாள் வந்தால்தானே! இப்போது கோபிநாதனின் தரிசனம் கிடைப்பதே அரிதாகிவிட்டது. புழுதியைக் கிளப்பும் புயல்காற்றுப்போல் தன் கூட்டாளிகளுடன் எங்கே தாறுமாறாகத் திரிகிறானோ; யாருக்குத் தெரியும் ?

சித்திராபூர்ணிமையன்று இரிபாலா மஞ்சள் வர்ண மேலாடையைக் காற்றில் பறக்க விட்டவண்ணம் மாடியில் உலாவிக்கொண்டிருந்தாள். புருஷன் வீட்டுக்கு வரா விட்டாலும் அவள் விதவிதமான நகைகளும் சேலைகளும் அணிந்து சிங்காரித்துக் கொள்வாள். வயிரமும் முத்தும் பதித்த நகைகள் அவளுடைய அங்கங்களுக்கு ஒரு பொலிவைத் தரும். கலீர் கலீரெனச் சிலம்பொலிக்க, நாற்புறமும் ஓர் அலையை எழுப்பியவாறு செல்வாள். இன்று அவள் கையில் கடயம், கழுத்தில் முத்தாவளி; இடது கையின் சுண்டுவிரலில் ஒரு நீல மோதிரம். ஸுஜாதா அவள் காலருகில் உட்கார்ந்து நடுநடுவே அவளுடைய செவேலென்ற கொழுவிய மலர்ப் பாதங்களை வருடிக் கொண்டிருந்தாள்; உள்ளூறச் சந்தோஷம் பொங்க, "நான் மட்டும் புருஷனாக இருந்தால் இந்தக் கால்கள் இரண்டையும் மார்பில் அணைத்துக்கொண்டு உயிர் விடுவேனே!" என்றாள். கிரிபாலா கர்வச் சிரிப்புடன், "மார்பில் அணைத்துக்கொள்ள லேசில் விடுவேனா? சாக அடிப்பேன். இப்படியா நீட்டிக்கொண்டு இருப்பேன்; உளறாதே; அந்தப் பாட்டைப் பாடடி" என்றாள்.

நிலாப் பரந்த அந்த முற்றத்தில் உட்கார்ந்து ஸுஜாதா பாடலானாள்:

"உன் திருவடிக்கே அடிமை எழுதுவன் ஆவணமே
அதற்குச் சாட்சி முழு பிருந்தாவனமே!"

அப்போது ராத்திரி மணி பத்திருக்கும். வீட்டில் எல்லாரும் சாப்பிட்டுவிட்டுத் தூங்கிவிட்டார்கள். அச்சமயம் அத்தர் பூசிக்கொண்டு, அங்கவஸ்திரத்தைப் பறக்க விட்டவாறு கோபீநாதன் திடீரென்று தோன்றினான். ஸுஜாதா நாக்கைக் கடித்துக்கொண்டு 'கோம்டா'வை முழ

நீளம் இழுத்து முகத்தை மறைத்துக்கொண்டு இரைக்க இரைக்க ஓடி மறைந்தாள்.

கிரிபாலா தான் வேண்டிய நன்னாள் அணுகியதென்று எண்ணினாள். தலை நிமிர்ந்து அவனைப் பார்க்கவில்லை. ராதையைப்போல் அவள் அசையாமல் பிணக்குடன் உட்கார்ந்திருந்தாள். மயில் தூவிக் கொண்டை கழலடிகளில் பணியவில்லை; யாரும் காபி ராகிணியில் பாடவில்லை.

"முகமதிதனை மறைத்தே இருள் செய்வதுமேனோ!" என்று இசையின் வழியே சேராத குரலில், "கொஞ்சம் சாவியைக் கொடு" என்றான் கோபிநாதன்.

இந்த மாதிரி நிலவில், வஸந்த ருதுவில், இவ்வளவு நாள் பிரிவுக்குப் பின் இதுவா காதல் உரை! கவிதைகளும், நாடகங்களும், நாவல்களும் சொல்வது எல்லாம் பொய். நாடக மேடையில்தான் காதலன் பாடிக்கொண்டே வந்து கால்களில் விழுவான்! அதைப் பார்த்து மனத்தைப் பறிகொடுத்த ஆள், வஸந்த காலத்து இரவு வேளையில் வந்து இணையில்லா அழகியான தன் மனைவியை நோக்கி, "கொஞ்சம் சாவியைக் கொடு" என்கிறான்! அதில் சுவையோ இசையோ அன்போ இனிமையோ ஒன்றும் இல்லை; அவ்வளவும் அசட்டை!

இதே சமயத்தில் உலகின் ஆதரவற்ற கவிகளின் ஆழ்ந்த பெருமூச்செனத் தென்றல் மெல்ல வீசியது; தொட்டிகளில் பூத்திருந்த குண்டு மல்லிகைகளின் மணம் மாடியெங்கும் கமழ்ந்தது. கிரிபாலாவின் குழற்கற்றை முகத்தின்மேல் விழுந்தது. வஸந்தவர்ண மேலாடை காற்றில் அப்படியும் இப்படியுமாகப் பறந்தது. தன் பிணக்கையெல்லாம் விட்டுவிட்டுக் கிரிபாலா எழுந்து நின்றாள்.

கணவனின் கையைப் பிடித்து, "சாவி தருகிறேன்; உள்ளே வாருங்கள்" என்றாள். இன்று தான் அழுது அவனை அழவைக்க வேண்டும்; தான் எண்ணியதை நிறை வேற்றிக்கொள்ள வேண்டும்; தன் பிரம்மாஸ்திரத்தை வீசி வெற்றி பெற வேண்டும் என்று தீர்மானித்தாள்.

"எனக்கு நேரமில்லை. நீ சாவி தா."

"சாவி தருகிறேன். உள்ளே இருப்பதெல்லாம் உங்களதுதான். ஆனால் இன்றிரவு நீங்கள் எங்கேயும் போகக் கூடாது."

"அதெல்லாம் முடியாது; வேலை இருக்கிறது."

"நானும் சாவி தரமாட்டேன்".

"தர மாட்டாயா? பார்க்கலாமே அதையுந்தான்" என்று கோபீநாதன் அவள் தலைப்பைப் பார்த்தான். சாவி இல்லை. உள்ளே போய்க் கண்ணாடி அலமாரியில் பார்த்தான். அங்கேயும் இல்லை; சீப்பு, கொண்டை ஊசி வைக்கும் பெட்டியை உடைத்தான். அதில் மைச்சிமிழ், குங்குமபரணி, ரிப்பன் போன்ற பல வஸ்துக்கள் இருந்தன; சாவிதான் இல்லை. படுக்கையைக் கலைத்து, மேஜையைப் புரட்டி, அலமாரியை உடைத்து, ஒரே கலவரம் செய்தான்.

கிரிபாலா வெளிப்புறம் கதவைப் பிடித்துக்கொண்டு சிலைபோல் நின்றாள். தன் ஆசை வீணாகவே கோபீநாதன், "சாவியைத் தா; இல்லாவிட்டால் என்னமாவது செய்து விடுவேன்" என்றான்.

கிரிபாலா வாய் திறக்கவில்லை. கோபி அவளைப் பிடித்துக்கொண்டு, கையிலிருந்து கடயம், முத்துமாலை, மோதிரம் எல்லாவற்றையும் பிடுங்கிக்கொண்டு அவளை அடித்து விட்டுச் சென்றான்.

வீட்டில் எல்லோரும் தூங்கிக்கொண்டிருந்தார்கள்; அக்கம் பக்கத்திலும் தெரியாது; நிலவு மகிழ்விரித்த அவ்விரவும் அவ்வாறே நிச்சப்தமாக இருந்தது. ஒரே அமைதி; உள்ளத்தில் குமுறும் வேதனை வெளிக்குக் கேட்பதாக இருந்தால், அந்த இளவேனில் இரவில் கட்டாயம் நிலவு திடீரென்று நூறு சுக்கலாக வெடித்துப் போகும்—நிச்சப்தமான இரவில் நெஞ்சைப் பிளக்கும் நிகழ்ச்சி நடப்பது சகஜந்தான்.

அன்றை இரவும் கழிந்தது. தான் அடைந்த தோல்வியை - அவமானத்தை - அவள் ஸுதோவிடங் கூடச் சொல்லவில்லை. தற்கொலை புரிந்துகொண்டு, தன் நிகர் இல்லாத அழகையும் யௌவனத்தையும் தன் கரத்தாலேயே பாழாக்கிக்கொண்டு, வஞ்சம் தீர்த்துக் கொள்வதா? அதனால் என்ன வந்துவிடப் போகிறது? உலகத்துக்கு என்ன நஷ்டம் அதனால்? வாழ்ந்து சுகம் ஒன்றுமில்லை; சாவிலும் ஆறுதல் இல்லை.

"நான் பிறந்தகம் போகிறேன்" என்றாள் கிரிபாலா; அவள் பிறந்தகம் கல்கத்தாவிலிருந்து வெகு தொலைவில். எல்லோரும் தடுத்தார்கள். ஆனால் அவள் ஒன்றையும் கேட்கவில்லை; எவரையும் கூட அழைத்துச் செல்லவில்லை. இந்தப் பக்கம் கோபீநாதனும் தன் கோஷ்டியுடன் சிங்கார ஓடத்தில் ஏறி எங்கே சென்றானோ, யாருக்கும் தெரியாது!

2

காந்தர்வ தியேட்டரில் நடக்கும் எல்லா நாடகங்களுக்கும் கோபீநாதன் போவான். மனோரமா நாடகத்தில் லவங்கி, மனோரமா வேஷம் தரிப்பாள். கோபீநாதன் தன்

கோஷ்டியுடன் முன்னால் உட்கார்ந்து உரக்கச் சபாஷ் போடுவான். மேடையின்மேல் பூங்கொத்துக்களை எறிவான். ஒரொரு நாள் அவன் பண்ணும் ஆர்ப்பாட்டம் நாடகம் பார்க்கும் மற்றவர்களுக்கு வெறுப்பைத் தரும். இருந் தாலும் தியேட்டர் மானேஜர்களுக்கு அவனைத் தடுக்கத் துணிச்சல் போதாது.

கடைசியில் கோபீநாதன் ஒரு நாள் அதிகமாகக் குடித்துவிட்டு, கிரீன் ரூமுக்குள் நுழைந்து கலவரம் செய்தான். தன்னை அவமதித்ததாகச் சாக்கிட்டு, ஒரு நடிகையை நன்றாகப் புடைத்துவிட்டான். அவள் அழுகை யும் கோபீநாதனின் திட்டுக்களும் ஒன்று சேர்ந்து நாடகக் கொட்டகையை உலுக்கிவிட்டன.

அன்று தியேட்டர் சொந்தக்காரர்கள் பொறுக்க முடியாமல் போலீஸின் உதவிகொண்டு கோபீநாதனை வெளியேற்றினார்கள்.

இந்த அவமானத்துக்குப் பழி வாங்க வேண்டுமென்று கோபீநாதன் கங்கணம் கட்டிக்கொண்டான். தியேட்டர்க் காரர்கள் பூஜைக்கு ஒரு மாதம் முன்னாலிருந்து, 'புது நாடகம்: மனோரமா' என்று பலமாக விளம்பரம் செய் திருந்தார்கள். கல்கத்தாவில் ஒவ்வொரு சந்திலும் ஒவ்வொரு மூலையிலும் இந்த விளம்பரமே!

இந்தச் சமயத்தில் கோபீநாதன் முக்கிய நடிகையாகிய லவங்கியை அழைத்துக்கொண்டு ஓடத்திலேறி எங்கேயோ போய்விட்டான்; அவன் அடிச்சுவடே தெரியவில்லை.

தியேட்டர்க்காரர்கள் ஒன்றும் தோன்றாமல் விழித் தார்கள். சில நாட்கள் லவங்கிக்காகக் காத்திருந்தபின் புதிய நடிகை ஒருத்தியை மனோரமாவாக நடிக்கப் பழக்கு வித்தனர்; அதனால் சற்றுத் தாமதம் ஆயிற்று.

ஆனால் ஒன்றும் குறைந்து போய்விடவில்லை. தியேட்டரில் ஜனங்களுக்கு இடம் கிடைக்கவில்லை. நூற்றுக் கணக்கானவர்கள் வீடு திரும்பினர். பத்திரிகைகளிலும் புகழுரைகள் வெளியாயின.

வெளியூரிலிருந்த கோபீநாதனுக்கும் அந்தப் புகழுரைகள் எட்டின. அவனுக்கு இருப்புக் கொள்ளவில்லை. பகையும் ஆவலும் மூண்டன; அவன் நாடகம் பார்க்க விரைந்தான்.

முதல் முறை திரை தூக்கியபோது மனோரமா எளிய உடையில் வேலைக்காரிபோல் தன் புக்ககத்தில் இருக்கிறாள். அடக்க ஒடுக்கத்துடன் வேலை செய்கிறாள்; பேசுவதில்லை; அவள் முகத்தையும் சரியாகப் பார்க்க முடியவில்லை.

நாடகத்தின் கடைசியில், மனோரமாவைப் பிறந்தகம் அனுப்பிவிட்டுப் பொருளாசை பிடித்த அவள் கணவன், லக்ஷாதிபதி ஒருவனின் ஒரே மகளை விவாகம் செய்து கொள்கிறான். கல்யாணம் ஆனபின் பள்ளியறையில் கணவன் அவளை உற்று நோக்கினான்; அவள் அதே மனோரமாதான். ஆனால் எளிய உடையில் இல்லை; இன்று அவள் அரசகுமாரிபோல் இருந்தாள் — இணையில்லாத அழகிய ஆபரணங்கள் புனைந்து, செல்வம் நிறைந்து ஜகஜ் ஜோதியாகத் திகழ்கிறாள். குழந்தைப் பருவத்தில், பணக்காரரான தந்தையின் வீட்டிலிருந்து களவாடப்பட்டு ஏழையின் வீட்டில் வளர்ந்து பெரியவளானவள். வெகு நாட்கள் கழிந்தபின் அவள் தகப்பனார் தேடி வீட்டுக்கு அழைத்துப் போய் மறுமுறை தடபுடலாக அவள் கணவனுக்கே விவாகம் செய்துகொடுக்கிறார்.

பின்பு பள்ளியறையில் புலவிக்காட்சி ஆரம்பமாகிறது. இதற்குள் ஜனங்களிடையே ஒரு குழப்பம் ஏற்பட்டது.

மனோரமா வேலைக்காரியாகக் கந்தல் உடுத்து, முக்காடு போட்டுக்கொண்டிருந்தவரையில் கோபீநாதன் அடங்கி இருந்தான். ஆனால் பொன் நகைகள் பளபளவென்று மின்ன, பட்டாடை அணிந்து, முக்காட்டை விலக்கிக் கொண்டு, பள்ளியறையில் நின்றபோது, அவள் சொல்லொணாத பெருமையுடன் கழுத்தை வளைத்து ஜனங்களையும், முக்கியமாக எதிரே உட்கார்ந்திருந்த கோபீநாதனையும் சுட்டுவிடுவதுபோல் பார்த்தாள். ஜனங்கள் எல்லோரும் மதிமயங்கிக் கரகோஷம் செய்ய லானார்கள்; தியேட்டரே அதிர்ந்தது. அவ்வொலி தாளா மல் கோபீநாதன் சட்டென்று எழுந்து நின்று, "கிரிபாலா! கிரிபாலா!" என்று கூவியவாறு மேடையை நோக்கி விரைந்தான். ஆனால் வாத்திய கோஷ்டியினர் அவனைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டனர்.

சுவாரசியமான கட்டத்தில் தங்களுக்குத் தடங்கல் ஏற்படவே, ஜனங்கள் வங்காளியிலும் இங்கிலீஷிலும் "தள்ளையா வெளியே! துரத்து வெளியே!" என்று கூச்சலிட்டனர்.

கோபீநாதன் பித்தன்போல், "அவளைக் கொன்று விட்டு மறு வேலை பார்க்கிறேன்" என்று கூவினான்.

போலீசார் வந்து அவனை இழுத்துக்கொண்டு சென்றனர். கல்கத்தா நகரத்து ஜனங்கள் கண்ணாரக் கிரிபாலாவின் சிறந்த நடிப்பைக் கண்டனர். கோபீநாதன் ஒருவனுக்குத்தான் அங்கே இடம் இல்லை.

# தாலியா

## முன்னுரை

தோல்வியுற்ற ஷாஷுஜா ஔரங்கஜேபுக்குப் பயந்து ஓடி அரக்கான் ராஜ்யத்தில் அடைக்கலம் புகுந்தான். கூட அவனுடைய மூன்று அழகிய பெண்களும் இருந்தனர். அரக்கான் மன்னன் அவர்களைத் தன் பிள்ளைகளுக்கு விவாகம் செய்துவைக்க விரும்பினான். அது ஷாஷுஜாவுக்குப் பிடிக்கவில்லை. அரக்கான் அரசன் வஞ்சகமாக அவர்களை ஒரு படகில் ஏற்றி நட்டாற்றில் மூழ்கடிக்கச் செய்தான். அந்த ஆபத்தில் சிறு பெண் ஆமினாவைத் தானே ஆற்றில் வீசி எறிந்தான் ஷா ஷுஜா. ஷாஷுஜாவின் நம்பிக்கையுள்ள வேலைக்காரனான ரஹமத் ஆலி ஜுலீகாவை ஏந்தி நீந்தி ஓடினான். பெரியவள் தற்கொலை செய்துகொண்டாள், ஷா ஷுஜா கடைசி வரையில் போர் செய்து வீர சுவர்க்கம் புகுந்தான்.

ஆமினாவை வெள்ளம் அடித்துச் சென்றது. அவள் தெய்வாதீனமாக ஒரு செம்படவனின் வலையில் சிக்கி அவனிடம் வளர்ந்து பெரியவளானாள்.

இதற்குள் கிழ அரசன் காலமாகவே இளவரசன் பட்டம் ஏற்றான்,

### 1

ஒரு நாள் காலையில் செம்படவன் வந்து ஆமினாவை அதட்டி, "தின்னி!" என்றான். கிழவன் அரக்கான்

பாஷையில் ஆமினுவுக்குத் தின்னி என்று பெயர் சூட்டி யிருந்தான். "தின்னி! இன்னி காலேலே ஒனுக்கு என்ன வந்திடிச்சு! வேலே கீலே செய்யறதாக் காணமே! புது வலேயிலே பிசினெத் தடவலே. என் படவு......"

ஆமினு கிழவனருகில் வந்து செல்லமாக, "தாத்தா. இன்னிக்கு என் அக்கா வந்திருக்கா. நான் இன்னிக்கு ஒரு வேலேயும் செய்யமாட்டேன்" என்ருள்.

"உங்கக்காவா! யாருடீ அது?"

ஜூலீகா எங்கிருந்தோ வந்து, "நான்தான்" என்ருள்.

கிழவன் வாயடைந்து நின்ருன். ஜூலீகாவின் அருகில் போய் அவள் முகத்தை உற்று நோக்கினுன்.

கப்பென்று, "உனக்கு ஏதாச்சியும் வேலே கீலே தெரியுமா?" என்று கேட்டான்.

ஆமினு, "தாத்தா, அக்காவுக்குப் பதிலாக நான் வேலே செய்கிறேன். அக்காவுக்கு வேலே செய்யத் தெரியாது" என்ருள்.

சற்று நேரம் கம்மென்று இருந்துவிட்டுக் கிழவன், "ஆமாம், எங்கே இருப்பே நீ?" என்ருன்.

"ஆமினுவண்டைதான்" என்ருள் ஜூலீகா.

கிழவன், 'இதேதடா தொல்லே' என்று நினேத்தான். "என்னத்தைச் சாப்பிடுவே?"

"அதற்கும் வழி இருக்கிறது" என்று ஜூலீகா கிழவனின் எதிரே ஒரு பொற்காசை வீசி எறிந்தாள்.

ஆமினு அதை எடுத்துக் கிழவன் கையில் வைத்து மெதுவாக, "தாத்தா, நீ வேலேக்குப் போ. நாழியாகிறது. ஒண்ணும் பேசாதே" என்ருள்.

ஜூலீகா மாறு வேஷத்தில் எங்கேயெல்லாமோ அலேந்துவிட்டுக் கடைசியில் ஆமினுவைச் செம்படவனின்

குடிசையில் கண்டுபிடித்தாள். அதையெல்லாம் சொல்லப் போனால் இன்னொரு கதை யாகிவிடும். அவளைக் காப்பாற்றிய ரஹமத் ஆலி வேறு பெயருடன் அரக்கான் ராஜசபையில் வேலை பார்த்துக்கொண் டிருந்தான்.

## 2

சிற்றாறு ஒன்று ஓடிக்கொண் டிருந்தது. கோடை ஆரம்பம். காலையின் குளுமையான காற்றில், புன்னை மரங்களின் பொன்னிற மலர்கள் விழுந்துகொண் டிருந்தன.

மரத்தடியில் உட்கார்ந்து ஜூலீகா ஆமினாவிடம், "கடவுள் நம் இருவரையும் உயிருடன் வைத்திருப்பது நம் தந்தையின் சாவுக்குப் பழி வாங்கவேதான்; வேறு ஒரு காரணமும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை" என்றாள்.

ஆற்றின் அந்தக் கரையில் வெகு தொலைவில் மங்கலாகத் தெரிந்த மர வரிசையைப் பார்த்தவாறு ஆமினா, "அக்கா, அதையெல்லாம் என்னிடம் சொல்லாதே. இந்த இடம் எனக்குப் பிடித்திருக்கிறது. சாக வேண்டுமானால் ஆடவர்களெல்லாம் சண்டை போட்டுக்கொண்டு சாகட்டுமே! எனக்கு இங்கே ஒரு கவலையும் இல்லை" என்றாள்.

"சீ, சீ, ஷா வம்சத்துப் பெண்ணா நீ! தில்லி சிம்மாசனம் எங்கே, இந்தச் செம்படவன் குடிசை எங்கே!" என்றாள் ஜூலீகா.

ஆமினா சிரித்து, "அக்கா, தில்லி சிம்மாசனத்தை விட இந்தச் செம்படவக் குடிசையும் புன்னையின் நிழலுமே எனக்கு உயர்வாகத் தோன்றுகின்றன. தில்லி சிம்மாசனம் ஒரு பெண்ணுக்காக ஏன் அழப்போகிறது?" என்றாள்.

ஜுலீகா வேறு நினைவாக ஆமினாவைப் பார்த்து, "உன் பேரில் என்ன தவறு? அப்போது நீ சின்னவள். ஆனால் ஒரு தடவை யோசித்து பார்: அப்பா உன்னைத் தான் ரொம்ப நேசித்தார். அதனால்தான் தம் கையாலேயே உன்னை ஆற்றில் வீசி எறிந்தார். தந்தை கொடுத்த மரணத்தைவிட இந்தக் குடிசை வாழ்வு இன்பத்தைத் தரும் என்கிறாய். பழிக்குப் பழி வாங்கினால்தான் நம்முடைய வாழ்வு ஸபலமாகும்" என்றாள்.

தொலைவில் நோக்கியவாறு ஆமினா மௌனமாக நின்றாள். ஆனால் ஜுலீகா என்ன சொன்னாலும், அந்தக் குளுமையான காற்று, மர நிழல், மலரும் புது யௌவனம் எல்லாம் சேர்ந்து அவளை ஓர் இன்பலோகத்தில் ஆழ்த்தியிருந்தன.

சற்று நேரம் கழித்துப் பெருமூச்செறிந்து, "அக்கா, நீ இங்கேயே இரு; வீட்டு வேலைகள் பாக்கியிருக்கின்றன. நான் சமைத்துப் போடாவிட்டால் கிழவன் பட்டினிதான் கிடக்க வேண்டும்" என்றாள்.

3

ஜுலீகா ஆமினாவின் நிலையை எண்ணித் துயருற்றவளாக மௌனமாக உட்கார்ந்திருந்தாள். அதே சமயத்தில் தொப்பென்று யாரோ குதிக்கும் சப்தம் கேட்டது. பின்னாலிருந்து எவனோ ஜுலீகாவின் கண்களை மூடினான்.

ஜுலீகா பரபரப்பாக, "யார் அது?" என்றாள்.

குரலைக் கேட்டதும் இளைஞன் கையை எடுத்துவிட்டு யுவதியின் எதிரே வந்து நின்றான். ஜுலீகாவைப் பார்த்துத் தெளிந்த முகத்துடன், "நீ தின்னி இல்லையா?" என்றான். ஆமினா அவனிடம் தான் தின்னி என்று

சொல்லியிருந்தாள். ஆனால் அந்த இளைஞனின் சூக்ஷம புத்திக்கு அவளுடைய சாமர்த்தியம் வெளிச்சமாகி விட்டது.

ஜூலிகா ஆடையைச் சரிப்படுத்திக்கொண்டு சீறி எழுந்து கண்கள் நெருப்பைக் கக்க விழித்தாள். "நீ யார்?" என்றாள்.

யுவகன், "உனக்குத் தெரியலையா; தின்னிக்குத் தெரியும். அவள் எங்கே?" என்றான்.

தின்னி கலவரத்தைக் கேட்டு வெளியே வந்தாள். ஜூலிகாவின் கோபத்தையும், இளைஞன் அசடு வழிய நிற்பதையும் கண்டு உரக்கச் சிரித்தாள்.

"அக்கா, அவன் சொல்றதை மனசில் போட்டுக் கொள்ளாதே. அவன் மனுஷனா என்ன! காட்டுமிராண்டி. கொஞ்சம் சும்மா இரு. நான் அடக்குகிறேன் அவனை. தாலியா, என்ன செய்தாய்?" என்று கேட்டாள் ஆமினா.

இளைஞன் உடனே, "கண்களை மூடினேன். தின்னி என்று பார்த்தேன். ஆனால் அவள் தின்னி இல்லை" என்றான்.

ஆமினா அடங்காத கோபத்துடன், "முட்டாள்! எத்தனை பெரிய பொய்! நீ என்னிக்குத் தின்னியின் கண்களை மூடியிருக்கிறாய்? என்ன துணிச்சல் உனக்கு!" என்றாள்.

இளைஞன், "கண்ணை மூடத் துணிச்சல் எதுக்கு? அதுவும் முன்னாலேயே பழக்கமாயிருந்தால் அவசியமே இல்லை. ஆனால் இன்னிக்கு நிச்சயமாகப் பயந்தே போயிட்டேன், தின்னி!" என்றதும் அவன் ஜூலிகாவைச் சுட்டிக் காட்டி மெல்ல நகைத்தான்.

"சே, நீ காட்டுமிராண்டியேதான். பாதுஷா வீட்டுப் பெண்ணின் எதிரே நிற்க உனக்கு யோக்கியதையே இல்லை. சரியான பாடம் போதிக்கவேண்டும். பார் : இப்படி ஸலாம் செய்" என்றவாறு ஆமினு இளமை அரும்பிய தன் உடற்கொடியை அழகிய பாணியில் வளைத்து ஜுலிகாவை வணங்கினுள். இளைஞனும் வெகு கஷ்டத்துடன் அரை குறையாக அவள் செய்ததுபோலவே செய்தான்.

"இப்படி மூன்றடி பின்னுல் வா" என்ருள்; இளைஞன் பின்னுல் சென்ருன்.

"திரும்பி ஸலாம் செய்" என்ருள். இளைஞன் அப்படியே செய்தான்.

இப்படியே பின்னுல் சென்று வணங்கச் சொல்லி ஆமினு அவனைக் குடிசையின் வாசல்வரைக்கும் அழைத்துச் சென்ருள்.

"உள்ளே போ" என்ருள். இளைஞன் உள்ளே நுழைந்தான். வெளியே கதவைத் தாழிட்டுக்கொண்டு ஆமினு, "உள்ளே கொஞ்சம் வீட்டு வேலையைப் பார்த்துக் கொள்; நெருப்பு அணைந்துவிடப் போகிறது" என்று சொல்லிவிட்டுத் தமக்கையிடம் வந்தாள்.

"கோபித்துக்கொள்ளாதே, அக்கா! இங்கே இருக்கிற ஜனங்களே இப்படித்தான். எனக்கு ஒரே எரிச்சலாக வருகிறது."

ஆனுல் ஆமினுவின் முகத்திலோ பேச்சிலோ எரிச்சலின் அடையாளமே இல்லை. அவள் அங்கே இருந்த ஜனங்களின் சார்பாகவே பேசியதுபோல் இருந்தது.

"நிஜந்தான், ஆமினு. உன் நடத்தை ஆச்சரியமாக இருக்கிறது. வெளியான் ஒருவன் உன்னைத் தொடுவது

என்றால் அது எவ்வளவு துணிச்சலான காரியம்!" என்றாள் ஜூலிகா கோபத்துடன்.

ஆமினாவும் அவளுடன் ஒத்து ஊதிக்கொண்டே, "பாரேன், அக்கா! ஒரு பாதுஷாவோ நவாபின் பிள்ளையோ இந்த மாதிரி செய்திருந்தால் அவமானம் செய்து விரட்டியிருப்பேன்" என்றாள்.

ஜூலிகா உள்ளுக்குள் பொங்கிய சிரிப்பை அடக்க முடியாமல் சிரித்துக்கொண்டே, "நிச்சயமாகச் சொல், ஆமினா. உனக்கு உலகம் ரொம்பப் பிடிக்கிறது என்றாயே; இந்த ஆளுக்காகத்தானே?" என்றாள்.

"நிச்சயமாகத்தான், அக்கா. அவன் எனக்கு எவ்வளவோ உதவி செய்கிறான். பழம், பூ எல்லாம் பறித்துத் தருகிறான். வேட்டையாடி மாமிசம் கொண்டுவருகிறான். ஏதாவது வேலை செய்யச் சொன்னால் உடனே செய்கிறான். அவனை அடக்க வேண்டுமென்று எத்தனையோ தடவை நினைப்பேன். ஆனால் எல்லாம் வீண். கண் சிவக்கக் கோபத்துடன், 'தாலியா, உன்னைக் கண்டால் எனக்குப் பிடிக்கவே இல்லை' என்பேன். அவன் என்னை முறுவலுடன் பார்த்துக்கொண்டிருப்பான். இவர்கள் தேசத்தில் ஏளனமெல்லாம் இப்படித்தான். இரண்டு அடி கொடுத்தால் சந்தோஷமாகக் குதிப்பான். அதையும் செய்து பார்த்து விட்டேன். இதோ பார்; உள்ளே பூட்டிவிட்டேனா! எவ்வளவு ஆனந்தமாக நெருப்பை ஊதிக்கொண்டிருப்பான் தெரியுமா? கதவைத் திறந்து பாரேன். இவனை என்ன செய்கிறது சொல்? அக்கா! என்னால் ஒன்றுமே முடியவில்லை" என்றாள் ஆமினா.

"நான் வேண்டுமானால் பார்க்கிறேன்."

ஆமினு சிரித்து வேண்டும் தோரணையில், "அக்கா, உன் காலில் விழுகிறேன். அவனை ஒன்றும் சொல்லாதே" என்றாள்.

அவள் சொன்னவிதம் எவ்வாறு இருந்ததென்றால், 'நான் செல்வமாக வளர்க்கும் மானைப் போன்றவன் அந்த இளைஞன்; இன்னும் அவனுடைய காட்டுச்சுபாவம் போக வில்லை. புது ஆள் யாராவது பார்த்துவிட்டால் மருண்டு போய் ஒளிந்துகொள்வான், பாவம்' என்பதுபோல் தொனித்தது.

அதே சமயம் கிழவன் வந்து, "இன்னிக்குத் தாலியா வரலையா, தின்னி?" என்று கேட்டான்.

"வந்தானே."

"எங்கே போனான்?"

"ரொம்பத் தொந்தரவு பண்ணினான்; இதோ குடிசையிலே அடச்சு வச்சிருக்கேன்."

கிழவன் கவலையுற்றவனாக, "ஏதாவது சொன்னால் பொறுத்துக்கோம்மா. சின்ன வயசிலே எல்லாம் அப்படித் தான் அடங்காப் பிடாரியா இருப்பாங்க. ரொம்ப மிரட்டாதே. நேத்தி எங்கிட்ட ஒரு 'தளு' (பொன் நாணயம்) கொடுத்து மூணு மீனு வாங்கிக்கிட்டான்" என்றான்.

"நீ ஒண்ணும் கவலைப்படாதே, தாத்தா. இன்னிக்கு அவன்கிட்டேயிருந்து ரெண்டு 'தளு' வாங்கித் தரேன். ஒரு மீன் கூடத் தர வாணாம்."

கிழவன் தான் வளர்த்த பெண்ணிடம் சிறு வயதிலேயே இவ்வளவு திறமையும் சிக்கனமும் இருப்பதைக் கண்டு திருப்தியுடன் அவள் தலையை அன்புடன் தடவிக் கொடுத்தான்.

4

தாலியா வந்து போவதில் ஜூலிகாவுக்கு ஆக்ஷேபம் வரவரக் குறைந்தது. யோசித்துப் பார்த்தால் இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றும் இல்லை. காரணம்: ஆற்றுக்கு ஒரு பக்கம் நீரோட்டமும் மற்றொரு பக்கம் கரையும் இருப்பதுபோல், பெண்களிடம் வரம்பற்ற ஆர்வமும் நிந்தனை வருமோ என்ற அச்சமும் கலந்தே இருக்கும். ஆனால் நாகரிக சமூகத்துக்குப் புறம்பான அரக்கானின் கோடியில் இந்தப் பயம் இல்லை.

இந்த இடத்தில் பருவகாலங்களில் மரங்கள் எல்லாம் புஷ்பிக்கின்றன. எதிரே தெரியும் நீலா நதி மழைநாளில் பெருகியும், சரத்காலத்தில் தெளிந்தும், கோடையில் குறுகியும் ஓடும். பறவைகளின் தீங்குரலைத் தவிர வேறு வித வம்பளப்பு இல்லை. நடுநடுவே எதிர்க்கரையில் இருக்கும் கிராமங்களில் புகுந்து வரும் தென்றல் ஜனங்களின் அரவத்தைக் கொண்டுவருமே தவிர அலர் ஒன்றையும் ஏந்தி வராது.

இடிந்துபோன ஆடக மாடங்களின்மேல் காடுபோல் புதர்கள் செழித்திருந்தன. இங்கே சில தினங்கள் இருந்துவிட்டால் இயற்கை மெல்ல மனிதனுடைய சமூக புத்தியையும் கலகலக்கச் செய்துவிடும். நாற்புறமும் வீறிப் படரும் காட்டகத்தின் இயல்புதான் அவனுக்கு வந்துவிடும். ஓர் ஆடவனும் பெண்ணும் ஒத்த மனத்தினராகக் கூடும் அழகிய காட்சியைப்போல் வேறு எதுவுமே இல்லை; ரகசியமும் இன்பச்சிலிர்ப்பும் குதூகலமும் காதலைவிட வேறு எதில் இருக்கும்! ஆகையால் இந்தச் செம்படவக் குடிசையின் எளிமையில் வாழும் ஜூலிகாவுக்குத் தன் குல மரியாதை யாவும் தாமாகவே

மறைந்துவிட்டன. மலர்கள் பூத்துக் குலுங்கும் புன்னை மரத்தின் நிழலில் ஆமினுவும் தாலியாவும் கூடி விளையாடு வதைப் பார்ப்பதே அவளுக்குப் பேரானந்தமாக இருந்தது. அவ்விருவர் உள்ளத்திலும் எழும் சலிப்பற்ற காதலைப் பார்த்தபோது, ஜூலிகாவின் மனம் சில சமயம் இன்ப மிகுதியாலும், சில வேளைகளில் துயரின் வேகத் தாலும் சஞ்சலப்படும்.

அந்த இளைஞன் என்றைக்காவது குறிப்பிட்ட இடத் துக்கு வரத் தாமதமானல் ஆமினுவின் உள்ளம் எவ்வாறு கலுழ்ச்சியில் ஆழுமோ அதுபோலவே ஜூலிகாவின் மனமும் வேதனையில் துடிக்கும். இருவரும் கூடும் அந்த அழகை, தான் முடித்த படத்தை ஓர் ஓவியன் தொலைவில் நின்றபடி பார்த்து அநுபவிப்பதுபோல், ஜூலிகாவும் கண்ணாரக் கண்டு களிப்பாள். ஒவ்வொரு நாள் வாய்ச் சண்டையிட்டும், விளையாட்டாகக் கோபித்துக்கொண்டும், ஆமினுவை வீட்டினுள் அடைத்தும் தாலியாவின் காதல் பசியைத் தூண்டிவிடுவாள்.

அரசனுக்கும் அரணிய தேவதைக்கும் ஓர் ஒற்றுமை உண்டு.இருவரும் யதேச்சையாக இருப்பவர்கள். இருவரும் தங்கள் ராஜ்யத்துக்குத் தாங்களே ஏகாதிபதிகள்;மற்றவர் களுடைய கட்டுத்திட்டங்களுக்கு அடங்கவேண்டியதில்லை. இருவர் குணங்களிலும் இயல்பானதோர் உதாரமும் எளிமையும் வெளிப்படும். அல்லும் பகலும் உலகத்துடன் ஒட்டி ஒழுகும் நடுத்தர ஜனங்கள், தங்களைவிட உயர்ந்தவர் களுக்கு அடிமைகளாகவும் தாழ்ந்தோரிடம் பிரபுக்கள் போலவும் இருப்பார்கள். எதிர்பாராத நிலை வந்து விட்டால் என்ன செய்வதென்று விழிப்பார்கள். காட்டு மிராண்டியான இந்தத் தாலியா இயற்கை அரசியின்

மடியில் வளர்ந்த பிள்ளையல்லவா? பாதுஷாவின் பெண் ஆயிற்றே என்று அவன் சற்றும் கூச்சம் கொண்டிருக்க வில்லை! பாதுஷாவின் பெண்ணும், அவனைத் தனக்குச் சரி சமமாகவே வைத்துப் பாராட்டினுள். எப்போதும் சிரிப்பு, கபடின்மை, உவகை, எந்த நிலையிலும் அஞ்சாத தன்மை, நேர்மை எல்லாம் அவனிடம் விளங்கின. தரித்திரத்தின் குறி ஒன்றுமே அவனிடம் இல்லை.

இந்த விளையாட்டுக்களையெல்லாம் கண்டு களித்தும், இடையிடையே ஒவ்வொரு தடவை ஜூலிகாவின் உள்ளம் ஐயோவென்று ஏங்கும். பாதுஷா மகளின் வாழ்வு இப்படியா ஆகவேண்டும் என்று எண்ணுவாள்.

ஒரு நாள் தாலியா வந்தவுடன் ஜூலிகா அவன் கையைப் பிடித்துக்கொண்டு, "உங்கள் ராஜாவைக் காட்டுவாயா எனக்கு?" என்ருள்.

"ஓ. முடியுமே! எதற்காக?"

"என்னிடம் ஒரு கத்தி இருக்கிறது. அதை அவன் மார்பில் குத்தவேண்டும்."

முதலில் தாலியா சற்றுத் திகைத்து நின்ருன். ஜூலிகாவின் கொடூரம் தெறிக்கும் முகத்தைக் கண்டு அவன் சிரிக்க ஆரம்பித்தான். இவ்வளவு வேடிக்கையான பேச்சை அவன் கேட்டதே இல்லை! ஏளனம் என்பது இதுதான்; அதுவும் ஓர் அரசகுமாரி சொல்லத் தகுந்த வார்த்தையே! முன்பின் எந்தப் பழக்கமும் இல்லை; முதல் முறை பேசும்போதே அரசன் மார்பில் பாதி வரை வாளைப் பாய்ச்ச வேண்டும் என்ருல், அவனுடைய நிலை எவ்வாறு இருக்கும் என்று எண்ணிக்கொண்டு தாலியா ஓயாமல் சிரிக்கலானுன்.

## 5

அதற்கு மறு நாள் ரஹமத் ஆலி ரகசியமாக ஜுலிகாவுக்கு, "அரக்கானின் புதிய அரசன் செம்படவக் குடிசையில் இரண்டு பெண்களைக் கண்டாராம். அவர்களில் ஆமினுவை மறைந்து கவனித்து அவள் அழகில் சொக்கிப் போனாராம். அவளை மணக்கும் நிமித்தம், தம் மாளிகைக்கு அழைத்து வர ஏற்பாடுகள் செய்கிறார். பழி வாங்க இதை விட நல்ல சந்தர்ப்பம் கிடைக்காது" என்று கடிதம் எழுதினான்.

ஜுலிகா ஆமினுவின் கைகளை அழுத்தி, "ஈசுவரனின் எண்ணம் புலனாகிறது, ஆமினு. உன் கடமையை நிறைவேற்றச் சமயம் வாய்த்திருக்கிறது. விளையாடாதே" என்றாள்.

தாலியா பக்கத்தில் இருந்தான். ஆமினு அவன் முகத்தைப் பார்த்தாள். அவன் சிரித்துக்கொண்டிருந்தான்.

அவன் சிரிப்பு அவளை உள்ளூற வருத்தியது. "தாலியா, நான் சுல்தானுடைய மனைவியாக்கும்; தெரிந்ததா?" என்றாள் ஆமினு.

தாலியா சிரித்துக்கொண்டே, "எத்தனை நாழிகைக்கு அந்த வாழ்வு?" என்றான்.

ஆமினுவின் உள்ளத்தில் திகைப்பும் வருத்தமும் குடிகொண்டிருந்தன. 'வாஸ்தவமாகவே, இவன் காட்டு மிராண்டிதான். இவனோடு மனுஷிபோல் பழகுகிறேனே; நான்தான் பைத்தியம்' என்றது அவள் உள்ளம்.

ஆமினு, தாலியாவைத் தாண்ட, "ராஜாவைக் கொன்றபின் நான் உயிருடன் திரும்புவதேது?" என்றாள்.

"கஷ்டந்தான்" என்று தாலியா சற்று நிதானமாகச் சொன்னான்.

ஆமினுவின் உள்ளம் வாடியது.

ஜுலீகாவின் பக்கம் திரும்பிப் பெருமூச்சு விட்டு, "அக்கா, நான் தயார்" என்றாள். தாலியாவின் பக்கம் திரும்பி ஏளனமாகச் சொல்வதுபோல் புண்பட்ட மனத்துடன் பேசினாள்: "நான் ராணியானதுமே ராஜாவுக்கு எதிராகச் சதி செய்ததற்காக உனக்கு முதலில் தண்டனை விதிக்கப் போகிறேன். அப்புறம் செய்ய வேண்டியதைச் செய்வேன்."

தாலியாவுக்கு இது இன்னும் அதிகமாகச் சந்தோஷத்தைத் தந்தது. இது உண்மையாகவே நடந்தால் வேடிக்கையாக இருக்கும் என்பதுபோல் இருந்தது அவன் சிரிப்பு.

## 6

குதிரை வீரர்கள், காலாட்கள், கொடிகள், யானைகள், போர் இன்னியங்கள், தீவட்டிகள் எல்லாம் செம்படவன் குடிசையை நோக்கிப் படையெடுத்தன. அரண்மனையிலிருந்து தங்கச் சிவிகைகள் வந்து வெளியில் காத்துக் கொண்டிருந்தன.

ஆமினு, ஜுலீகாவின் கைகளிலிருந்து சுரிகையை வாங்கிக்கொண்டாள். அதன் தந்தப் பிடியில் செய்திருந்த அழகிய வேலைப்பாட்டை உற்று நோக்கினாள். பிறகு மேலார்ப்பை ஒதுக்கித் தன் மார்பின்மீது வைத்துக் கூர் பார்த்தாள். உயிர் மொட்டின் காம்பினருகில் அந்தக் கத்தி மெல்லத் தீண்டியது. உடனே அதை உறையில் இட்டு ஆடையில் மறைத்துக்கொண்டாள்.

இந்த மரண யாத்திரைக்கு முன் தாலியாவை ஒரு முறை பார்க்க வேண்டுமென்று நினைத்தாள். ஆனால் அவனை முன் தினத்திலிருந்து காணவில்லை. 'தாலியா சும்மாச் சிரித்துக்கொண்டிருந்தானே, உள்ளுக்குள் என்ன கோபமோ?'

சிவிகையில் ஏறுமுன், சிறு வயதில் தனக்குப் புகலிடம் தந்த அந்தக் குடிசையைக் கண்களில் நீர் ததும்ப ஒரு தரம் பார்த்தாள்; அவள் வளர்த்த மரங்கள், எதிரே சிற்ருறு அனைத்தையும்! செம்படவனின் கைகளைப் பிடித்துக்கொண்டு, "தாத்தா, நான் வரேன்; தின்னி போய்விட்டால், உன் வேலையை யார் கவனிப்பார்கள்?" என்ருள் துக்கம் தொண்டையை அடைக்க. கிழவன் சிறு பிள்ளையைப்போல் அழலானுன்.

"தாத்தா, தாலியா இங்கே வந்தால், இந்த மோதிரத்தை அவனிடம் தா; தின்னி போகும்போது கொடுத்தாள் என்று சொல்கிருயா?" என்ருள்.

பரபரவென்று ஆமினு சிவிகையில் ஏறிக்கொண்டாள். ஆடம்பரத்துடன் சிவிகை சென்றது. ஆமினுவின் குடிசை, ஆற்றங்கரை, புன்னையங் கானல் எல்லாம் மறைந்தன.

சிவிகைகள் இரண்டும் வாசலைக் கடந்து அந்தப்புரத்தினுள் புகுந்தன. சகோதரிகள் பல்லக்கிலிருந்து இறங்கி வெளியே வந்தார்கள்.

ஆமீனுவின் முகத்தில் சிரிப்பில்லை; கண்ணில் நீர் வற்றிவிட்டது. ஜூலீகாவின் முகம் மாறுபட்டுக் கிடந்தது. காரியம் தூரத்தில் இருந்தவரையில் அவர்களுடைய ஆவல் தீவிரமாக இருந்தது. இப்போது உள்ளம் நடுங்க ஆமினுவை ஆதரவுடன் அணைத்துக்கொண்டாள். தனக்குள், "புதிதாக அரும்பிய காதல்மலரைப் பிய்த்து

ரத்த வெள்ளத்தில் மிதக்கவிடுகிறேனே" என்று சொல்லிக் கொண்டாள்.

ஆனால் யோசிக்க நேரம் ஏது? வேலைக்காரிகள் வழி காட்ட ஆயிரக்கணக்கான விளக்குகளின் ஒளியில், கண் இமையாது கனவில் நடப்பதுபோல் இருவரும் சென்றனர். கடைசியில் பள்ளியறையின் வாசலருகே நின்று ஆமீனா, "அக்கா" என்றாள்.

ஜூலிகா ஆமினாவை மார்புறத் தழுவினாள். இருவரு மாக உள்ளே நுழைந்தார்கள்.

அரச உடையில், மன்னன், அறையினுள் மஞ்சத்தின் மேல் உட்கார்ந்திருந்தான். ஆமீனா கூச்சத்துடன் வாயிலருகே நின்றாள்.

ஜூலீகா சற்று முன்னால் போய் அரசனை உற்று நோக்கினாள். அவன் புன்சிரிப்புடன் உட்கார்ந்திருந்தான்.

"தாலியா!" என்று கூச்சலிட்டாள் ஜூலிகா. ஆமினா மூர்ச்சையாகி விழுந்தாள்.

அடிபட்ட பறவையைத் தூக்குவதுபோல் தாலியா அவளை அப்படியே தூக்கிவந்து கட்டிலின்மேல் படுக்க வைத்தான். ஆமினாவுக்கு நினைவு வந்ததும் கத்தியை உறையிலிருந்து எடுத்துக்கொண்டே ஜூலீகாவின் முகத்தை நோக்கினாள். ஜூலீகா தாலியாவைப் பார்த் தாள். தாலியா இரண்டு பேரையும் பார்த்து முறுவலித் தான். சுரிகையும் உறையிலிருந்து சற்று வெளியே வந்து இந்தக் கூத்தைப் பார்த்துப் பளபளவென்று சிரித்தது!

# புதையல்

## 1

அமாவாசைக் கருக்கல். மிருத்யுஞ்ஜயன் தாந்திரீக முறைப்படி, நீண்ட காலமாக வழிபடும் தங்கள் குலதெய்வமான ஜயகாளியைப் பூஜிக்க உட்கார்ந்தான். பூஜை முடிந்து எழுந்தபோது, பக்கத்திலிருந்த மாந்தோப்பில் விடிவேளைக் காகம் கரைவது கேட்டது.

மிருத்யுஞ்ஜயன் பின்னால் திரும்பிப் பார்த்தான். கோயிலின் கதவு மூடிக் கிடந்தது. அவன் தேவியின் பாதங்களில் தலைபட ஒரு முறை வணங்கிய பின் பீடத்தை நகர்த்தினான். அதன் அடியிலிருந்து பலாமரப் பெட்டியொன்றை வெளியே எடுத்தான். பூணூலில் சாவி இருந்தது. அந்தச் சாவியைப் போட்டு மிருத்யுஞ்ஜயன் பெட்டியைத் திறந்தான். திறந்ததும் திடுக்கிட்டுத் தலைமேல் கை வைத்துக்கொண்டான்.

மிருத்யுஞ்ஜயனுடைய வீட்டுப் புழைக்கடைத் தோட்டத்தைச் சுற்றி நாலுபக்கமும் சுவர். ஒரு மூலையில் பெரிய மரத்தின் நிழலில் இருந்தது இச்சிறு கோயில். கோயிலில் ஜயகாளியின் உருவச்சிலையைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை. உள்ளே நுழைய வாசல் கதவு ஒன்றுதான். மிருத்யுஞ்ஜயன் பேழையை இப்படியும் அப்படியுமாகப் புரட்டிப் பார்த்தான். பெட்டியைத் திறப்பதற்குமுன் அது பூட்டியே இருந்தது. அதை

யாரும் உடைக்கவில்லை. மிருத்திஞ்ஜயன் பத்துத் தடவை களுக்குமேல் சிலையைச் சுற்றித் தடவிப் பார்த்துவிட்டான். ஒன்றும் அகப்படவில்லை. பைத்தியக்காரன்போல் ஆகிக் கோயிலின் கதவைத் திறந்தான். பொழுது விடிந்து வெளிச்சமாகி விட்டது. அப்போது கோயிலைச்சுற்றி வீணையுடன் தேடித் திரிந்தான்.

நன்றாக வெளிச்சமானதும், வெளியே சண்டமண்டபத்தில் வந்து உட்கார்ந்து, தலைமேல் கைவைத்துக் கொண்டு யோசிக்கலானான். ராத்திரியெல்லாம் தூக்கம் இல்லாததால் உடல் சோர்வினால், மயக்கம் வந்தது. அதே சமயத்தில் சட்டென்று, "ஜயம் உண்டாகட்டுமப்பா" என்ற குரல் கேட்டுத் திடுக்கிட்டான்.

எதிரே முற்றத்தில், விரிசடைக் கோலமாக ஒரு சந்நியாசி. மிருத்யுஞ்ஜயன் பயபக்தியுடன் அவரை வணங்கினான். அவர் அவன் தலைமேல் கைவைத்து ஆசீர்வாதம் செய்தபின், நீ வீணுக்குத்தான் கவலைப் படுகிறாய், அப்பா" என்றார்.

மிருத்யுஞ்ஜயனுக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. "நீங்கள் எல்லாம் அறிந்தவர். இல்லாவிட்டால் என் கவலை உங்களுக்கு எப்படித் தெரியும்?" நான் யாரிடமும் ஒன்றும் சொல்லவில்லையே!" என்றான்.

"குழந்தாய்! தொலைந்து போனதற்காக நீ ஆனந்தப் பட வேண்டுமே தவிரக் கவலைப்படக்கூடாது" என்றார் அவர்.

மிருத்யுஞ்ஜயன் அவர் கால்கள் இரண்டையும் பிடித்துக்கொண்டு, "அப்படியானால் உங்களுக்கு எல்லாம் தெரியும். எப்படித் தொலைத்தேன், எங்கே போனால்

திரும்பக் கிடைக்கும் என்று சொல்லாவிட்டால் உங்கள் கால்களை விடமாட்டேன்" என்றான்.

அவர், "உனக்குத் தீங்கு நினைப்பவனானால் சொல்லி விடுவேன். ஆனால் பகவதி உன்மேல் தயை மூண்டு அதை அபகரித்துக்கொண்டாள். போனதற்காக நீ துயரப் படாதே" என்றார்.

மிருத்யுஞ்ஜயன் அவருக்குத் திருப்தி பண்ணப் பலவாறாக உபசாரம் செய்தான்; பணிவிடை ஆற்றினான்; மறு நாள் அதிகாலையில் தன் சொந்தத் தொழுவத்திலிருந்து நுரை வழிய ஒரு தம்ளரில் பாலை எடுத்துக்கொண்டு போய்ப் பார்த்தபோது சந்நியாசி அங்கே இல்லை.

## 2

மிருத்யுஞ்ஜயன் குழந்தையாக இருந்தபோது அவனுடைய பாட்டனார் ஹரிஹரர் ஒரு நாள் இதே சண்டீமண்டபத்தில் உட்கார்ந்து புகையிலை குதப்பிக் கொண்டிருந்தார். அப்போது இதேபோல் ஒரு சந்நியாசி, "வெற்றி பெறுவாய், அப்பா" என்றவாறு முற்றத்தில் வந்து நின்றார். ஹரிஹரர் அவரைத் தம் வீட்டில் சில தினங்கள் இருக்கச் சொல்லி, முறைப்படி தொண்டுகள் ஆற்றித் திருப்தி செய்தார்.

போகும்போது சந்நியாசி, "குழந்தாய், உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார். ஹரிஹரர், "ஸ்வாமிகள் திருவுள்ளம் தந்தால் என் நிலையைச் சொல்லுகிறேன். ஒரு காலத்தில் நாங்கள் இந்த ஊரில் பிரபலஸ்தர்களாக இருந்தோம். என் கொள்ளுப் பாட்டனார் தொலைவிலிருந்து ஒரு நற்குலத்தவனை

அழைத்து வந்து, ஒரு பெண்ணை அவனுக்கு விவாகம் செய்து கொடுத்தார். அவளுடைய வம்சம் எங்களை ஏமாற்றிவிட்டு இன்று இந்த ஊரில் பெரிய மனிதர்களாகி விட்டார்கள். நாங்கள் இப்போது வெகு ஈன நிலையில் இருக்கிறோம். ஆகவேதான் அவர்களுடைய அகம்பாவத்தை எல்லாம் பொறுத்துக்கொள்ள வேண்டி யிருக்கிறது. அதுவும் இனிமேல் என்னால் முடியாது. என்ன செய்தால் என் வம்சம் மறுபடியும் தழைக்கும்; சொல்லுங்கள். என் குடும்பம் நிலைத்தோங்க ஆசி புரியுங்கள்'' என்றார்.

சந்நியாசி சற்றுச் சிரித்து, "அப்பா, ஏழையாகவே சுசமாக இரு. பணக்காரனாக முயல்வதில் நன்மை வரு மென்று எனக்குத் தோன்றவில்லை'' என்றார்.

ஆனால் ஹரிஹரர் விட்ட பாடாக இல்லை. வம்சம் தழைக்க என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாரென்று சொன்னார்.

அப்போது சந்நியாசி, தம் பையிலிருந்து துணியில் முடித்திருந்த ஒரு பழுப்புக் காகிதத்தை எடுத்தார்; நீளமான காகிதம்; சுவடிபோல் சுருட்டியிருந்தது. சந்நியாசி அதைப் பிரித்துத் தரைமீது வைத்தார். அதில் பலவிதமான சக்கரங்களும் அடையாளங்களும் போட் டிருந்தன. அடியில் ஒரு பெரிய பாட்டு எழுதியிருந்தது; அதன் ஆரம்பம் இதுதான்:

பாயே தரே ஸாதா
ரா நாஹீ தேய் ராதா
சேஷே திலே ரா
பாகோல் சாடோ பா

தேந்துல் வடேர் கோலே
தக்ஷிணே ஜாலு சலே
ஈசான கோணே ஈசானீ
கஹே திலாம் நிசானீ—இத்பாதி.

ஹரிஹரர், "ஸ்வாமி ஒன்றுமே புரியவில்லையே" என்ருர்.

சந்நியாசி, "இதை உன்னிடமே வைத்துக்கொள். தேவியைப் பூஜை செய். அவள் அநுக்கிரகத்தால் உன் வம்சத்தில் யாராவது ஒருவன் இதில் கண்ட ஐசுவரியத்தைப் பெறுவான். உலகத்தில் இதற்கு ஈடு எதுவுமே இல்லை" என்ருர்.

ஹரிஹரர் பலவாருக வேண்டினர்: "ஸ்வாமி, நீங்களே சொல்லிக்கொடுங்களேன்" என்ருர்.

"அதெல்லாம் நடக்காது. சாதனையின்மூலந்தான் அதைத் தெரிந்துகொள்ள வேண்டும்" என்ருர் சந்நியாசி.

அதே சமயத்தில் ஹரிஹரரின் தம்பி சங்கரன் வந்து சேர்ந்தான். அவனைக் கண்டதும் ஹரிஹரர் அவசரமாகக் காகிதத்தை மறைத்துக்கொள்ளப் பார்த்தார். சந்நியாசி சிரித்து, "பெரியவனுக முயல்கிருயே. வழியில் இப்போதே கஷ்டங்கள் வர ஆரம்பித்துவிட்டன. ஆனுல் மறைத்துவைக்க வேண்டிய அவசியமே இல்லை. இதன் ரகசியத்தை ஒருவன்மட்டுந்தான் வெளிப்படுத்த முடியும். பல தடவை முயன்ருல்கூட மற்றவர்களால் ஆகாது. உங்களுள் அந்த ஆள் யார் என்று யாருக்குமே தெரியாது. ஆகவே, இதை எல்லாருடைய எதிரிலும் பயமில்லாமல் திறந்துவைத்துக்கொள்ளலாம்" என்ருர்.

அவர் போய்விட்டார். ஆனுல் ஹரிஹரர் காகிதத்தை மறைத்தே வைத்துக்கொண்டார். வேறு யாராவது

இதைப் புரிந்துகொண்டு லாபம் அடைந்துவிட்டால்? தன் தம்பி சங்கரன்கூட இதன் பலனை அநுபவிக்கலாமல்லவா! அவர் சந்தேகத்துடன் அந்தக் காகிதத்தைப் பலாமரப் பெட்டியில் வைத்துப் பூட்டி, தம் குல தெய்வமான ஜயகாளியின் பீடத்தின்கீழ் வைத்தார். ஒவ்வோர் அமாவாசை அன்றும் நடுநிசியில் தேவியின் பூஜை முடிந்ததும் அந்தக் காகிதத்தைப் பிரித்துப் பார்ப்பார். தேவி தயை செய்து அதைப் புரிந்து கொள்ளும் சக்தி அளித்தாளா என்று பார்ப்பதற்குத்தான்.

கொஞ்ச நாள் கழித்துச் சங்கரன் ஹரிஹரரிடம் வந்து, "அண்ணு, அந்தக் காகிதத்தை எனக்குக் காட்டேன். ஒரு தடவை நன்ருகப் பார்க்கிறேன்" என்று வணக்கமாகக் கேட்டுக்கொண்டான்.

"போடா பைத்தியம்! அந்தக் காகிதத்தில் என்ன இருக்கிறது! அந்தப் போலிச் சாமியார் காகிதத்தில் கைக்கு வந்ததையெல்லாம் கிறுக்கி என்னை ஏமாற்றிவிட்டுப் போய்விட்டான்! அதை என்றைக்கோ கொளுத்திப் போட்டாயிற்று'' என்ருர் ஹரிஹரர்.

சங்கரன் கம்மென்று இருந்துவிட்டான். திடும் என்று ஒரு நாள் சங்கரனை வீட்டில் காணவில்லை. அதற்கப்புறம் அவன் வரவேயில்லை.

ஹரிஹரரின் மற்ற வேலைகள் கெட்டன. புதையலின் எண்ணமே! ஒரு கணமும் அதை அவர் மறக்கவில்லை.

மரணத்தறுவாயில், அவர் தம் மூத்த பிள்ளையான சியாமாபதனைக் கூப்பிட்டு, சந்நியாசி அளித்த காகிதத்தைக் கொடுத்தார்.

காகிதம் கிடைத்ததும் சியாமாபதன் வேலையை விட்டான். ஜயகாளியின் பூஜையிலும், முழு மனத்துடன்

தனிமையில் இந்தக் காகிதத்தைப் படிப்பதிலுமே அவன் வாழ்க்கை கழிந்துவிட்டது.

மிருத்யுஞ்ஜயன் சியாமாபதனுடைய மூத்த பிள்ளை. தந்தை இறந்தபின் சந்நியாசி தந்த ரகசியக் காகிதம் அவன் கைக்கு வந்தது. நிலைமை மோசமாகிக்கொண்டே வரவர, அதிக ஆவலுடன் தன் மனத்தை அந்தக் காகிதத்தின்மேல் செலுத்தினான். ஓர் அமாவாசை இரவு பூஜை செய்தபின், பார்த்தபோது காகிதத்தைக் காண வில்லை. சந்நியாசியும் எங்கோ மறைந்துவிட்டார்.

அந்தச் சந்நியாசியை விட்டால் முடியாது. எல்லா விஷயங்களையும் அவரைக் கொண்டு கண்டுபிடிக்கலா மென்று மிருத்யுஞ்ஜயனுக்குத் தெரிந்துவிட்டது.

இந்த நம்பிக்கையுடன், மிருத்யுஞ்ஜயன் வீட்டை விட்டுச் சந்நியாசியைத் தேடப் புறப்பட்டான். ஒரு வருஷம் வழியிலேயே கழிந்தது.

## 3

கிராமத்தின் பெயர் தாராகோல். அங்கே மிருத்யுஞ்ஜயன் பலசரக்குக் கடை ஒன்றில் வெற்றிலை குதப்பிக்கொண்டே உட்கார்ந்திருந்தான். கொஞ்ச தூரத்தில் வரப்பு வழியாக ஒரு சந்நியாசி போனார். முதலில் மிருத்யுஞ்ஜயன் தான் தேடுவது அவரைத்தான் என்று எண்ணவில்லை. கொஞ்சநேரம் கழித்தே தான் தேடும் ஆள் அந்தச் சந்நியாசிதானே என்று தோன்றியது. பரபரவென்று ஹுக்காவை வைத்துவிட்டுக் கடைக்காரன் வியப்புற்று நிற்க, ஒரே ஓட்டத்தில் கடையை விட்டு வெளியேறினான். ஆனால் சந்நியாசியைக் காணவில்லை.

அப்போது இருட்டிவிட்டது. முன் பின் தெரியாத இடத்தில் எங்கே போய் அவரைத் தேடுவது என்று

தெரியவில்லை அவனுக்கு. கடைக்குத் திரும்பிவந்து கடைக் காரனைப் பார்த்து, "அதோ ஒரு பெரிய காடு தெரிகிறதே, அங்கே என்ன இருக்கிறது ?" என்று கேட்டான்.

"அங்கே ஒரு காலத்தில் பெரிய பட்டணம் இருந்த தாம். அகஸ்திய முனிவர் சாபத்தால் அங்கே ஆண்ட ராஜா, ஜனங்கள் எல்லாரும் வைசூரி கண்டு செத்துப் போய்விட்டார்களாம். தேடினால், இப்போதுகூட அளவற்ற புதையல் அகப்படும் என்று சொல்கிறார்கள். ஆனால் மத்தியான்ன வேளையில்கூட எவனும் துணிந்து அந்தக் காட்டுக்குள்ளே போனதில்லை. போனவன் திரும்பினதும் இல்லை" என்றான் கடைக்காரன்.

மிருதயுஞ்ஜயனின் மனம் அலை பாய்ந்தது. ராத்திரி யெல்லாம் பளிகைக் கடையில் கட்டிலின்மேல் படுத்து, கொசுக்கடி தாளாமல் உடம்பைச் சொறிந்துகொண்டு, காடு, சந்நியாசி, தொலைந்துபோன காகிதம் இவைகளைப் பற்றிய நினைவாகவே இருந்தான். அடிக்கடி படித்ததில் அதில் இருந்த பாட்டு அவனுக்கு மனப்பாடமாகியிருந்தது. தூக்கம் வராமல் போகவே, இரவெல்லாம் அந்தப் பாட்டே, அவன் மனத்தில் சுழன்றுகொண்டிருந்தது.

பாயே தரே ஸாதா
ரா நாஹி தேய் ராதா
சேஷே திலே ரா
பாகோல் சாடோ பா

தலை சுற்ற ஆரம்பித்தது. இந்த வரிகளை அவனால் மறக்க முடியவில்லை. கடைசியில் விடியற்காலையில் அவனுக்குத் தூக்கக் கலக்கம் வந்தபோது இந்த நாலு வரிகளின் அர்த்தம் கனவில் தெளிவாகப் புரிந்தது. "ரா நாஹி தேய் ராதா—அதில் 'ரா'வை விட்டால் தா





மீதி; "சேஷே திலே ரா" —கடைசியில் 'ரா'வைச் சேர்த்தால் 'தாரா' ஆயிற்றே; "பாகோல் சாடோ பா"— பாகோல் என்பதில் 'பா' போனால் 'கோல்' மிஞ்சியது: ஆகவே, எல்லாவற்றையும் சேர்த்தால் 'தாராகோல்'. இந்த ஊரின் பெயரும் 'தாரோகோல்' தானே!

கனவு கலைந்தது. மிருத்யுஞ்ஜயன் துள்ளி எழுந்தான்.

4

பகலெல்லாம் காட்டில் திரிந்துவிட்டுச் சாயங்காலமாக வெகு கஷ்டப்பட்டு வழி தேடிக்கொண்டு சோறுகூட இல்லாமல் சாகும் நிலையில் ஊருக்கு வந்து சேர்ந்தான் மிருத்யுஞ்ஜயன்.

மறு நாள் மேல்துணியில் அவல் முடிந்துகொண்டு மறுபடியும் காட்டை நோக்கி நடந்து பகலில் ஒரு குளத்தங் கரையை அடைந்தான். குளத்தில் தெளிவான நீர். அதில் கணக்கற்ற அல்லிப் பூக்கள். நாற்புறமும் காடு; கல்லால் கட்டிய துறை இடிந்து கிடந்தது. அங்கே உட்கார்ந்து அவலைத் தின்றுவிட்டுக் குளத்தங்கரையைச் சுற்றிப் பார்க்கலானான்.

குளத்தின் மேலண்டைக்கரையில் சட்டென்று நின்றான் மிருத்யுஞ்ஜயன். ஒரு பெரிய புளிய மரத்தைச் சுற்றிக் கொண்டு ஆலமரம் ஒன்று வளர்ந்திருந்தது. உடனே அவனுக்குக் கீழ்க்கண்ட வரிகள் நினைவுக்கு வந்தன:

தேந்துல் வடேர் கோலே
தக்ஷிணே ஜாஓ சலே

தெற்கே கொஞ்ச தூரம் சென்றதும் அடர்ந்த காடு. அங்கே மூங்கில் புதர்களை தாண்டிக்கொண்டு போவது

முடியாது. இந்த மரத்தை எப்படியாவது நினைவில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று தீர்மானித்தான்.

அந்த மரத்தின் பக்கமாகத் திரும்பி வரும்போது மரத்தின் மறைவில் அருகிலேயே ஒரு கோயிலின் கோபுரம் தெரிந்தது. அதைக் குறியாக்கிக்கொண்டு மிருத்யுஞ்ஜயன் ஒரு பாழடைந்த கோயிலுக்கு வந்து சேர்ந்தான். பக்கத்தில் கல் அடுப்பும் எரிந்த விறகும் சாம்பலும் கிடந்தன. மெதுவாக மிருத்யுஞ்ஜயன் கதவு உடைந்திருந்த அந்தக் கோயிலின் உள்ளே எட்டிப் பார்த்தான். உள்ளே யாரும் இல்லை. சிலையும் காணவில்லை. ஒரு கம்பளி, கமண்டலம், காவி அங்கவஸ்திரம் இம்மூன்றுமே கிடந்தன.

இருட்டிக்கொண்டு வர ஆரம்பித்தது; கிராமமோ வெகு தொலைவில். இருளில் காட்டின் நடுவே வழி தேடிக் கொண்டு போக முடியுமோ, முடியாதோ! ஆகவே, கோயிலுள் ஆள் இருப்பதன் சின்னங்களைக் கண்டு மிருத்யுஞ்ஜயன் திடங்கொண்டான். கோயிலின் சுவரிலிருந்து பெரிய கல்துண்டு ஒன்று உடைந்து வாசலருகே விழுந்து கிடந்தது. அந்தக் கல்லின்மேல் உட்கார்ந்து தலை குனிந்து யோசித்துக்கொண்டிருந்த சமயம் அதன்மேல் ஏதோ எழுதியிருந்ததைக் கவனித்தான். உற்றுப் பார்க்கையில் ஒரு யந்திரம் தெரிந்தது. அதன் நடுவே சில தெளிவாகவும், சில அழிந்தும், பீஜாக்ஷரங்கள் இருந்தன.

இந்த யந்திரம் மிருத்யுஞ்ஜயனுக்கு ஏற்கனவே அறிமுகமானது. எத்தனை அமாவாசை இரவுகளில் பூஜை அறையில் தூபப் புகையின் இன்மணத்தில், நெய் விளக்கின் ஒளியில் பழுப்புக் காகிதத்தில் இருந்த அந்தச் சக்கரத்தைக் குனிந்து பார்த்துப் படித்து அதன் மர்மத்தை அறிய ஒரே நினைவாக அவன் தேவியின் அருளை வேண்டி

யிருக்கிருன்! தன் விருப்பம் நிறைவேறும் சமயம் கிட்டுவது கண்டு அவன் உடலில் ஒரு குலைப்பு மூண்டது. கரைக்கு அருகில் வரும்போது கலம் கவிழ்ந்து விட்டால்...! சிறு தவறு ஒன்றினுல் எல்லாம் வீணுகப் போய்விட்டால்! அந்தச் சந்நியாசி முன்பே வந்து எல்லாவற்றையும் அடித்துக்கொண்டு போயிருந்தால்!.. இப்படியெல்லாம் அவனுக்குச் சந்தேகங்கள் பிறந்தன. என்ன செய்வது என்று அவனுக்குத் தோன்றவில்லை. அந்தப் புதையலின்மேலேயே உட்கார்ந்துகொண்டு ஒன்றும் தெரியாமல் விழிக்கிருேமோ என்றுகூட அவனுக்குத் தோன்றியது.

அவன் உட்கார்ந்தவாறே காளியின் திருநாமத்தை ஜபிக்கலானுன். மாலை மங்கல் பின்னும் இருட்டாகியது. விட்டில்களின் அரவம் காடெங்கும் எதிரொலித்தது,

## 5

இந்தச் சமயத்தில் அடர்ந்த காட்டின் நடுவே சற்றுத் தொலைவில் நெருப்புத் தெரிந்தது. மிருத்யுஞ்ஜயன் கல் மேலிருந்து எழுந்து அந்த ஒளியை நோக்கி நடக்கலானுன்.

கஷ்டத்துடன் கொஞ்ச தூரம் சென்று, ஓர் அரச மரத்தின் மறைவிலிருந்து பார்க்கையில், அந்தப் பழைய சந்நியாசி, நெருப்பின் வெளிச்சத்தில், அதே பழுப்புக் காகிதத்தைத் திறந்து வைத்துக்கொண்டு ஒரு கட்டையால் சாம்பலின்மேல் ஓரே நினைவாகக் கணக்கிட்டுக் கொண் டிருந்தார்.

மிருத்யுஞ்ஜயனின் வீட்டிலிருந்த அதே பிதிரார் ஜிதமான காகிதம்! 'அடே திருட்டுச் சந்நியாசி! போலிச் சாமியாரே! இதற்காகத்தான் மிருத்யுஞ்ஜயனைக் கவலைப் படாதே என்ருயோ?'

சந்நியாசி ஒருமுறை கணக்கிட்டு, அளவுகோலைக் கொண்டு அளக்கிறார்; கொஞ்ச தூரம் அளந்த பின் ஏமாற்றத்துடன், தலையை ஆட்டிக்கொண்டே மறுபடியும் கணக்கிட உட்காருகிறார்.

இப்படிப் பொழுது புலரும் தறுவாயில், குளிர்ந்த காற்றில் இலைகள் அசைந்து ஒலிக்கும்போது, சந்நியாசி அந்தக் காகிதத்தைச் சுருட்டி எடுத்துக்கொண்டு போய் விட்டார்.

என்ன செய்வதென்று மிருத்யுஞ்ஜயனுக்குத் தோன்றவில்லை. சந்நியாசியின் உதவி இல்லாவிட்டால் காகிதத்தின் மர்மத்தை அறிய முடியாதென்று அவனுக்குத் தெரிந்தது. அந்தப் பேராசை பிடித்த சாமியார் மிருத்யுஞ்ஜயனுக்கு உதவி செய்யமாட்டார்; அதுவும் உண்மைதான். ஆகவே, ரகசியமாகச் சந்நியாசியின்மேல் கண் வைத்திருப்பதைத் தவிர வேறு வழி இல்லை. ஆனால் பகல் வேளைகளில் ஊருக்குப் போகாவிட்டால் உணவு கிடைக்காது. நாளைக்குக் காலை ஒரு தடவை ஊருக்குச் செல்ல வேண்டும்.

அதிகாலையில் வானம் வெளுக்க ஆரம்பித்ததும் அந்த மரத்தின் மேலிருந்து இறங்கினான். சாம்பலின்மேல் சந்நியாசி கணக்கிட்டுக்கொண்டிருந்த இடத்தை நன்றாகப் பார்த்தான். ஒன்றும் புரிபடவில்லை. நாலு பக்கமும் சுற்றி நோக்கினான்; காட்டின் மற்றப் பகுதிகளைப் போலவே இருந்தது. வித்தியாசமாக ஒன்றும் தெரியவில்லை.

காட்டினிடையே இருள் பிரியப் பிரிய, மிருத்யுஞ்ஜயன் உஷாராகவே நாலுபக்கமும் பார்த்துக்கொண்டு ஊரை நோக்கி நடந்தான். சந்நியாசி எங்கேயாவது தன்னைப் பார்த்துவிடப் போகிறாரே என்று பயம்.

மிருத்யுஞ்ஜயன் இருந்த கடைக்குப் பக்கத்தில், காயஸ்தப் பெண் ஒருத்தி நோன்பை முடித்து, அன்று பிராம்மண போஜனம் செய்வித்தாள். அங்கே மிருத்யுஞ்ஜயனுக்கு அன்று சாப்பாடு கிடைத்துவிட்டது. சில நாட்கள் உணவின்றி வருந்தியபின் அன்று வயிருரப் புசித்தான். அது முடிந்ததும் ஹுக்காவில் இரண்டு இழுப்பு இழுத்துவிட்டு, ஜமுக்காளத்தில் புரண்டு முன் நாள் இரவெல்லாம் கண் விழித்ததனுல், மிருத்யுஞ்ஜயன் ஒரேயடியாக அயர்ந்து தூங்கிவிட்டான்.

அன்று சடுதியாகச் சாப்பாட்டையெல்லாம் முடித்துக் கொண்டு, புறப்பட்டுவிடுவது என்று எண்ணியிருந்தான். அதற்கு நேர்மாருகவே காரியம் நடந்தது. அவன் எழுந்த போது சூரியன் அஸ்தமித்துவிட்டது. மிருத்புஞ்ஜயன் நிற்கவில்லை. இருளிலேயே காட்டுக்குள் நுழைந்தான்.

கொஞ்சங் கொஞ்சமாக இருள் கனத்தது. மரங்களினிடையே இருள் கவிந்திருந்ததால் வழி தெரியவில்லை; வழி தவறியது. பொழுது விடியும்போதுதான் இரவெல்லாம் ஓரிடத்திலேயே சுற்றிச் சுற்றி அலைவதை உணர்ந்தான்.

காக்கைக் கூட்டம் காகா என்று கரைந்தவாறு ஊரை நோக்கிப் பறந்தது, தன்னை ஏளனம் செய்து இகழ்வது போலத் தோன்றியது மிருத்யுஞ்ஜயனுக்கு.

## 6

கணக்கில் அடிக்கடி தவறு ஏற்பட,அதைத் திருத்திக் கொண்டே சந்நியாசி கடைசியில் சுரங்கத்தின் வழியைக் கண்டு பிடித்தார்; கையில் தீப்பந்தத்துடன் சுரங்கத்தினுள் புகுந்தார். சுவரெங்கும் பாசி. நடு நடுவே

ஓரோரிடத்தில் ஜலம் கசிந்தது. சில இடங்களில் தவளை கள் ஒன்றன்மேல் ஒன்ருகக் கோபுரம்போல் குவிந்திருந் தன. வழுவழுப்பான இந்தப் பாதையோடு கொஞ்ச தூரம் சென்ற பின் எதிரே சுவர் ஒன்று முட்டியது. அப் புறம் வழி தென்படவில்லை. சுவரெங்கும் இரும்புத் தடி யால் பலமாக அடித்துப் பார்த்தார். பிளவு இருப்பதாகத் தெரியவில்லை; துவாரத்தையும் காணவில்லை. இதோடு வழி முடிகிறது என்பதில் சந்தேகமில்லை.

மறுபடி அந்தக் காகிதத்தைத் திறந்து, தலையில் கை வைத்துக்கொண்டு உட்கார்ந்தார். இவ்வாறு அன்றை இரவு கழிந்தது.

மறுநாள் இன்னும் ஒரு முறை கணக்கை முடித்துக் கொண்டு சுரங்கத்தினுள் புகுந்தார். அடையாளம் புரிந்து கொண்டு குறிப்பிட்ட இடத்தில் ஒரு கல்லை நகர்த்திய தும், ஒரு கிளைப்பாதையைக் கண்டுபிடித்தார். அந்த வழியினூடே சென்றதும் மற்ருெரு புறம் முட்டி நின்றது அந்த வழி.

கடைசியில் ஐந்தாம் நாள் இரவு சுரங்கத்தின் உள்ளே நுழைந்ததும் சந்நியாசி சந்தோஷக் கூச்சலிட்டார். "இன்று எனக்கு வழி தெரிந்துவிட்டது. இனி எந்த விதத்திலும் தவறு நேராது" என்ருர்.

வழி ஒரே சிக்கலானது. பல கிளைகள்; சில இடங் களில் ஒரே குறுகல். அங்கே மண்டியிட்டுச் செல்ல வேண்டும். ஜாக்கிரதையாகத் தீவட்டியைப் பிடித்துக் கொண்டே, சந்நியாசி வட்டமான அறைபோன்ற இடத் துக்கு வந்து சேர்ந்தார். அறையின் நடுவே பெரிய கிணறு ஒன்று. அதன் அடி மட்டம் தெரியவில்லை; தீவட்டியின் ஒளியில் அறையின் உத்திரத்திலிருந்து பருத்து நீண்ட

இரும்புச் சங்கிலி ஒன்று கிணற்றினுள் இறங்கியது. தம்மால் ஆனமட்டும் பலத்துடன் சந்நியாசி அச்சங்கிலியை அசைத்ததும் டங் என்று ஓர் ஓசை கிணற்றிலிருந்து எழுந்து அறையெங்கும் எதிரொலித்தது. சந்நியாசி, "கண்டு பிடித்தேன்" என்று இரைந்தார்.

சொன்னதுதான் தாமதம், அறையின் இடிந்த சுவரிலிருந்து ஒரு கல் விழுந்தது. அத்துடன் இன்னோர் உயிருள்ள பொருளும் தொப்பென்று விழுந்து உரக்கக் கூவியது. எதிர்பாராது வந்த ஓசையைக் கேட்டுச் சந்நியாசி திடுக்கிடவே, அவர் கையிலிருந்த பந்தம் விழுந்து அணைந்தது.

## 7

அவர், "யார் நீ?" என்று கேட்டார். பதில் ஒன்றும் கிடைக்கவில்லை. இருட்டில் தடவிப் பார்த்தபோது மனித உடல் ஒன்று அகப்பட்டது. அதை அசைத்து, "நீ யார்?" என்று கேட்டார்.

பதில் இல்லை; ஆள் பிரக்ஞையற்று இருந்தான்.

சக்கிமுக்கியைத் தட்டிச் சந்நியாசி தீவட்டியைக் கொளுத்தினர். இதற்குள் அந்த ஆளுக்கு நினைவு வந்துவிட்டது. எழுந்திருக்க முயன்று, வேதனை தாளாமல் உரக்கக் கூச்சலிட்டான்.

"அட, மிருத்யுஞ்ஜயனா! உனக்கு ஏன் இந்தப் புத்தி?" என்றார் சந்நியாசி.

"ஸ்வாமி, என்னை மன்னித்து விடுங்கள். பகவான் எனக்குத் தண்டனை அளித்துவிட்டார். உங்கள்மேல் பாறையை எறிந்து கொல்லப் போனேன். என்னால் சமாளித்துக்கொள்ள முடியவில்லை. வழுக்கிப் பாறை

யுடன் கூடவே விழுந்துவிட்டேன். கட்டாயம் கால் முறிந் திருக்கும்.''

"என்னைக் கொல்வதால் உனக்கு என்ன லாபம்?''

மிருத்யுஞ்ஜயனுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

"லாபம் என்னவென்று கேட்கிறாய்? எதற்காகப் பேராசையினால் என் பூஜை அறையிலிருந்து அந்தக் காகி தத்தைத் திருடிக்கொண்டு சுரங்கத்தினுள் அலைகிறாய்? நீ பண்டன்; திருடன். என் பாட்டனாருக்கு இதைக் கொடுத்த சந்நியாசி, எங்கள் வமிசத்தில் ஒருவனுக்கே இதன் மர்மம் தெரியும் என்றார். இந்தப் புதையல் எங்கள் வமிசத்தாருக்கே சொந்தம். ஆகவே, இந்தச் சில தினங்க ளாக ஊண் உறக்கமில்லாமல் உன்னையே நிழல்போல் பின்தொடர்ந்தேன், இன்று நீ, 'கிடைத்துவிட்டது' என்று கூச்சலிட்டபோது என்னால் பொறுக்கமுடியவில்லை. நான் உன் பின்னாலேயே வந்து இந்தப் பள்ளத்தினுள் ஒளிந்திருந்தேன். இங்கிருந்து ஒரு பாறையைத் தள்ளி உன்னைக் கொல்ல முயன்றேன். ஆனால் உடலில் வலு வில்லை. இடமும் சறுக்கலாக இருந்தது. வேண்டுமானால் இப்போதே என்னைக் கொன்று போட்டாலும் போடு. நான் பேயாகி இந்தப் புதையலைக் காப்பேன். ஆனால் உனக்கும் இது அகப்படாது. அப்படி நீ அடைந்து விட் டால் நான் பிராம்மணன்; உன்னைச் சபித்துவிட்டு இந்தக் கிணற்றுக்குள் விழுந்து தற்கொலை செய்துகொள்வேன். இந்தச் செல்வம் பிராம்மணனின் ரத்தம்; பசுவைக் கொன்ற பாவம் உனக்கு வரும். இந்தப் புதையலைக் கொண்டு நீயும் சுகம் அநுபவிக்க முடியாது. என் தகப்ப னாரும் பாட்டனாரும் இதன் மேலேயே நினைவாக மரித் தார்கள். இதை எண்ணியே நாங்கள் ஏழைகளானோம். இதைத் தேடியே வீட்டில் பெண்டு பிள்ளைகளை அநாதையாக விட்டுவிட்டு, நான் ஊண் உறக்கமின்றிக்

காடு மேடெல்லாம் திரிந்தேன். என் கண் எதிரே இதை நீ எடுத்துக்கொள்ள முடியாது.''

## 8

"மிருத்யுஞ்ஜயா, அப்படியானால் கேள், சொல்லுகிறேன்" என்றார் சந்நியாசி.

"உன் பாட்டனாருக்கு ஒரு தம்பி உண்டே; உனக்குத் தெரியுமா? அவன் பெயர் சங்கரன்."

"ஆமாம், அவர் வீட்டை விட்டு எங்கேயோ போய் விட்டார்."

"நான்தான் அந்தச் சங்கரன்" என்றார் சந்நியாசி. மிருத்யுஞ்ஜயன் நம்பிக்கையை இழந்து பெருமூச்சு விட்டான். புதையலின்மேல் தன் ஒருவனுக்குத்தான் உரிமை என்று எண்ணினான். தன் வமிசத்தவன் இன்னொருவனே போட்டிக்கு வந்துவிட்டானே!

"சந்நியாசியினிடமிருந்து காகிதம் கிடைத்த நாள் முதல் அதை அண்ணா என்னிடம் மறைத்து வைக்கப் பார்த்தார். அவர் அதை ஒளிக்க ஒளிக்க எனக்கு ஆவல் அதிகமாயிற்று. அவர் தேவியின் பீடத்துக்குக் கீழே அந்தக் காகிதத்தை வைத்திருந்தார். அது தெரிந்து நான் திருட்டுச் சாவி போட்டு அதைத் திறந்து தினமும் கொஞ்சங் கொஞ்சமாக அதில் இருந்ததை நகல் செய்துகொண்டேன். அது முடிந்த அன்றைத் தினமே அந்தப் புதையலைத் தேடிக்கொண்டு புறப்பட்டேன். என் மனைவி மக்களை அநாதையாக விட்டுச் சென்றேன். இன்று ஒருவரும் உயிருடன் இல்லை.

"நான் சுற்றிப் பார்க்காத இடமே இல்லை. அதையெல்லாம் விவரித்து என்ன ஆக வேண்டும்? சந்நியாசி

தந்த அந்தக் காகிதத்தில் உள்ளதை எந்தக் காஷாயதாரியாவது எனக்குத் தெளிவாகச் சொல்வாஞே என்று எண்ணி எத்தனேயோ சாதுக்களுக்குப் பணி விடை செய்தேன். எத்தனேயோ போலிச்சாமியார்கள் என் காகிதத்தைப்பற்றித் தெரிந்துகொண்டு அதைக் கைப்பற்றவும் முயன்ருர்கள். இப்படிப் பல வருஷங்கள் கழிந்தன. ஒரு கணமும் நிலேயின்றி அலேந்தது என் மனம். அமைதியை இழந்தேன்.

"கடைசியில் பூர்வஜன்ம புண்ணியவசமாகக் குமாரூன் மலேயில் பாபா ஸ்வரூபானந்த ஸ்வாமிகளேக் கண்டேன். அவர், 'அப்பா! ஆசையை ஒழி. அழியாச் செல்வம் தாஞகவே உன் கையில் சிக்கும் பார்' என்ருர்.

"என் மனத்தின் தாகத்தைப் போக்கிஞர். அவர் அருளால் வானின் ஒளியும் பூமியின் பசுமையுமே எனக்கு ராஜ ஐசுவரியமாகத் தோன்றின. ஒரு நாள் மலேயின் கல்தரையில் அந்தி வேளேயில் பாபா பரமஹம்ஸரின் ஹோமக் குழியில் தீ கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்தது. அந்தக் காகிதத்தை நான் நெருப்பில் இட்டேன். பாபா சற்றுச் சிரித்தார்; அந்த முறுவலின் அர்த்தம் அன்று எனக்கு விளங்கவில்லே. இன்று புரிகிறது எனக்கு. 'காகிதத்தை எரிப்பது சுலபந்தான். ஆஞல் அதன் நினேவு இவ்வளவு எளிதில் சாம்பலாகி விடுமா?' என்று அவர் கட்டாயமாக நினேத்திருப்பார்.

"காகிதம் முற்றும் சாம்பலானதும், என் உள்ளத்தைப் பிணேத்திருந்த நாகபாசம் அறுந்தது. விடுதலே பெற்ருேம் என்று மட்டிலா உவகை எய்தினேன். 'இன்றுமுதல் எனக்கு ஒரு பயமும் இல்லே. எனக்கு உலகில் எதுவும் அவசியமில்லே' என்று எண்ணினேன்.

"கொஞ்ச நாட்களுக்கெல்லாம் பாபா பரம ஹம்ஸரைப் பிரிந்தேன். எவ்வளவு தேடியும் அவரைக் காண முடியவில்லை.

"உடனே நான் துறவியாகிப் பற்றில்லாமல் ஊர் ஊராகத் திரிந்தேன். எத்தனையோ வருஷங்கள் சென்றன. அந்தக் காகிதத்தைப்பற்றி மறந்துவிட்டேன் என்றே சொல்லவேண்டும்.

"இந்தச் சமயத்தில் ஒரு நாள் தாராகோலின் காட்டில் நுழைந்து பாழடைந்த கோயில் ஒன்றில் தங்கினேன். இரண்டொரு நாட்கள் ஆனதும், கோயிலின் சுவரில் சில இடங்களில் சில அடையாளங்களைக் கண்ணுற்றேன். அவை எனக்கு முன்னால் பரிசயமானவையே.

"எதைத் தேடி ஒரு காலத்தில் அலைந்தேனோ, அது கிட்டும் என்பதில் ஐயம் எதுவும் எனக்குத் தோன்ற வில்லை. 'இங்கே இனி இருக்கக் கூடாது; சென்று விடுவோம்' என்று எண்ணினேன்.

"ஆனால் இதைவிட்டுப் போக முடியவில்லை. என்ன இருக்கிறது என்றுதான் பார்க்கலாமே என்றது என் உள்ளம். ஆவலை அடக்கிக்கொண்டு சென்றிருந்தாலே நல்லது. அந்த அடையாளங்களை வைத்துக்கொண்டு ஆராய்ந்தேன். பலன் ஒன்றும் கிடைக்கவில்லை. அந்தக் காகிதத்தை ஏன் கொளுத்தினோம் என்று தோன்றியது. அதை வைத்திருந்தால் என்ன குறைந்துபோய்விடும்!

"உடனே நான் பிறந்த ஊருக்கு மறுபடியும் சென்றேன். என் பிதிரார்ஜிதமான நிலத்தின் நிலையைக் கண்டு, 'நானோ துறந்தவன். செல்வம் எனக்கு அவசிய மில்லை; ஆனால் இந்த ஏழைகள் எல்லாரும் சம்சாரிகள்.

அந்தப் புதையலை இவர்கள்பொருட்டுத் தேடுவதில் தவறு என்ன ?' என்று நினைத்தேன்.

"அந்தக் காகிதம் இருந்த இடம் எனக்குத் தெரியும். ஆகவே, அதை எடுக்க எனக்கு யாதொரு கஷ்டமும் உண்டாகவில்லை.

"பின்னர் ஒரு வருஷ காலமாக அந்தக் காகிதத்தின் உதவியால் இந்த நிர்மானுஷ்யமான காட்டில் கணக்குப் போட்டுஆராய்கிறேன். இதோ கிடைத்தும்விட்டது. இனி யாதொரு கவலையும் இல்லை. எவ்வளவுக் கெவ்வளவு தடங்கல்கள் ஏற்பட்டனவோ அவ்வளவுக் கவ்வளவு ஆவலும் அதிகமாயிற்று. பித்தன்போல் பகல் இரவின்றி இந்த வேலையில் ஈடுபட்டிருந்தேன்.

"இதற்குள் எப்போது நீ என்னைத் தொடர ஆரம்பித்தாயோ எனக்குத் தெரியாது. சாதாரண நிலையில் இருந்தால் நீ ஒளிந்திருக்க முடியாது. ஆனல் நான் என்னையே மறந்திருந்தேன்; வெளி விஷயங்களில் மனம் செல்லவில்லை.

"இவ்வளவு நாளாகத் தேடியதை இதோ இப்போது தான் கண்டுபிடித்தேன். இங்கே உள்ள அளவு மணிகளும், செல்வமும் எந்த அரசனின் பொக்கிஷத் திலும் இல்லை. இன்னும் ஒரு சிக்கலை விடுவித்ததும் அந்தச் சொத்து அகப்பட்டுவிடும். ஆனல் இதையும் நான் மனத்துக்குள்ளேயே விடுவித்துக்கொண்டுவிட்டேன். ஆதலால்தான் என்னையும் மறந்து, 'கிடைத்துவிட்டது' என்று கூச்சலிட்டேன். இஷ்டப்பட்டால் இன்னும் ஒரு மணி நேரத்தில் சங்கநிதி பதுமநிதி இரண்டுக்கும் நான் அதிகாரி ஆகமுடியும்" என்று நிறுத்தினர்.

மிருத்யுஞ்ஜயன் சங்கரரின் கால்களைப் பற்றிக் கொண்டு, "நீங்கள் துறவி. உங்களுக்குப் பணம் அவசிய

மில்லை; என்னை அந்தப் பொக்கிஷ அறைக்குள் அழைத்துச் செல்லுங்கள். ஏமாற்றுதீர்கள்" என்றான்.

"இன்று என் கடைசித் தளையும் இற்றுப் போய் விட்டது. இதோ கல்லை எறிந்து என்னைக் கொல்ல முயன்றாயே; அதன் அடி என்மேல் படவில்லை. ஆனால் என் உள்ளத்தைக் கவிந்திருந்த மாயையை அது அகற்றியது. ஆசையின் பயங்கர உருவைக் கண்டேன். என் குரு பரமஹம்ஸதேவரின் புன்முறுவலின் மர்மத்தை இவ்வளவு காலம் கழிந்த பின்பாவது உணர்ந்தேனே! இன்று என் உள்ளத்தில் மங்களமான விளக்கொளியை அது ஏற்றிவிட்டது."

மிருத்யுஞ்ஜயன் சங்கரரின் காலைத் தொட்டு மீண்டும், "நீங்கள் பற்று அற்றவர். நான் துறந்தவன் அல்ல, எனக்கு விடுதலை வேண்டாம். புதையலைக் காட்டாமல் ஏமாற்றுதீர்கள்" என்றான்.

"குழந்தாய், இந்தா உன் காகிதம். உன்னால் முடிந்தால் தேடி எடுத்துக்கொள்" என்று மூங்கில் தடியையும் காகிதத்தையும் மிருத்யுஞ்ஜயனிடம் கொடுத்து விட்டு அப்பெரியார் போய்விட்டார். "தயை செய்யுங்கள்; என்னை விட்டுப் போகாதீர்கள்; எனக்கு வழி காட்டுங்கள்" என்றான் மிருத்யுஞ்ஜயன்.

பதில் ஒன்றும் இல்லை.

மிருத்யுஞ்ஜயன் தடியை ஊன்றிக்கொண்டே சுரங்கத்திலிருந்து வெளியேற முயன்றான். ஆனால் வழியோ ஒரே சிக்கலானது. அடிக்கு அடி தடைகள் ஏற்பட்டன. கடைசியில் சுற்றிச் சுற்றிச் சோர்ந்துபோய் ஓரிடத்தில் படுத்ததுமே கண்ணயர்ந்தான்.

தூங்க ஆரம்பித்தபோது இரவா பகலா, என்ன பொழுது என்றுகூடத் தெரிய வழி இல்லை. அதிகமாகப்

பசி எடுக்கவே மேல் துணியில் முடிந்திருந்த அவலைத் தின்ருன். பிறகு இன்னும் ஒரு முறை சுரங்கத்தை விட்டு வெளியேற வழி இருக்கிறதா என்று தடவிப் பார்க்கலானுன். பல இடங்களில் தடை ஏற்படவே, உட்கார்ந்து உரக்கக் கூச்சல் போட்டான் : "ஓய் சந்நியாசி! எங்கே இருக்கிறீர்கள் ?"

அவன் குரல் சுரங்கத்தின் கிளைப்பாதைகளில் எல்லாம் புகுந்து எதிரொலி செய்தது. பக்கத்திலிருந்து பதில் வந்தது : "இதோ, பக்கத்தில்தான் இருக்கிறேன். என்ன வேண்டும், சொல் ?"

மிருத்யுஞ்ஜயன் வேண்டும் குரலில், "எங்கே செல்வம் இருக்கிறது என்று காட்டுங்களேன், தயை செய்து" என்ருன்.

பதில் வரவில்லை. மிருத்யுஞ்ஜயன் மறுபடியும் கூப்பிட்டான். பதிலே இல்லை.

நாழிகை போவதே தெரியாத இந்தப் பாதாளத்தில், இருளில் இன்னும் ஒரு முறை தூங்கினுன் மிருத்யுஞ்ஜயன். மறுபடியும் அந்த இருட்டிலேயே கண் விழித்தான். "ஓய் ! இருக்கிறீரா ?" என்று கூச்சலிட்டான்.

பக்கத்திலிருந்து பதில் வந்தது : "இங்கேதான் இருக்கிறேன். என்ன வேண்டும் ?"

மிருத்யுஞ்ஜயன், "எனக்கு ஒன்றும் வேண்டாமே! இந்தச் சுரங்கத்திலிருந்து வெளியேற்றுங்கள்" என்ருன்.

"உனக்குப் பணம் வேண்டாமா ?"

"வேண்டாம் எனக்கு."

உடனே சக்கிமுக்கி உராயும் ஓசை கேட்டது. சில நிமிஷங்களுக்கெல்லாம் வெளிச்சம் தெரிந்தது. "அப்படியானுல் வா, மிருத்யுஞ்ஜயா ! வெளியே போகலாம்" என்ருர் சந்நியாசி.

மிருத்யுஞ்ஜயன் பரிதாபக் குரலில், "ஸ்வாமீ, என் எண்ணங்கள் இப்படியெல்லாம் வீணுக வேண்டுமா? இவ்வளவு துயரம் அநுபவித்த பின்னும் செல்வம் கிடைக்காதா?" என்ருன்.

அந்த க்ஷணமே தீவட்டி அணைந்தது. "என்ன கொடுமை!" என்று மிருத்யுஞ்ஜயன் அங்கேயே உட்கார்ந்து யோசிக்கலானுன். காலபரிமாணம் ஒன்றுமே தெரியவில்லை. இருளுக்கும் ஓர் எல்லை இல்லை. தன் உடல், மனம் இவற்றின் வன்மையால் அந்த இருளைத் தகர்த்து எறியலாமா என்று அவனுக்குத் தோன்றியது. விசித்திரமான வெளி உலகைக் காண அவன் மனம் துடித்தது. வெளிச்சத்துக்கும் காற்றுக்கும் அவன் மனம் ஏங்கியது. "ஓய் சந்நியாசியே! எனக்குச் செல்வம் வேண்டாம்; என்னை வெளியேற்றுங்கள்" என்ருன்.

"பணம் வேண்டாமே! அப்படியானுல் வா. என் கையைப் பிடித்துக்கொள். என்னுடன் வா" என்ருர் சந்நியாசி.

இம்முறை தீவட்டி எரியவில்லை, ஒரு கையில் தடியையும் மற்ருெரு கையில் சந்நியாசியின் உத்தரீயத்தையும் பிடித்துக்கொண்டு மிருத்யுஞ்ஜயன் மெல்ல நடந்தான். வெகு நேரம் வளைவான பாதைகளினூடே சுற்றிச் சுற்றி வந்ததும் சந்நியாசி ஓர் இடத்தில், "நில்" என்ருர்.

மிருத்யுஞ்ஜயன் நின்ருன். துருப்பிடித்த கதவு ஒன்று திறக்கும் ஓசை கேட்டது. சந்நியாசி மிருத்யுஞ்ஜயனின் கையைப் பற்றி, "வா" என்ருர்.

மிருத்யுஞ்ஜயன் முன்னுல் சென்று ஓர் அறையினுள் நுழைந்தான். அப்போது சக்கிமுக்கிக் கல் இழையும் ஒலி கேட்டது. சில கணங்களுக்கெல்லாம் வெளிச்சம் பரவியது.

இதென்ன, அற்புதமான காட்சி! நாலு பக்கமும் சுவரை ஒட்டிப் பெரிய தங்கப் பாளங்கள்; பூமிக்கடியில் புதைந் திருக்கும் சூரியனின் ஒளிக்கதிர்கள்போல் அடுக்கடுக்காக இருந்தன. மிருத்யுஞ்ஜயனின் கண்கள் இரண்டும் பூத்து விட்டன. பித்தன்போல் கூச்சலிட்டான்: "இந்தப் பொன் என்னுடையது. இதை விட்டு வரவே மாட்டேன்" என்றான்.

"சரி, இங்கேயே இரு; இதோ தீவட்டி. இங்கே ரொட்டி, அவல், பெரிய பானை ஒன்றில் குடிக்க ஜலம் எல்லாம் வைத்துவிட்டுப் போகிறேன்" என்றார்.

பார்த்துக்கொண் டிருக்கும்போதே அவர் வெளியே சென்றார். பொற்களஞ்சியத்தின் இரும்புக் கதவு மூடிக் கொண்டது.

மிருத்யுஞ்ஜயன் அந்தப் பொற்பலகைகளை அடிக்கடி தொட்டுக்கொண்டே சுற்றிச் சுற்றி வந்தான். சிறு பொன் துண்டுகளை எடுத்துத் தரையின்மேல் போடுவதும், மடியில் எடுத்து வைத்துக்கொள்வதும், ஒன்றன்மேல் ஒன்றைத் தட்டி ஓசை உண்டாக்குவதும், தன் உடலெங்கும் தடவி அதன் ஸ்பரிசத்தை அநுபவிப்பதுமாக இருந்தான். கடை சியில் சோர்ந்துபோய்ப் பொற்பாளங்களைப் பரப்பி அவற் றின்மேல் படுத்துத் தூங்கினான்.

எழுந்து பார்த்தால் நாலு பக்கமும் பொன் தக தக வென்று சுடர் விடுகிறது. தங்கத்தைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை. உலகத்தில் இப்போது விடி நேரமாக இருக்கும். எல்லா உயிர்களும் களிப்புடன் விழித் தெழும். வீட்டுக் குளத்தின் ஓரமாக உள்ள தோட் டத்தில் இனிய மணம் இந்தக் காலை வேளையில் வீசு மல்லவா! கற்பனையிலும் அதன் மணம் அவன் மூக்குக்கு

எட்டியது. வாத்துக்கள் கூட்டங் கூட்டமாக, அசைந்து அசைந்து கூச்சல் போட்டவாறு அவன் வீட்டுக் குளத்தில் வந்து குதிப்பது, வீட்டு வேலைக்காரி பாமா வலது கையில் சில தாம்பாளங்களை ஏந்தித் துறைக்கு வருவது யாவும் அவன் கண்முன் எழுந்தன.

மிருத்யுஞ்ஜயன் கதவைத் தட்டி, "ஓய்! எங்கே இருக்கிறீர்?" என்றான்.

கதவு திறந்தது. "என்ன வேண்டும்?" என்றார் சந்நியாசி.

"நான் வெளியேற வேண்டும். ஆனால் என்னுடன் இரண்டொரு பொன் தகட்டை எடுத்துச் செல்லக் கூடாதா?" என்றான் மிருத்யுஞ்ஜயன்.

அவர் ஒன்றும் பேசாமல் தீவட்டியைக் கொளுத்தினார். நீர் நிரம்பிய கமண்டலுவையும் மேல் துணியிலிருந்து இரண்டொரு பிடி அவலையும் வைத்துவிட்டு வெளியேறினார். கதவு மூடிக்கொண்டது.

மிருத்யுஞ்ஜயன் மெல்லிய பொன் துண்டு ஒன்றை எடுத்து அதை மடித்துத் துகளாக்கினான். அவைகளை அறையின் நாலு பக்கமும் மண்கட்டிகளைப்போல் வீசி எறிந்தான். பல்லால் கடித்து அடையாளம் செய்தான். ஒரு தடவை காலால் அவைகளை உதைத்தான். 'என்னைப் போல் பொன்னை இப்படி எறிந்து விளையாடும் அரசன் எவன் இருக்கிறான்?' என்று எண்ணிக்கொண்டான். மிருத்யுஞ்ஜயனின் ஆவல் மங்கியது. இந்தப் பொன் துண்டங்களைப் பொடி செய்து காற்றில் பறக்கவிட்டுப் பொன்னாசை பிடித்த மன்னர்களை ஏளனம் செய்யலாமா என்று எண்ணினான்.

இவ்வாறு முடிந்தவரையில் பொற்பாளங்களோடு விளையாடிவிட்டுக் கடைசியில் களைத்துப் போய்த் தூங்கி விட்டான். உறங்கி விழித்தபின்பும் நாலு பக்கமும் தங்கக் குவியல்! வாசல் கதவைத் தட்டி உரக்கக் கூவினான்: "ஓய் சந்நியாசி! எனக்குப் பொன் வேண்டாம், வேண்டாம்!" என்றான்.

ஆனால் கதவு திறக்கிற வழியாக இல்லை. கூவிக் கூவி மிருத்யுஞ்ஜயனின் தொண்டை வறண்டுவிட்டது. ஒவ்வொரு பொன் துண்டாகக் கதவின்மேல் மோதி அறைந்தான். பலன் இல்லை; மிருத்யுஞ்ஜயனின் மார்பு அடைத்தது. 'சந்நியாசி வரவே மாட்டாரா? இந்தப் பொன் கூட்டினுள் கிடந்து அணு அணுவாக வற்றி உலர்ந்து சாக வேண்டுமா?'

பொன் குவியலைக் கண்டதும் அவன் உள்ளம் மீண்டும் அலைந்தது. பயங்கரத்தின் கொடூரச் சிரிப்புப் போலத் தங்கப் பாளங்கள் அவனைப் பார்த்து இளித்தன. அவற்றுக்கு உயிர்த்துடிப்பு இல்லை; மாறுதல் இல்லை. மிருத்யுஞ்ஜயனின் உள்ளம் நடுங்கியது; ஏங்கியது. அவனுக்கும் அவைகளுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை; துயரப்பட வேண்டிய அவசியமும் இல்லை. அந்தத் தங்கக்கட்டிகளுக்கு வெளிச்சம் அவசியமில்லை; காற்றும் தேவை இல்லை; உயிரும் விடுதலையும் வேண்டியதில்லை; அவை இந்த இருளில் கடினம் பாய்ந்து பிரகாசமாக விளங்கின.

உலகில் அப்போது அந்தி வேளை. அந்தப் பொன்னிற ஒளி! அந்தச் செக்கர் வானம்! கணநேரம் கண்களை மயக்கிவிட்டு இருளோடு கலந்தவாறு மறைகிறது. தொழுவத்தில், அவன் மனைவி மாடத்தில் அகல் விளக்கு

ஏற்றி வைப்பாள். கோயிலில் நைவேத்தியத்தின்போது மணி ஒலிக்கும்.

ஊரிலும் வீட்டிலும் நடக்கும் அற்ப விஷயங்கள்கூட இன்று அவனுக்குத் தெற்றெனத் தோன்றின. அவர்களுடைய தூங்குமூஞ்சி நாய் வாலையும் தலையையும் சுருட்டிக்கொண்டு முற்றத்தின் ஓரத்தில் தூங்கும் காட்சிகூட நினைவுக்கு வந்து அவன் மனத்தை அசைத்தது. 'தாராகோல் கிராமத்தில் மளிகைக் கடையில் இருந்தோமே; கடைக்காரன் இப்போது விளக்கை அணைத்துவிட்டு, கடையைச் சாத்திக்கொண்டு மெல்ல வீட்டை நோக்கிச் சாப்பிடச் செல்வான். அந்தக் கடைக்காரன், கவலையோ விசனமோ இன்றி எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறான்! இன்று என்ன கிழமையோ! ஞாயிற்றுக்கிழமையானல் இப்போது சந்தையிலிருந்து ஜனங்கள் திரும்பிக்கொண்டிருப்பார்கள். பின்தங்கிய தோழனை உரத்துக் கூப்பிடுவார்கள். கூட்டங் கூடிப் படகுகளில் அக்கரை செல்வார்கள். மண் பாதையோடு, வரப்புகளைக் கடந்து சருகு உதிர்ந்த கிராமத்துச் சாலைவழியாகக் குடியானவர்கள் இரு கைகளிலும் மீனைத் தொங்க விட்டுக்கொண்டு தலையில் கூடையுடன், இருளில், தாரகை விடும் ஒளியில் வேற்றூர் சென்றுகொண் டிருப்பார்கள்.' இவ்வாறு பூமிக்கு மேல் நடமாடும் மாந்தருடைய வாழ்க்கையில் கலந்துகொள்ள உலகம் தன்னை அழைப்பதுபோல் இருந்தது அவனுக்கு.

அந்த வாழ்க்கை, அந்த ஆகாயம், அந்த வெளிச்சம் எல்லாம் இந்த மணி மாணிக்கங்களைவிட உயர்ந்தவை என்று அவனுக்குத் தெரிந்தது. ஒரு கணப்போது மட்டும் வெளியேறிப் பசுமை போர்த்த மாநிலத் தாயின் புழுதி நிறைந்த மடியில் படுத்து, ஒளி திகழும் நிர்மலமான

நீல ஆகாயத்தின்கீழ்ப் புல்லின் நறுமணம் ஏந்திய காற்றை ஒரு முறை மனமார உட்கொண்டபின் செத்தால் தான் நிம்மதி ஏற்படும் என்று பட்டது அவனுக்கு.

அதே சமயத்தில் கதவு திறந்தது. சந்நியாசி உள்ளே நுழைந்து, "மிருத்யுஞ்ஜயா, என்ன வேண்டும்?" என்ருர்.

"எனக்கு ஒன்றுமே வேண்டாம். இந்தச் சுரங்கத்திலிருந்து, இந்த இருட்டிலிருந்து, இந்தப் புதரிலிருந்து, இந்தப் பொன் சிறையிலிருந்து என்னை வெளியேற்றிஞல் போதும். எனக்கு ஒளி வேண்டும்; காற்று வேண்டும். விடுதலை வேண்டும்."

"இந்தத் தங்கக் குவியலைவிட விலை மதிப்புள்ள ரத்தினக் குவியல்கள் உள்ளன. ஒருமுறை பார்க்கிருயா?

"எனக்கு வேண்டாமே!"

"ஒருதரம் பாரேன்."

"வேண்டவே வேண்டாம். இஷ்டமே இல்லை. கோவணம் தரித்துப் பிச்சை எடுத்துத் திரிந்தாலும் சரி; இங்கே இனி ஒரு கணமும் நில்லேன்."

"சரி, வா! அப்படியாஞல் வா."

அவர் மிருத்யுஞ்ஜயனின் கையைப் பிடித்து அந்தக் கிணற்றின் அருகில் அழைத்துச் சென்ருர். அவன் கையில் அந்த பழுப்புக் காகிதத்தைத் தந்து, "இதை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிருய்?" என்ருர்.

மிருத்யுஞ்ஜயன் அந்தக் காகிதத்தைத் துண்டு துண்டாகக் கிழித்துப் பாழுங் கிணற்றில் எறிந்தான்.

# ஓய்வு

கிராமச் சிறுவர்களின் தலைவன் படிக சக்ரவர்த்திக்குச் சட்டென்று ஒரு யோசனை உதித்தது. ஆற்றோரமாகப் பெரிய சாலமரக் கிளை ஒன்று கிடந்தது. அதைப் படகுக் கூம்பாகச் சீவச் சமயம் பார்த்துக்கொண்டிருந்தான் அதன் சொந்தக்காரன். அதைச் சிறுவர்கள் எல்லோருமாகச் சேர்ந்து தள்ளிக்கொண்டு போவது என்று தீர்மானித்தார்கள்.

அதன் சொந்தக்காரன் தனக்கு வேண்டும்போது, வந்து பார்க்கையில் அதைக் காணுமல் எவ்வளவு திடுக்கிடுவான்! இந்தக் குறும்புக்காகவே சிறுவர்கள் ஏகோபித்துப் படிகனின் யுக்தியை வரவேற்ருர்கள்.

கச்சையை இழுத்துக் கட்டிக்கொண்டு எல்லோருமாக ஓரே மனத்துடன் காரியத்தில் இறங்கினபோது படிகனின் தம்பி மாகன்லால் ஒன்றும் தெரியாதவன்போல் அந்தக் கிளையின் மேல் போய் உட்கார்ந்தான். சிறுவர்கள் அவனுடைய உதார எண்ணத்தைக் கண்டதும் சற்று மனம் கலங்கினுர்கள்.

ஒருவன் பயந்துகொண்டே அவனைச் சற்றுத் தள்ளினுன். ஆனுல் மாகன் அசைவதாகக் காணவில்லை. வயதுக்கு மீறிய புத்திசாலியான இந்தப் பையன் விளையாட்டு, வேடிக்கைகளின் பயனின்மையைப்பற்றிச் சிந்திக்கலானுன்.

படிகன் அதட்டினுன், "டேய், உதை வேணுமா! மரியாதையாக எழுந்திரு."

மாகன் சற்று நகர்ந்து நன்ருக உட்கார்ந்தான்.

சாதாரணமாகத் தன் மரியாதையைக் காப்பாற்றப் படிகன் சொன்ன வார்த்தையைக் கேட்காத தம்பியின் கன்னத்தில் ஓர் அறை விட்டிருக்க வேண்டும். ஆனால் அவனுக்குத் துணிச்சல் இல்லை. வழக்கப்படி அவனை இப்போதே அடக்க வேண்டும் என்ற ஓர் எண்ணமும் தோன்றியது. ஆனால் முன்னைவிட அதிகத் தமாஷை உண்டுபண்ணும் இன்னொரு விஷமம் அவன் மூளையில் எழுந்தது. "மாகனோடு கூடவே இந்தக்கிளையை உருட்டிவிடலாமடா" என்று பையன்களைப் பார்த்துச் சொன்னான்.

இதில் தனக்குப் பெருமை உண்டென்று மாகன் எண்ணினான்; ஆனால் ஆபத்து இருப்பது அவனுக்கோ அவன் நண்பர்களுக்கோ தோன்றவில்லை.

சிறுவர்கள் கச்சை கட்டிக்கொண்டு தள்ள ஆரம்பித்தார்கள்.—" தூக்கித் தள்ளுங்க! ஐலஸா! பலே ஸபாஷ் ஐலஸா!" கிளை ஒருதரம் மாகனுடன் உருளுவதற்குள் அவனுடைய துணிச்சல், பிடிவாதம், தத்துவஞானம் எல்லாம் புழுதியில் புரண்டன.

ஆரம்பத்திலேயே எதிர்பாராத இந்தப் பலன் கிடைக்கவே, மற்றச் சிறுவர்கள் மிகவும் ஆனந்தம் அடைந்தார்கள். ஆனால் படிகனின் மனம் படபடத்தது. மாகன் அந்தக் கணமே தரையிலிருந்து எழுந்து படிகன்மேல் விழுந்து கண்ணை மூடிக்கொண்டு அடிக்கலானான். முகத்தில் எல்லாம் நகத்தால் பிராண்டிவிட்டு அழுது கொண்டே வீட்டை நோக்கிச் சென்றான். விளையாட்டு நின்றுவிட்டது.

படிகன் இரண்டொரு நாணலை வேரோடு பிடுங்கிக் கொண்டு, பாதி மூழ்கின படகின் மேல்தளத்தில் உட்கார்ந்து மெளனமாக அதன் நுனியை மென்றுகொண்டிருந்தான்.

இந்தச் சமயத்தில் வெளியூர்ப் படகு ஒன்று துறையில் வந்து நின்றது. நடுவயதினரான ஒருவர், கருமையான மீசையோடும் நரைத்த தலையோடும் வெளியே வந்தார். சிறுவனை நோக்கி, "சக்கரவர்த்திகள் வீடு எங்கே?" என்றார்.

நாணலைச் சப்பிக்கொண்டே படிகன், "அதோ அங்கே" என்றான். அவன் எந்தப் பக்கம் காட்டினான் என்று யாருக்கும் தெரியவில்லை.

"எங்கேயப்பா?" என்று அவர் மறுபடியும் கேட்டார்.

"எனக்குத் தெரியாது" என்று சொல்லிவிட்டு, படிகன் முன்போல் நாணலை வாயில் அரைக்கும் காரியத்தில் ஈடுபட்டான். மற்றச் சிறுவர்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டு அவர் சக்கரவர்த்திகள் வீடு நோக்கி நடந்தார்.

கொஞ்ச நேரங் கழித்து அவர்கள் வீட்டில் வேலை செய்யும் இருளச்சி வந்து, "படிக் பாபு, அம்மா கூப்பிடறாங்க" என்றாள்.

"வரமாட்டேன், போ" என்றான் படிகன்.

பலாத்காரமாக இருளச்சி அவனை இடுப்பில் தூக்கிக் கொண்டு நடக்கலானாள். தன் கோபம் வீணானதைக் கண்டு படிகன் காலையும் கையையும் உதைத்துக்கொண்டான்.

படிகனைக் கண்டதும் அவன் தாய்க்கு அடங்காத கோபம் வந்தது. "ஏண்டா திரும்பவும் மாகனை அடித்தாய்?" என்றாள்.

"இல்லை, அம்மா" என்றான் படிகன்.

"ஏண்டா புளுகறே?"

"இல்லவே இல்லை, அம்மா! அவனையே கேட்டுப் பார்."

மாகன் அழுதுகொண்டே, முன் சொன்னதையே திருப்பிச் சொன்னான். "ஆமாம், அடிச்சான்."

படிகனுக்குக் கோபம் தாளவில்லை. பரபரவென்று போய் மாகனைப் பளீரென்று அறைந்து, "திருப்பியுமா பொய் சொல்லறே!" என்றான்.

அவன் தாய் மாகனுடன் சேர்ந்துகொண்டு படிகனைக் குலுக்கி முதுகில் இரண்டு மூன்று அடி வைத்தாள். படிகன் தாயாரைப் பிடித்துத் தள்ளினான்.

"என்மேலேயா கை நீண்டறே!" என்றாள் அவள் கோபத்துடன்.

இதே சமயம் நடுத்தர ஆள் ஒருவர் உள்ளே நுழைந்து, "என்ன நடந்தது?" என்றார்.

படிகனின் தாய் வியப்பும் ஆனந்தமும் மேலிட, "அடியம்மா! அண்ணவா! எப்போ வந்தாய்?" என்று சொல்லியவாறு நமஸ்காரம் செய்தாள்.

வெகு நாட்களாயின; அண்ணா மேற்கே வேலை பார்க்கச் சென்றார். அதற்குள் அவளுக்கு இரண்டு பிள்ளைகள் பிறந்து பெரியவர்கள் ஆகிவிட்டார்கள். அவளுடைய கணவன் இறந்து போய்விட்டான். ஆனால் ஒரு முறைகூட அண்ணாவைக் காணவில்லை. அநேக தினங்களுக்கப்புறம் இன்று ஊருக்குத் தம் தங்கையைக் காண வந்திருக்கிறார், விசுவம்பர பாபு.

சில நாட்கள் ஒரே தடபுடல்; புறப்படுவதற்கு இரண்டு நாட்களுக்கு முன், பிள்ளைகளின் படிப்பைப் பற்றி விசுவம்பரர் தங்கையைக் கேட்டார். "படிகன் அடங்காப் பிடாரி; படிக்கிறதே இல்லை. மாகன்

ரொம்ப சாது; நல்ல குணம்; படிப்பில் அவனுக்கு எவ்வளவு ஆசை தெரியுமா? எனக்கு எரிச்சலை மூட்டு கிருன், அண்ணு, படிகன்" என்ருள் படிகனின் தாய்.

படிகனைத் தன்னுடன் கல்கத்தாவுக்கு அழைத்துச் சென்று படிக்க வைப்பதாக விசுவம்பரர் சொன்ஞர். விதவைத் தங்கை இதற்கு உடன்பட்டாள்.

படிகனைப் பார்த்து, "டேய், மாமாவோடு கல்கத்தா போகிருயா?" என்ருள்.

"போவேன்" என்று படிகன் குதித்துக்கொண்டே சொன்ஞன்.

படிகனை அனுப்பிவிட அவன் தாய்க்குச் சம்மதந் தான். ஏனென்ருல், 'என்றைக்காவது மாகனை ஆற்றில் தள்ளிவிடப் போகிருனே; மண்டையை உடைத்துவிடப் போகிருனே; ஏதாவது முரட்டுத்தனமாகச் செய்து விட்டால்?...' என்ற அச்சமே குடிகொண் டிருந்தது அவள் உள்ளத்தில். ஆனுலும் படிகன் தன்னை விட்டுச் செல்ல இவ்வளவு ஆவல் காட்டவே அவளுக்குச் சற்றுத் துயர் ஏற்பட்டது.

"எப்போது போவாய்?" என்று படிகன் மாமாவை அரிக்கலாஞன். அவனுக்கு இருந்த சந்தோஷத்தில் ராத்திரித் தூக்கங் கூட வரவில்லை.

கல்கத்தாவில் மாமா வீட்டுக்குச் சென்றதும், மாமியை முதலில் கண்டு பேசினுன் படிகன். இந்த அநாவசிய மான பிரகிருதி ஒன்று தன் குடும்பத்தில் வந்து சேர்ந்தது மாமிக்குப் பிடிக்கவில்லை. தன மூன்று பிள்ளைகளுடன் ஒரு மாதிரியாகக் குடித்தனம் செய்துகொண் டிருக்கும்போது திடீரென்று நடுவே பதின்மூன்று வயதான, பழக்கமில்லாத பட்டிக்காட்டுச் சிறுவனைக் கொண்டுவந்தால் எவ்வளவு கலவரங்கள் ஏற்படும்? விசுவம்பரருக்கு இவ்வளவு

வயதாயிற்று; என்ன செய்கிறோம் என்ற யோசனையே இல்லை அவருக்கு!

முக்கியமாகப் பதின்மூன்று, பதினான்கு வயதுப் பிள்ளையைப் போல ஒரு தொல்லையே கிடையாது. அழகும் கிடையாது; எதற்கும் உதவாதவன். அவனிடம் ஆதரவு காட்டவும் தோன்றாது. கூட இருக்கவும் வேண்டாம் என்றே தோன்றும். பேச்சில் பாதி முட்டாள் தனமாகவும் பாதி உளறலாகவும் இருக்கும். அதிகப் பிரசங்கியாக இருப்பான். திடுமென்று சொக்காய், துணியின் அளவுக்கு மீறி வளர்ந்துவிடுவான். எல்லாரையும் அலட்சியமாகப் பேசிவிடும் வயது. வாலிபத்தின் அழகும், குரலின் இனிமையும் திடீரென்று மாறிப்போகும் பருவம். குழந்தைப் பிராயத்திலும், இளமையிலும் ஒருவன் செய்யும் தவறுகளை மன்னித்து விட முடியும். ஆனால் இந்த இடைப்பட்ட வயதில் வரும் கோளாறுகள் இயல்பானவை என்றாலும், எல்லாருக்கும் எரிச்சலையே மூட்டும். அவனுக்கும் உலகமே தன் வழிக்கு வராதது போல் தோன்றும். அதனால் எதற்கும் மன்னிப்புக் கோரும் குணமும், ஒருவித லஜ்ஜையும் தோன்றும். இருந்தாலும், அன்புக்காக அவன் உள்ளம் அதிகமாக ஏங்கி அலையும். தகுந்தவர்களிடத்தில் ஆதரவோ, அநுதாபமோ கிடைக்கும்பட்சத்தில், இந்த வயதில் பிள்ளைகள் தம் உயிரையும் கொடுக்கக் கூடியவர்கள். ஆனால் யாரும் இந்தப் பிராயத்துப் பிள்ளைகளிடம் அதிக அன்பு காட்டமாட்டார்கள். ஆகவே, இவர்களது தோற்றமும் மனோபாவனைகளும் ஏறக்குறைய நடுத்தெரு நாய்களுக்கு ஒப்பாகவே இருக்கும் இந்த நிலையில் தாயின் வீட்டைத் தவிரப் பழக்கமில்லாத மற்றோர் இடம் அவர்களுக்கு நரகந்தான். நாலு பக்கங்களிலும் அன்பற்ற ஒரு சுற்றம் அவனை முள் போல

ஒவ்வொரு கணமும் பாதிக்கிறது. இந்த வயதில்தான் சாதாரணமாகப் பெண்களை வானுலகு அரம்பையர் என்றே அவன் எண்ணுவது வழக்கம். இந்த இனத்தவர் காட்டும் அலட்சியமே அவனுக்குப் பொறுக்க முடியாமல் இருக்கும்.

மாமியின் கண்ணுக்கு அவன் ஒரு கெட்ட கிரகம் போல் உறுத்துவதுதான் அவன் மனத்தை மிகவும் வாட்டியது. தப்பித் தவறி மாமி ஏதாவது வேலையிட்டால் சந்தோஷத்துடன் செய்யப் போய், அதிகப்படியாகவே செய்துவிடுவான். கடைசியில் மாமி, அவன் சந்தோஷத்தைக் குலைத்தவாறு, "போதுண்டாப்பா போதும்! அதில் இனிமேல் நீ கை வைக்க வேண்டாம். உன் காரியத்தைப் பார். போய்ப் படி" என்பாள். தன் படிப்புக்காக மாமி இவ்வளவு கவலை கொள்வது பெருங் கொடுமை என்று அவனுக்குத் தோன்றும்.

வீட்டுக்குள்ளேயே ஆதரவு இல்லை என்றால் வெளியே எங்கேதான் அவன் சற்று நிம்மதியாக இருப்பான்? வீட்டுக்குள் அடைபட்டுக் கிடக்கும்போது தன் ஊரைப்பற்றி நினைத்துக்கொள்வான்.

அவனுக்குப் பழைய நினைவுகளெல்லாம் வரும். பாணக் காற்றாடியை விர்ரென்று பறக்கவிட்டுக்கொண்டு திரிந்த மைதானம், தந்தானப் பாட்டுப் பாடிக்கொண்டு உலாவிய ஆற்றங்கரை, நினைத்தபொழுது குதித்து நீச்சல் அடித்த அந்தச் சிற்றாறு, அவனுடைய கூட்டாளிகள், தொல்லைகள், சுயேச்சை; எல்லாவற்றையும்விட அல்லும் பகலும் திட்டும் அந்தத் தாயின் முகம் எல்லாம் குவிந்து வந்து அவன் உள்ளத்தைத் துயரில் ஆழ்த்தும்.

இன்னதென்று தெரியாத ஒரு ஜடமான அன்பு, சற்று அண்டி இருக்கவேண்டுமென்ற ஒரு குருட்டுப்

பாசம், புரிபடா வியாகுலம், தாயை நினைத்து அழும் குழந்தைபோல் பொங்கி வரும் ஓர் அழகை - இவை, மனம் குன்றி, எல்லாரும் வெறுக்கும் இந்தச் சிறுவனின் உள்ளத்தைக் கலக்கும்.

இவ்வளவு பெரிய முட்டாளும், பராக்கான பையனும், பள்ளிக்கூடத்தில் யாரும் இல்லை. ஒரு கேள்வி கேட்டால் வாயைப் பிளந்துகொண்டு நிற்பான் படிகன். வாத்தியார் அடித்தால் சுமை தூக்கும் சமுதையைப்போல் கம்மென்று சகித்துக்கொள்வான். சிறுவர்களை விளையாட விட்டதும், இவன் மட்டும் தொலைவில் இருக்கும் வீட்டு மாடிகளைப் பார்த்தவாறு நிற்பான். பிற்பகல் வெயிலில் அந்த மெத்தைகளில் இரண்டொரு சிறுவர்கள் ஒரு கணம் தோன்றி மறைவார்கள். அப்போதெல்லாம் அவன் உள்ளம், அவர்களுடன் கலந்துகொள்ளத் துள்ளும்.

ஒரு நாள் ஏதோ முடிவுக்கு வந்து தைரியமாக மாமாவிடம், "மாமா. அம்மாவிடம் எப்போது அனுப்பு வாய்?" என்று கேட்டான்.

மாமா, "பள்ளிக்கூடம் லீவு விடட்டும்" என்ருர். நவராத்திரியின்போது விடுமுறை. இன்னும் எத்தனையோ நாள் இருக்கிறதே!

ஒரு நாள் படிகன் பாடப்புத்தகத்தைத் தொலைத்து விட்டான். ஏற்கனவே பாடம் படிப்பதில்லை என்ற குறை; புத்தகம் வேறு தொலைந்து போகவே, ஒரே மோசமாகிவிட்டது அவன் நிலை. வாத்தியார் அவனைத் தினமும் அடிக்க ஆரம்பித்தார். அவனுடைய அப்பான் சேய்கள் அவனுடன் சேரத் தயங்கினர்; அவனுக்கு அடி விழுந்தால் மற்றச் சிறுவர்களைக்காட்டிலும் அதிக ஆனந்தம் அடைந்தனர்.

தாங்க முடியாமல் படிகன் மாமியிடம் போய்க் குற்ற வாளியைப் போல், "புத்தகம் தொலைஞ்சுபோச்சு!" என்றான்.

மாமி முகஞ் சுளித்து, "நல்ல வேலை பண்ணினாய்! மாதத்திலே அஞ்சு தடவை என்றாலே புத்தகம் வாங்கித் தர முடியாது" என்றாள்.

படிகன் வேறு ஒன்றும் பேசாமல் திரும்பினான். பிறர் பணத்தை வீண் செய்கிறோமே என்று தாயின்மேல் கோபங் கோபமாக வந்தது. தன் ஏழைமை அவனை உள்ளூற வருத்தியது.

பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பியதும் அன்றிரவு தலை வலி; உடம்பெல்லாம் நோவு எடுக்க ஆரம்பித்தது. படிகனுக்கு ஜுரம். வியாதி அதிகமானால் மாமிக்கு வீண் கஷ்டம் என்று அவனுக்கு தெரியும். நோயுற்ற இந்த நிலையில் இவ்வதிசயமான முட்டாள் சிறுவன் தன் அன்னையைத் தவிர வேறு யாரிடமும் பணிவிடையை எதிர் பார்க்க முடியாது. இது அவனுக்கு நன்றாகத் தெரியும்.

மறு நாள் காலை படிகனைக் காணவில்லை. அண்டை வீட்டுக்காரர்களைக் கேட்டதில் ஒரு விஷயமும் தெரிய வில்லை.

ஆவணி மாதம், மழை கனத்த தூற்றலாகக் கொட்டியது. அவனைத் தேட ஆட்கள் மழையில் நனைய வேண்டியிருந்தது. எங்கேயும் காணாமல் விசுவம்பர பாபு போலீஸுக்கு அறிவித்துவிட்டு வந்தார்.

சாயங்காலம் அவர் வீட்டு வாசலில் ஒரு வண்டி வந்து நின்றது. அப்போதும் மழை தூறிக்கொண் டிருந்தது. தெருவில் முழங்கால் அளவுக்கு ஜலம் ஓடிக் கொண்டிருந்தது.

இரண்டு போலீஸ்காரர்கள் வண்டியிலிருந்து படிக னைத் தூக்கிவந்து விசுவம்பர பாபுவிடம் சேர்த்தனர். பையன் தெப்பமாக நனைந்திருந்தான். உடம்பெல்லாம் சேறு. முகமும் கண்ணும் செவேலென்றிருந்தன. உடல் நடுங்கியது. அவனைத் தூக்கிக்கொண்டு உள்ளே சென்றார் விசுவம்பர பாபு.

மாமி அவனைக் கண்டதுமே, "பிறத்தியார் பிள்ளையை வச்சுண்டு இந்தக் கஷ்டத்தை அநுபவிப்பானேன்? வீட்டுக்கு அனுப்பிவிடுங்கோ!" என்றாள்.

வாஸ்தவமாகவே அன்று அவளுக்குச் சாப்பிடவே பிடிக்கவில்லை; தன் குழந்தைகளின்மேல்கூட எரிந்து விழுந்தாள்.

படிகன் அழுதுகொண்டே, "நான் அம்மாவிடம் போனேனே! ஏன் என்னை அழைச்சிண்டு வந்தாய்?" என்றான்.

காய்ச்சல் அதிகமாயிற்று. வாய் பிதற்றல் கண்டது. விசுவம்பர பாபு டாக்டரை அழைத்துவந்தார்.

படிகன் தன் சிவந்த கண்களைத் திறந்து கூரையைப் பார்த்தவாறு, "மாமா, நேக்கு லீவு விட்டாச்சா?" என்றான்.

விசுவம்பரர் கைக்குட்டையால் கண்களைத் துடைத்துக்கொண்டார். நோயால் மெலிந்த அவன் கையை அன்புடன் தம் கையில் எடுத்துக்கொண்டு அவன் அருகே அமர்ந்தார்.

படிகன் மறுபடியும் உளர ஆரம்பித்தான்: "அம்மா, என்னை அடிக்காதேயேன். நான் ஒண்ணும் பண்ணலையே நிச்சயமாய்!"

மறு நாள் சற்று நேரம் நினைவு இருந்தபோது, படிகன் யாரையோ எதிர்பார்ப்பதுபோல் மருள மருள விழித்துக் கொண்டிருந்தான். சப்பிட்டுப் போய் மறுபடியும் சுவரின் பக்கம் திரும்பினான். சன்னியின் வேகம் அதிகரித்தது.

விசுவம்பர பாபு அவன் எண்ணத்தை உணர்ந்து கொண்டு, "படிகா, உன் அம்மாவுக்குச் சொல்லி அனுப்பி யிருக்கிறேனடா" என்று மெதுவான குரலில் சொன்னார்.

மறு நாளும் கழிந்தது. டாக்டர் முகத்தில் கவலைக்குறி தோன்ற, "நிலைமை ரொம்ப மோசமாக இருக்கிறது" என்றார்.

விசுவம்பர பாபு அந்தி விளக்கொளியில் படுக்கையில் உட்கார்ந்து படிகனுடைய தாயின் வரவை எதிர்நோக்கி யிருந்தார்.

படிகன் 'ஜலஸா, ஜலஸா' என்று ராகம் போட்டுப் பாடலானான். கல்கத்தாவுக்கு வரும்போது சாமான் ஏற்றிச் செல்லும் சில ஸ்டீமர்கள் வந்தன. கயிறு கட்டிக் கூலிகள், பாட்டுப் பாடியவாறு ஜலத்தின் ஆழத்தை அளப்பார்கள். படிகன் அவர்களைப் போல் மெதுவாகப் பாடியவாறு, தான் ஜலம் இறைப்பதுபோலவும், ஆழமான கடலில் யாத்திரை செய்வதுபோலவும் கனவு கண்டான். அவன் அளக்கும் கடலுக்கு ஆழம் ஏது?

இதே சமயம் படிகனின் தாய் வேகமாக உள்ளே நுழைந்து அலறினாள். விசுவம்பர பாபு அவளுக்குத் தேறுதல் சொன்னார். அவனது படுக்கையின்மேல் தொபீரென்று விழுந்து உரத்த குரலில், "என் தங்கமே! படிகா!" என்று ஓலமிட்டாள்.

படிகன், 'ஊம்' என்றான் குரல் ஒடுங்கிப்போய்.

அவன் தாய் மறுபடியும், "படிகா, என் அப்பனே!" என்றாள்.

படிகன் திரும்பிப் புரண்டவாறு கண் எங்கோ நிலைக்க, "எனக்கு லீவு விட்டுட்டாம்மா. நான் வீட்டுக்குப் போகிறேன்" என்று பிதற்றினான்.

# கண் கொடு

இந்தக் காலத்தில் வங்காளிப் பெண்கள் தங்களுக்கேற்ற கணவன்மாரைச் சொந்த முயற்சியாலேயே தேடிக் கொள்கிருர்கள். ஆனுல் நான் தெய்வத்தின் உதவியைக் கொண்டு என் கணவனை வரித்தேன். சிறு வயது முதற் கொண்டு இதற்காக நான் நோற்ற நோன்புகள் எத்தனையோ; புண்ணிய சிவபூஜைகளுக்குக் கணக்கில்லை.

எனக்கு எட்டு வயது நிரம்பியதும் விவாகமாகி விட்டது. ஆனுல் முன்செய்த பாப வினையினுல் கணவனைப் பெற்றும் அவரைப் பூர்ணமாக அடையும் பாக்கியத்தைச் செய்யவில்லை. முக்கண் படைத்த ஜகன்மாதா என் இரு கண்களையும் கொள்ளை கொண்டாள். வாழ்வின் கடைசி நிமிஷம் வரையில் புருஷனைக் கண்ணுரக் காணும் இன்பத்தை அவள் அளிக்கவில்லை.

இளம்பிராயத்திலேயே என்னுடைய அக்கினிப் பரீக்ஷை ஆரம்பமாகிவிட்டது. பதினுறு வயது கடந்ததும் நான் ஒரு செத்த பிள்ளையைப் பெற்றெடுத்தேன். நானும் சாகும் அளவுக்கு வந்துவிட்டேன். பின்னுல் எவ்வளவோ துயரை அநுபவிக்கவேண்டியிருக்கிறதே; நான் எப்படிச் சாவேன்? எண்ணெய் இட்ட விளக்கு, கடைசிவரைக்கும் எரிந்துதானே அவியும்! பிழைத்து எழுந்தேனே தவிர, பலவீனத்தினுலோ, தீவிர மனவேதனையினுலோ என் கண்ணுக்கு ஊனம் ஏற்பட்டது.

அந்தச் சமயம் என் புருஷர் டாக்டர் பரீக்ஷைக்குப் படித்துக்கொண்டிருந்தார். வித்தை கற்ற புதிதில் அவர் யாருக்கு வேண்டுமானாலும் எதற்கு வேண்டுமானாலும் சிகித்ஸை செய்ய ஆவல் கொண்டிருந்தார். முதலில் தாமே எனக்கு வைத்தியம் செய்ய ஆரம்பித்தார்.

அண்ணா அந்த வருஷம் பி. எல், முடிக்கக் காலேஜில் படித்துக் கொண்டிருந்தான். ஒரு நாள் அவன் என் கணவரைப் பார்த்து, "என்ன விளையாட்டு இது? குமுவின் கண்களைப் பாழாக்குகிறாயே! தெரிந்த டாக்டர் யாரிட மாவது காட்டக்கூடாதா ?" என்றான்.

"அவன்மட்டும் என்ன புதிதாகக் கிழித்துவிடப் போகிறான்! மருந்து என்னவோ எல்லோருக்கும் தெரிந்தது தான்" என்றார் என் கணவர்.

அண்ணா சற்றுக் கோபத்துடன், "அப்புறம் உனக்கும் உன் காலேஜ் பெரிய புரொபஸருக்கும் ஒரு வித்தியாசமும் இல்லை" என்றான்.

"உனக்கென்ன புரியும்? சட்டப் பரீக்ஷைக்குப் படிக்கிறாய். நீ விவாகம் செய்துகொள்கிறாய் என்று வைத்துக்கொள். உன் பெண்டாட்டிக்குச் சேர வேண்டிய சொத்தைக் குறித்து ஏதாவது வழக்கு ஏற்பட்டால் நீ என் யோசனையைக் கேட்பாயோ ?"

மத்தளத்துக்கு இரண்டு பக்கமும் இடி. என் கணவருக்கும் தமையனுக்கும் இடையே மூண்ட இந்தச் சச்சரவு என்னைத்தான் மிகவும் பாதித்தது. எனக்குத் தோன்றியது: அண்ணாதான் என்னை ஒருவருக்குத் தான மாகக் கொடுத்துவிட்டாரே. என்னைப்பற்றிய பொறுப்பு அவருக்கு எதற்கு? இன்பமோ, துன்பமோ, நலக்

குறைவோ, எல்லாம் என் கணவர் பார்த்துக்கொள்ள வேண்டிய விஷயங்கள்.

அன்று என்னுடைய இந்த அற்பக் கண்சிகித்ஸையைக் குறித்து அண்ணுவுக்கும் என் கணவருக்கும் சற்று மனத் தாங்கல் ஏற்பட்டது. சகஜமாகவே என் கண்களிலிருந்து ஜலம் கொட்டிக்கொண் டிருக்கும். அந்தக் கண்ணீர்ப் பெருக்கு இன்னும்அதிகரித்தது. அதன் உண்மைக்காரணம் என் கணவருக்கும் சரி, அண்ணுவுக்கும் சரி, தெரியாது.

என் கணவர் காலேஜுக்குச் சென்ற சமயம் பார்த்து அண்ணு ஒரு டாக்டரை அழைத்துவந்தான். அவர் என் கண்களை நன்ருகச் சோதித்துவிட்டு,''இன்னும் இப்படியே விட்டு வைத்தால், இந்த நோய் விருத்தி அடையும்" என்று ஒரு மருந்துப்பட்டியலை எழுதித் தந்தார். அதை வாங்கிவர அண்ணு உடனே ஆளை ஏவினன்.

டாக்டர் போனவுடன் நான் அண்ணுவைப் பார்த்து, "அண்ணு, உன் காலில் விழுகிறேன். கணவர் எனக்குச் செய்யும் சிகித்ஸைக்கு இடைஞ்சல் செய்ய வேண்டாம்" என்றேன்.

குழந்தை முதல் அண்ணுவிடம் எனக்குப் பயமே. அவன் எதிரே நான் இந்த வார்த்தையை எப்படிச் சொல்லத் துணிந்தேன் என்பது எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. என் புருஷருக்குத் தெரியாமல் அண்ணு நடத்தும் இந்தச் சிகித்ஸையால் எனக்குக் கெடுதலே ஒழிய நன்மை இல்லை. இதை நான் அறிவேன். எனக்கு வாய் வளர்ந்திருப்பதைக் கண்டு அண்ணு சற்றுத் திகைத்தான். மௌனமாகச்சற்றுச் சிந்தனை செய்துவிட்டு,"சரி, இனிமேல் நான் டாக்டரை அழைத்துவர மாட்டேன். ஆனல் அவர் கொடுத்துள்ள மருந்தைமட்டும் தவருமல் கண்ணுக்குப்

போட்டுக்கொண்டு வா" என்றான். மருந்து வந்ததும் அதை உபயோகிக்கும் விதத்தை எனக்கு விளக்கிவிட்டு அண்ணா போய்விட்டான். கணவர் காலேஜிலிருந்து திரும்புவதற்கு முன்பே அந்த மருந்துக் குப்பி, சலாகை எல்லாவற்றையும் பத்திரமாக வீட்டுப் பின்புறத்திலிருந்த பாழுங்கிணற்றில் எறிந்துவிட்டேன்.

அண்ணாவுக்குப் போட்டியாக என் கணவர் இருமடங்கு ஆர்வத்துடன் என் கண்ணைக் குணப்படுத்த முயன்றார். வேளைக்கு வேளை, மருந்தை மாற்றி என் கண்ணை என்ன வெல்லாமோ செய்தார். கண்ணுக்கு ஒரு மூடியை அணிந்தேன். அப்புறம் கண்ணாடி போட்டுக்கொண்டேன். பொட்டு மருந்து விட்டுக்கொண்டேன். சூர்ணத்தைக் கண்களில் அரக்கிக்கொண்டேன். குடரைக் குழப்பும் மீன் எண்ணெயையும் உள்ளுக்குச் சாப்பிட்டேன்; ஓக்காளம் வரும்; ஆனால் அடக்கிக்கொண்டேன். என் கணவர், "எப்படி இருக்கிறது?" என்று விசாரிப்பார்.

"பரவாயில்லை, சுமாராக இருக்கிறது" என்றேன். வியாதி சொஸ்தப்படுவதாக எண்ணிக்கொள்வேன். கண்ணிலிருந்து மேன்மேலும் ஜலம் வடிந்தால் கெட்ட நீரெல்லாம் வந்துவிடுவது நல்லதுதானே என்று எண்ணு வேன். நீர் வராமல் நின்றுவிட்டால், சொஸ்தமாவதன் குறி என்றே நினைப்பேன்.

அப்புறம் சில நாளைக்கெல்லாம் கண்வலி தாங்க முடியாத அளவுக்கு வந்துவிட்டது. பார்வை மங்கியது. மூளையில் ஒரு வேதனை; என்னை என்னவோ செய்தது. என் கணவர் முகத்தில் திகில் மூண்டிருப்பதைக் கண்டேன். கண் இவ்வளவு தூரம் கெட்டபிறகு எப்படி வேறு டாக்டரை அழைப்பது என்று அவர் தயங்கினார்.

நானும், "யாராவது டாக்டரை அழைத்துவந்து காட்டுங்களேன். அண்ணுவுக்கும் திருப்தியாக இருக்கும். ஏற்கனவே அவனுக்கு என்மேல் கோபம், நான் கண்ணைச் சரியாகக் கவனித்துக்கொள்ளவில்லை என்று. அதனுல் என் மனத்துச்குக் கஷ்டந்தான். நீங்களே சிகித்ஸை செய்யுங்கள். எதற்கும் இன்னொரு டாக்டரின் யோசனையைக் கேட்பது நல்லதுதானே?" என்றேன்.

"நீ சொல்லுவது சரி" என்று என் கணவர் அன்றைத் தினமே ஓர் இங்கிலீஷ் டாக்டரை அழைத்து வந்தார். அவர்கள் என்ன பேசிக்கொண்டார்களோ தெரியாது. ஆனுல் அவர் என் கணவரை ஏதோ கடிந்து பேசியதாக மட்டும் தெரிந்தது. என் கணவர் தலை இறங்கிப் போய் மௌனமாக நின்ருர்.

டாக்டர் சென்றதும் நான் என் கணவரின் கையைப் பிடித்துக்கொண்டு, "எங்கிருந்தோ இந்த முரட்டு வெள்ளைக்காரக் கழுதையைப் பிடித்துவந்தீர்கள். நம் தேசத்து டாக்டர்கள் யாரும் அகப்படவில்லையா? என் கண் நோயைப்பற்றி உங்களைக்காட்டிலும் வேறு யாருக்குத் தெரியும்?" என்றேன்.

என் புருஷர் தயங்கிக்கொண்டே, "கண்ணை ஆபரேஷன் செய்ய வேண்டிவரும்போல் இருக்கிறது" என்ருர்.

நான் கோபங்கொள்வது போல், "ஆபரேஷன் செய்ய வேண்டுமென்று உங்களுக்குத் தெரியாதா! ஆனுல் ஏன் இதை முதலிலேயே சொல்லாமல் ஒளித்துவிட்டீர்கள்? நான் பயப்படுவேன் என்றுதானே எண்ணுகிறீர்கள்?" என்றேன்.

"ஆபரேஷன் என்ருல் எத்தனை புருஷர்கள் இடி விழுந்து போகிருர்கள் தெரியுமா?"

"புருஷர்களுடைய விருப்பெல்லாம் பெண்களிடத்தில்தான்" என்றேன் நான் குத்தலாக.

உடனேயே என் கணவரின் முகம் வாடிப் போய் விட்டது. தாழ்ந்த குரலில், "நீ சொல்வதில் தப்பே இல்லை. புருஷர்கள் அகம்பாவமே உருவெடுத்தவர்கள்" என்றார்.

"அகம்பாவத்தில் உங்களால் பெண்களோடு போட்டியிட முடியுமா? அதிலும் எங்களுக்கேதான் வெற்றி" என்றேன்.

இதற்கிடையே ஒரு நாள் அண்ணா வந்தார். நான் அவரைத் தனிமையில் அழைத்துச் சென்று, "அண்ணா, நீ அழைத்து வந்த டாக்டர் சொன்னபடியே தவருமல் மருந்தைப் போட்டுக்கொண்டேன். எவ்வளவோ லகு வாயிற்று. ஒரு நாள் கவனப்பிசகில் உள்ளுக்குச் சாப்பிடும் மருந்தைக் கண்ணில் போட்டுக்கொண்டு விட்டேன். அதற்கப்புறம் என் கண் இந்த நிலைக்கு வந்துவிட்டது. அவர் சொல்லுகிறார், ஆபரேஷன் செய்ய வேண்டும் என்று" என்றேன்.

"உன் புருஷனே உனக்கு வைத்தியம் செய்கிறான் என்று நினைத்துக்கொண்டுதான் நான் இத்தனை நாள் வரவில்லை" என்றார் அண்ணா.

"என் கணவருக்குத் தெரிந்தால் கோபிப்பார் என்று நான் மறைவாகவே டாக்டர் சொன்னபடி செய்து வந்தேன்" என்றேன்.

பெண்ணாகப் பிறந்துவிட்டால் இத்தனை பொய் சொல்ல வேண்டியிருக்கிறது! அண்ணா மனத்துக்கும் கஷ்டம் கொடுக்கக் கூடாது. கட்டின புருஷனுடைய பெருக்கும் குறைவு வரக்கூடாது. தாயாகிச் சில சமயம்

குழந்தையை ஏமாற்ற வேண்டி வருகிறது; மனைவியாகிக் குழந்தையின் தகப்பனை ஏமாற்ற வேண்டி வருகிறது. பெண்கள் இவ்வளவு நடிப்பைக்காட்டவேண்டியிருக்கிறது!

அந்த நடிப்பின் விளைவாக என் கண்கள் அவிந்து போகுமுன் அண்ணாவும் என் புருஷரும் ஒருமித்ததைப் பார்க்கக் கொடுத்து வைத்தேன். மறைவாகச் சிகித்ஸை செய்ததனாலோ என்னவோ இந்தக் கெடுதல் நேர்ந்தது என்று அண்ணா எண்ணினார். ஆரம்பத்திலேயே அண்ணா வின் யோசனைப்படி செய்திருந்தால் கண் கூடி விட்டிருக் குமே என்று என் புருஷர் நினைத்தார். அநுதாபத்தால் துடிக்கும் இருவரின் உள்ளங்களினுள்ளே சென்று அவர் களுக்கு நான் மிகவும் நெருங்கியவள் ஆகிவிட்டேன். இப் போது என் புருஷர் அண்ணாவின் யோசனைப்படி நடக்க லானார். அண்ணாவும் இறங்கி எல்லா விஷயத்துக்கும் என் கணவரின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள விரும்பினார்.

கடைசியில் இருவரின் யோசனையின்பேரில் இங்கிலீஷ் டாக்டர் வந்தான். என் இடது கண்ணில் அஸ்திரத்தை வைத்தான். நொந்து கிடந்த என் விழிக்கு அது தாள வில்லை. கொஞ்சநஞ்சம் இருந்த பார்வையும் பட்டென்று அணைந்துவிட்டது. மிகுந்திருந்த ஒரு கண்ணும் நாளா வட்டத்தில் பார்வை மங்கி அவிந்து வந்தது. சிறு வயதில் ஒரு சுப வேளையில் சந்தனம் பூசிய அந்த இளமை உருவம் என் கண்முன் நின்றது; இப்போது திரைபோல் இருட்டு அதை மறைத்துக்கொண்டு விட்டது.

ஒரு நாள் என் கணவர் படுக்கையின் அருகில் வந்து என்னை நோக்கி, "யார்பேரிலும் குற்றம் சொல்வதற்கில்லை; உன் கண்களை நானேதான் பாழாக்கினேன்" என்றார்.

அவர் குரலில் அழுகை நிரம்பியிருந்தது. என் இரு கைகளாலும் அவரது வலது கரத்தை அழுத்தினேன்; "ஏன் வருத்தப்படுகிறீர்கள்? நீங்கள் செய்தது நல்லது தான். உங்களுக்குச் சொந்தமானதை நீங்களே எடுத்துக் கொண்டீர்கள். வேறு டாக்டர் என் கண்ணைக் கெடுத்து விட்டிருந்தால் எனக்கு ஆறுதல் ஏற்பட்டிருக்குமா? நீங்களே சொல்லுங்கள். என் விதி கண் போக வேண்டும் என்று இருக்கிறது. யார் கை வைத்தால்தான் என்ன! என் கண் இருட்டிவிட்டதில் ஒரு நிம்மதி; என்ன தெரியுமா! உங்கள் கையாலேயே அது போய்விட்டதுதான். பூஜைக்கு உரிய மலர்கள் எண்ணிக்கையில் குறைந்த போது ராமபிரான் தம் இரு கண் மலர்களையும் பெயர்த்துத் தரப்போனார். என்னுடைய தெய்வத்துக்கு என் கண்ணை நான் கொடுத்தேன். நீர் பார்த்து மகிழ்ந்து என்னிடம் சொல்வதே போதும். அதுவே நான் பார்ப்பது போலாகும்."—இவ்வளவும் நான் பேசவில்லை. அப்போது நான் பாவித்துக் கொண்டேன். மனம் வாட்டம் அடைந்த பொழுதும், என் அசையாத உறுதி சற்று நிலை தடுமாறிய சமயமும், ஏமாற்றம், துயர் இவற்றுள் அழுந்திக் கிடக்கும் தருணமும் இவ்வாறெல்லாம் சொல்லிக்கொண்டு சாந்தம் அடைவேன். இந்தப் பக்தியின் மூலம் துயரை வென்று ஓர் உயர்வான நிலையில் திரிவேன்... அன்று என் மனத்துள் சென்றதை ஒரு விதமாக என் மௌனத்தின் மூலமாகத் தெரியப்படுத்தினேன். அப்போது அவர், "குமு, மூடத்தனமாக நான் உனக்குப் பெருத்த நஷ்டத்தை உண்டாக்கி விட்டேன். அதைத் திருப்புவது என்னவோ முடியாத காரியம். ஆனல் என்னல் கூடிய வரையில் கண்ணில்லாத குறையை அகற்ற முயல்

வேன். நான் எப்போதும் உன் பக்கத்திலேயே இருப் பேன்'' என்றார்.

"இதனால் என்ன பலன்? இந்தக் குருட்டைக் கட்டிக் கொண்டு வாழ்நாள் முழுவதும் நீங்கள் அழுவானேன்! வேறு விவாகம் பண்ணிக்கொள்ளுங்கள். அப்போதுதான் என் மனம் திருப்தி அடையும்."

விவாகம் செய்துகொள்ள வேண்டியதன் அவசியத் தைப்பற்றி நான் விவரிப்பதற்கு முன் என் நெஞ்சு விம் மத் தொடங்கியது. கனைத்து என்னைத் திடப்படுத்திக் கொண்டு நான் பேச ஆரம்பித்தேன்: என் கணவர் உணர்வு மூண்டு, "நான் முட்டாள், நான் அகங்காரி, எதுவாக இருந்தாலும் கல்நெஞ்சன் அல்ல. என் கையாலேயே உன் னைக் குருடாக்கி விட்டேன். அந்தக் குற்றம் போதாமல் உன்னைத் தள்ளிவிட்டு வேறு விவாகம் நான் செய்து கொள்வேனேயானால் இதோ என் இஷ்ட தெய்வம் கோபீ நாதன் மேல் ஆணையாகச் சொல்கிறேன்: நான் பிரம்ம ஹத்தி, பித்ருஹத்தி செய்த பாபத்தில் போவேன்" என்றார்.

இவ்வளவு பெரிய சபதத்தை நான் தடுத்திருப்பேன். ஆனால் பொங்கிவரும் கண்ணீர் என் நெஞ்சை அடைத்தது; என் மார்பை விம்மச் செய்தது. கண்களில் நீராக வழியத் தொடங்கியது. அதை அடக்கிக்கொண்டு என்னால் எது வும் பேச முடியவில்லை. அவர் சொன்னதைக் கேட்டு இன் பத்தில் ஆழ்ந்து தலையணையில் முகத்தை அழுத்தி அழ லானேன். நானோ குருடி; இருந்தும் அவர் என்னை விடமாட்டார். என்னைத் தம் உள்ளத்தின் அருகே அணைத் துக்கொள்வார். இவ்வளவு சௌபாக்கியத்தை நான் கோரவில்லை. ஆனால் இந்த மனம் கேட்கிறதா?

கடைசியில் கண்மாரியின் முதல் வேகம் தணிந்ததும் அவரது முகத்தை என் மார்பில் அணைத்துக்கொண்டு, "இவ்வளவு பயங்கரமான சபதம் ஏன் செய்துகொண்டீர்கள்? நான் உங்கள் சுகத்திற்காகவா மறு விவாகம் செய்துகொள்ளச் சொன்னேனா? இளையாள் மூலம் என் கடமைகளை ஆற்றுவேன். கண் இராத குறையை நீக்கிக்கொண்டு சேவை புரிவேன்" என்றேன்.

"இந்த வேலையை ஒரு பணிப்பெண் செய்வாளே! என் காரியத்துக்காக ஒருத்தியை மணந்து என் தெய்வமான உனக்குச் சமமாக வைத்துக்கொள்வேனா?" என்றதும் என் முகத்தை நிமிர்த்தி நெற்றியில் முத்தம் தந்தார். அந்த முத்தத்தின் மகிமை எனக்கு மூன்றாம் கண் திறந்தது. அதே சமயம் நான் அவரது மனப் பீடத்தில் தேவதையாக அமர்ந்தேன். நான் குருடானதே நல்லதாகப் போயிற்று. நான் வெளி ஸம்ஸாரத்தின் தொடர்பு அற்றவள். இப்போது நான் தேவியின் உயர்ந்த ஸ்தானத்தில் இருக்கிறேன். என் புருஷனுடைய நன்மையின் பேரில்தான் எனக்குக் கண். சூது வாது, ஸம்ஸாரத்திலுள்ள பெண்களிடம் தோன்றும் சிறுமை, கள்ளம் இவற்றை எல்லாம் மீறி இருப்பவள் நான்.

அன்று முழுவதும் எனக்குள்ளேயே போராட்டம். கணவர் மறு விவாகம் செய்துகொள்வதில்லை என்று சபதம் செய்த விஷயம் என் மனத்துள் பூரிப்பை உண்டாக்கிக் கொண்டே இருந்தது. என்னுள் அடங்கியிருக்கும் அந்தத் தேவியின் அம்சம் மட்டும் சொல்லியது: 'ஒரு நாள் வரும்; அன்று இந்தச் சபதத்தைப் பரிபாலனம் செய்வதைக் காட்டிலும் உன் புருஷன் மணம் புரிந்துகொள்வதே க்ஷேமம் என்று உனக்கே தோன்றும்'. ஆனால் என் பழமையான

பெண் தன்மை, 'எப்போது சபதம் செய்துகொண்டாயிற்ரூே, கல்யாணம் பண்ணிக்கொள்வது அழகல்ல' என்றது. தேவியின் அம்சம் அதற்கு, 'அதில் நீ இன்பம் அடைவதற்கு ஒரு காரணமும் இல்லேயே!' என்று சொல்லியது. என் மனித இயற்கை, 'அதெல்லாம் தெரிகிறது; ஆளுல் அவர் சபதத்தை எப்படி மீறுவார்?' என்றது. அடிக்கடி இதே கேள்வி. தேவியின் அம்சம் அப்போது பதில் தராமல் புருவத்தைச் சுளித்தது. ஒரு பெருந் திகில், இருள்போல் என் மனத்தை மெல்லச் சூழ்ந்துகொண்டது.

என்மேல் அநுதாபம் கொண்டிருக்கும் என் கணவர் வேலேக்காரர்களே அடக்கிவிட்டுத் தாமே என்னுடைய காரியங்களேக் கவனிக்கத் தொடங்கிஞர். சின்ன விஷயங்களுக்குக்கூடக் கணவரை எதிர்பார்ப்பது முதலில் எனக்குப் பிடித்திருந்தது. காரணம், இவ்வாறு செய்வதளுல் அவர் என்னே விட்டுச் சற்றேனும் அகலமாட்டார். கண்ணுல் அவரைப் பார்க்க முடியாததளுல், அவரை என் அருகிலேயே வைத்துக்கொள்ளும் ஆசை மேலிட்டது. கண்களுக்கு மங்கலாகத் தெரிந்த புருஷரின் முகத்தை என் ஐம்புலன்களும் பங்கிட்டுகொண்டு தம் வழியே அநுபவித்தன. இப்போதெல்லாம் என் கணவர் வெளியே காரியமாகப் போளுல் அந்தச் சற்றுநேரத் தனிமை என்னே என்னவோ செய்யும்; எல்லாவற்றையும் இழந்துவிட்டதுபோல் தோன்றும். முன்பெல்லாம் அவர் காலேஜிலிருந்து வரச் சற்றுத் தாமதமாளுல் ஜன்னல் வழியாக நான் கண்கொட்டாமல் அவர் வரும் வழியை நோக்கியிருப்பேன். அவர் சுற்றிவந்த ஓர் உலகை என் உலகாகவே எண்ணிக்கொள்வேன். இன்ரூே கண் அவிந்த என் உறுப்புகளனைத்தும் அவரைத் தேடி அலேந்தன.

அவர் வாழ்ந்த உலகையும் என் உலகையும் இணைத்த பாலம் இன்று உடைந்துவிட்டது. இன்று அவருக்கும் எனக்கும் இடையே ஒரு பயங்கர இருட்டுத்தான் நிற்கிறது. இப்போது நான் கதியற்று வேதனையிலேயே காலங் கழிக்கவேண்டி இருக்கிறது. அவர் என்னண்டை எப்போது வருவாரோ என்ற ஏக்கமே எக்காலமும். இதன்பொருட்டே அவர் நிமிஷநேரங்கூட என்னை விட்டுப் பிரிவதில்லை. என் குருட்டு உடல் அவரைப் பிடித்துக்கொள்ள அலை பாயும்; அவரோடு நெருங்கி இருக்க விம்மி அழும். ஆனால் இவ்வளவு ஆசை-இவ்வளவு ஆதரவு-பார்ப்பதற்கு நன்றாகத்தான் இல்லை. நான் அவருக்கு மனைவியாக ஏற்கனவே ஒரு கால் கட்டாயிருக்கிறேன். இது போதாதென்று இந்தக் குருடியைப் பாதுகாக்கும் பெரும் பொறுப்பையும் அவர்மேல் சுமத்த எனக்கு இஷ்டமில்லை. என் இருண்ட வாழ்வை நானே சுமந்து செல்வேன். இந்த முடிவில்லாத இருளில் என் கணவரை ஆழ்த்தக் கூடாதென்று நிலையானதோர் உறுதி செய்துகொண்டேன்.

சில தினங்களுக்குள் ஓசை, மணம், பரிசம் இவற்றின் மூலம் வழக்கப்படி என் காரியங்களைச் செய்யும் திறமை உண்டாயிற்று. வீட்டுக் காரியங்களை முன்னைவிடத் திறமையாக நடத்தலானேன். ஒரு பெரிய உண்மை எனக்குப் புலனாயிற்று. கண் பார்வை நம் காரியங்களைச் செய்ய எவ்வளவு அநுகூலமாக இருந்தாலும் அது பல விஷயங்களில் பாய்ந்து நம் காரியங்களை எல்லாம் சிதற அடிக்கிறது. கண் பாரா கொடுக்கும் வேலையில் ஈடுபட்டிருக்கும்போது காது மங்கியே கிடக்கிறது; விஷயங்களைக் கேட்க வேண்டிய அளவைவிடக் குறைவாகவே கேட்டுக்கொள்கிறது. கண்ணோ அப்படியல்ல; பார்க்க

வேண்டியதைவிட அதிகமாகவே பார்க்கிறது. சஞ்சலமான கண் பார்வை மறைந்துபோகவே என்னுடைய மற்றப் புலன்கள் தம் வேலையை அமைதியாகவும் சரிவரவும் செய்யத் தொடங்கின.

இப்போதெல்லாம் நான் என் புருஷரை எந்தக் காரியமும் செய்ய விடுவதில்லை. முன்போல் அவருடைய வேலைகளையெல்லாம் நானே எடுத்துப் போட்டுக்கொண்டு செய்தேன்.

என் கணவர், "கடைசியில் என் பிராயச்சித்தத்தைக் கெடுக்கவா பார்க்கிருய் ?" என்று சொல்வார்.

"எதற்காக இந்தப் பிராயச்சித்தம் நீங்கள் செய்து கொள்ள வேண்டும் ? எனக்குள்ள இந்தப் பாபச் சுமை போதாதென்று ?" என்றேன் நான்.

அவர் எவ்வளவோ தடுத்தும் என் காரியங்களைச் செய்வதிலிருந்து அவரை விலக்கிவிட்டேன். அவருக்கும் நிம்மதி ஏற்பட்டது. குருட்டு மனைவிக்கு வாழ்நாள் முழுவதும் சேவை புரியும் விரதம் புருஷர்களுக்கு ஏற்ற தல்ல.

என் கணவர் டாக்டர் பரீக்ஷையில் தேர்ந்ததும் நாட்டுப்புறத்துக்கு என்னை அழைத்துப் போனர். நாட்டுப் புறத்துக்கு வந்தது தாயின் மடியை அடைந்ததுபோல இருந்தது எனக்கு. எட்டு வயதிலேயே நான் கிராமத்தை விட்டு நகரத்துக்கு வரவேண்டியதாயிற்று. இதற்கிடையே கழிந்து போன பத்துவருஷ காலத்தில் பிறந்த ஊர் வெறும் நிழல் போல் என் மனத்துள் மங்கி வந்தது. கண் இருந்த சமயம் கல்கத்தா நகரம் என்னைச் சுற்றி வளைத்து அந்தப் பழைய நினைவுகளை மறைத்துக்

கொண்டிருந்தது. கண் அவிந்த பிறகு கல்கத்தா வெறும் கண்ணைக் கவரும் அழகிய காட்சியே தவிர மனமார இன்பத்தைக் கொடுக்கும் இடமல்ல என்று பட்டது. பார்வை கெட்ட பிறகு இள வயதில் கண்ட அந்த நாட்டுப்புறத்தின் அழகு, இருள் மாலையில் தோன்றும் தாரகை உலகினைப் போல் என் உள்ளத்துள் ஒளிர்ந்தது.

மார்கழிக் கடைசியில் நாங்கள் ஹாஸிம்புருக்குச் சென்றோம். புதிய இடத்தில் நாற்புறமும் புலப்பட்ட அந்த ரம்மியமான இன்பத்தை என்னவென்று வர்ணிப்பது! என் சிறுவயதில் நான் உட்கொண்ட அதே இன்மணமும் நான் பெற்ற அநுபவங்களும், என் ஒவ்வோர் அங்கத்திலும் ஆழப் பதிந்திருந்தன. பனி தோய்ந்த வயல்களிலிருந்து வீசும் மெல்லிய காற்றும், பொன் இழைத்த கடுகுப்புனங்களின் வான் நிரம்பிய மிருது கந்தமும், இடையர்கள் பாடும் பண்ணும், மேடும் பள்ளமுமான கிராமப் பாட்டை வழியாக அசைந்து செல்லும் மாட்டு வண்டியின் சப்தமும், ஒரு சமயம் இவ்வுடலைச் சிலிர்க்கச் செய்தன. அந்தப் பழைய நினைவுகள், வர்ணிக்க இயலாத அவ்வினிய ஓசை, மணம் எல்லாம் இன்றளவும் என்னைச் சுற்றிக் கொண்டிருக்கின்றன. இந்தக் குருட்டுக் கண்களுக்கு அவை இன்னும் மறையவில்லை. என் மனம் அந்த இளம் பிராயத்தினுள் புகுந்து பார்த்தது. அம்மாவின் உருவம் மட்டும் தெளிவாகப் புலப்படவில்லை. பாட்டி தன் வெளுத்த மயிரை விரித்து விட்டுக்கொண்டு வெயிலில் முற்றத்தில் வடகம் பிழிகிறாள்; இதோ என் மனக் கண்ணில் தெரிகிறது. ஆனால் அவள் முதுமையால் நடுங்கும் குரலில் எங்கள் ஊர்க் கவி பஜன்தாஸர் தேக தத்துவ சம்பந்தமாக எழுதிய சிந்துகளைப் பாடியது என் நினைவை விட்டு இப்போதும் நீங்கவில்லை. அறுவடை ஆனதும்

தானியங்கள் வீட்டுக்கு வந்து சேரும். குளிர் காலமான தால் காலையில் பனி மூட்டமாக இருக்கும். எங்கே பார்த் தாலும் குதூகலமும், ஆனந்தமும். நெல் குற்றும் இடத்தில் நான் கிராமத்துச் சிறுமிகளுடன் தோழமை கொண்டு இன்புற்ற அந்த நாட்களெல்லாம் எங்கேயோ! மாலை நேரங்களில் மந்தை வெளியில் பசுக்கள் 'அம்பா' என்று கன்றுகளை நினைத்துக்கொண்டு கத்தும். அப்போது அம்மா அகல் விளக்கை எடுத்துக்கொண்டு தொழுவத்தில் வைக்க வருவாள். அது இன்னும் கவனம் இருக்கிறது. அந்த வர குத் தட்டின் இனிய மணமும், நெகிழித் தீயின் புகையும் கலந்து இன்றும் என் மனத்துக்குள் படிந்திருக்கின்றன. இதோ என் செவியில் கேட்கிறது, குளத்தங்கரையில் வித்யாலங்காரருடைய பூஜை அறையில் அடிக்கும் மணி ஓசை. இள வயதில் அந்த எட்டு வருஷத்திய அநுபவங் களின் இன்மணமும், இன்சுவையும் இன்றளவும் என்னைச் சுற்றிலும் குவிந்துள்ளன.

இன்னும் கவனத்திற்கு வருகின்றன: என்னுடைய பாலிய வயதில் அநுஷ்டித்த விரதங்கள், விடிகாலையில் பனிமலர் பறித்துச் சிவபூஜை செய்தது யாவும். கல்கத்தா வுக்கு வந்ததுமே அங்கே நடக்கும் வம்பளப்பும், மனிதர் நடமாட்டமும், பலவித இரைச்சலும் என்னுடைய தெளி வான மூளையைக் கலக்கின. இதை இப்போது நான் ஒப் புக்கொள்ளத்தான் வேண்டும். பக்தி, சிரத்தை, தூய எளிய வாழ்க்கை, இவற்றுக்கு இந்த நகரம் லாயக்கல்ல. அன்று நடந்த ஒரு விஷயம் இப்போது ஞாபகத்துக்கு வருகிறது. கண் அவிந்த பிற்பாடு என் ஊரைச் சேர்ந்த தோழி ஒருத்தி, "அடி குமு! நீதான் இப்படி இருக்கிறாய்? நானாக இருந்தால் அந்தப் புருஷன் முகத்திலேயே விழித் திருக்கமாட்டேன்" என்றாள். நான் அதற்கு, "என்

கண் என்னவோ கெட்டுவிட்டது. அதற்காகப் புருஷன் மேலே சீறி விழுவானேன்!" என்றேன். நல்ல டாக்டரைக் கூப்பிட்டுப் பார்க்கவில்லையே என்று லாவண்யாவுக்கு என் புருஷர்மேல் கோபம்; நான் அவளுக்கு எடுத்துரைத்தேன்: "ஸம்ஸாரத்தில் எவ்வளவோ துன்பங்கள், புத்திப் பிசகினாலும் முன் ஜாக்கிரதை இல்லாமையாலும் நேரிடுகின்றன. அதற்கு என்ன செய்வது? ஆனால் மனத்தைத் தைரியப்படுத்திக்கொண்டு பக்தியில் கவனம் செலுத்தினால் இந்தத் துன்பத்திலும் அமோகமான சாந்தி ஏற்படலாம். அநாவசியமாகச் சண்டையிட்டு மனஸ்தாபம் கொள்வதில் என்ன பலன்? நான் குருடானதே பெரிய துக்கம். இது போதாமல் புருஷனை வெறுத்து இந்தச் சுமையை அதிகப்படுத்திக் கொள்வானேன்?" இன்னும் இளமை மாறாத என் வாயிலிருந்து வந்த இந்த வார்த்தைகளைக் கேட்டுக் கோபம் கொண்டு லாவண்யா போய்விட்டாள். போகும் போது அவள் சொன்ன இரண்டு வார்த்தை உள்ளத்துள் சென்று என்னை நெருப்புப் பொறிபோல் சுட்டது. நான் அதைச் சட்டென்று நசுக்கி அணைத்துவிட்டேன். ஆனால் அது பட்ட இடம் மட்டும் என் மனத்துள் ஆறவில்லை. 'கல்கத்தாவில் வீண் வம்பளப்புத்தான்; அந்த இடத்தில் கொஞ்ச நாள் இருந்தாலே புத்தி அகாலத்தில் முற்றிப் போய்க் கடினமாகி விடுகிறது' என்று இதற்காகத்தான் சொல்லுகிறேன்.

நாட்டுப்புறத்துக்கு வந்ததும் நான் சிவபூஜையின் போது அர்ச்சித்த குளிர்ந்த சிவுலிப் புஷ்பமும் அதன் பரிமளமும், என் உள்ளத்தில் கவிந்திருந்ததோர் ஆசையும் நம்பிக்கையும், அந்த இளம் பிராயத்தைப் போலவே பொலிவு கொண்டவையாக இருந்தன. என் உள்ளமும், என் வாழ்வும், அந்தத் தெய்வத்தின் இருப்பிடம். நான் தரை

யோடு தரையாக வணங்கி அக்கடவுளை வழிபட்டு, "எ தேவனே! என் கண் போனது நல்லதே. நீ என் அருகில் இருப்பதே எனக்குப் போதும்" என்றேன்.

ஐயோ, நான் பிசகாகச் சொல்லிவிட்டேன்; "நீ எனக்கு இருக்கிறாய்" என்பது வீண் பேச்சு. "நான் உனக்கு இருக்கிறேன்" என்று சொல்லத்தான் எனக்கு உரிமை உண்டு. ஓ! ஒரு நாள் என் தெய்வம் என் மென்னியைப் பிடித்து இதைத்தான் சொல்லத் தூண்டும். 'எது இராது போனாலும் நான் மட்டும் இருந்துதானே தீர வேண்டும்! என் அதிகாரம் யார் பேரில் செல்லும்? என் பேரிலேதான்!

சில நாள் சுகமாகவே கழிந்தது. வைத்தியத்தில் என் கணவருக்கு நல்ல பேர் கிடைத்தது. கையில் காசு சேர்ந்தது. ஆனால் இந்தப் பணம் ஒரு பாழும் பேய். இது எவர் மனத்தையும் திருப்பி விடுகிறது. மனம் தன் இஷ்டப்படி ஆட்சி செலுத்தும்போது தூய இன்பத்தையே உண்டாக்கிக் கொள்ளுகிறது. ஆனால் தனம் இந்த இன்பத்தைப் பங்கிட்டுக்கொள்ள வரும்போது மனம் அதன் பொறுப்பை மறந்துவிடுகிறது. வெறும் இன்பத்தையே நாடியிருந்த மனம் இப்போது வெறும் பொருள்களின் மேலேயே பற்று வைக்கிறது.

விசேஷமான நிகழ்ச்சி எதையும் நான் இங்கே குறிப்பிடவில்லை. ஆனால் குருடர்களுக்கு ஊகை அதிகமாக இருப்பதனாலோ என்னவோ, என் கணவர் மாறுவதை உணரலானேன். இளமையில் அவருக்கு நியாயம் அநியாயம், தர்மம் அதர்மம்- இவற்றைக் குறித்துத் தெளிவானதோர் கொள்கை இருந்தது. அது வரவரக் குறையத் தலைப்பட்டது. அவர் ஒரு நாள் சொன்னது என் கவனத்

துக்கு வருகிறது. வயிற்றுப் பிழைப்புக்காக நான் டாக்டர் தொழில் செய்யவில்லை; ஏழைகளுக்கு உதவி செய்வதே இதன் முக்கிய நோக்கம். நோயாளி வறுமையில் உழல்வதைப் பார்த்தும் சிலர் பணத்தைக் கண்ட பிறகுதான் மருந்து வழங்குவார்கள். இவர்களை நான் வெறுக்கிறேன்'' இப்படிச் சொன்ன வார்த்தைகள் இன்று காற்றில் பறந்து போயின. ஓர் ஏழைப் பெண் தன் ஒரே மகனின் உயிரைக் காப்பாற்றும்படி ஒரு நாள் காலைப் பிடித்துக் கேட்கும்போது அவர் உதறித் தள்ளிவிட்டார். அப்புறம் நான் வற்புறுத்தியதன்பேரில் சிகித்சை செய்தார். ஆனால் மனமார அல்ல. பணம் கையில் குறைவாக இருந்த காலத்தில் என் கணவர் அநியாய வழியில் சம்பாதிப்பதைத் துளிகூட விரும்பாதவர். ஆனால் இப்போதோ பாங்கில் பணம் குவியக் குவிய, வேறு திக்காகச் சென்றது அவர் மனம். அன்று ஒரு பெரிய பணக்காரரின் மானேஜர் அவருடன் இரண்டு நாட்கள் தங்கியிருந்தான். ரகசியத்தில் அவரும் அவனும் என்னவெல்லாமோ கலந்து பேசினர். அதெல்லாம் எனக்குத் தெரியாது. அப்புறம் என் அருகில் வந்து உள்ளம் பொங்கப் பலவித விஷயங்களை எடுத்துச் சொன்னார். ஆனால் என் அந்தரங்கத்தில் உள்ள ஒருவித பரிச சக்தியினால் அவர் மனத்தில் மாசு தீண்டுவதை அறிந்தேன்.

என் கண் கெடுவதற்குமுன் கடைசி முறையாகக் கண்ட அந்தக் கணவரா இவர்! அணைந்துபோன என் இரு விழிகளிலும் முத்தம் தந்து தேவியின் பதவியில் அப்போது என்னை அமர்த்தினார். இப்போது, நான் எந்த மாதிரி ஆகிவிட்டேன்! திடீரென்று ஒரு நாள் பகை என்னும் கடும் புயலில் சிக்கி ஓர் உள்ளம் கீழே விழுந்தாலும் மற்றொரு

சமயம் உணர்வுடன் அது எழுந்திருக்க முடியும். ஆனால் நாளுக்கு நாள் ஒவ்வொரு நிமிஷமும் எலும்பு வரையில் இந்தப் பகையின் வயிரம் பாய்ந்துவிட்டால் புறத்தே அது வீறிப் படர்ந்து துளி துளியாக அகத்தை நசுக்கி விடுகிறது. இதைத் தடுக்க எவ்வளவு யோசித்தும் வழி புலப்படவில்லை.

கண்ணார என் கணவரைப் பார்க்க முடியாமல் இருந்தது பெரிய விஷயமல்ல. ஆனால் அவர் என் அந்தரங்கத்தில் முன்போல் அண்டியிராமல் விலகிச் செல்வதை நினைக்கும் போது என் உள்ளம் திணறுகிறது. நானோ கண்ணை இழந்தவள்; ஒளியற்ற என் இதயத்துள் இளமையில் நான் அநுபவித்த புதுநலன், அசையாத பக்தி, நீங்காத நம்பிக்கை யாவும் இன்றும் திகழ்கின்றன. வாழ்க்கையின் ஆரம்பத்தில் என் கடவுளைத் தொழ நான் ஏந்திய அந்தக் கையளவு மலர் இன்றும் வாடாத பனிமலராகவே இருக்கிறது. என் கணவர் இன்னிழல் தரும் அந்த இளமையின் நாட்டைத் துறந்து பொருள்மேல் மோகம் கொண்டு ஒரு பெரிய பாலையினுள் என்னைப் பிரிந்து போகிறாரே! என்னுடைய அசட்டு நம்பிக்கையை—கொள்கைகளைப் பொருளைவிடப் பெரிதாகப் போற்றும் ஒரு பாக்கியத்தை-அவர் தொலைவில் நின்றுகொண்டு பார்த்து ஏளனமாகச் சிரிக்கிறார். இந்தப் பிணக்கம் ஒரு சமயத்தில் எங்களிடையே தோன்றவில்லை. நாங்கள் இருவரும் ஒரே ஸம்ஸாரப் பாதையில் இணைந்தே சென்றோம். அப்புறம் இந்தப் பாதை எந்த இடத்தில் பிரிந்ததோ அது அவருக்கும் தெரியாது, எனக்கும் தெரியாது! கடைசியில் நான் இன்று அவரை மனத்தை விட்டுக் கூப்பிடுவதுதான் மிச்சம்; பதிலைக் காணவில்லை.

ஒவ்வொரு சமயம், 'கண் அவிந்ததனாலோ, என்னவோ அற்ப விஷயங்களைக்கூட நான் விபரீதமாக எண்ணிக் கொள்கிறேன்' என்று எனக்குப்படும். கண் இருந்திருந்தால் ஸம்ஸாரம் எனக்குச் சாதாரணமாகவே தோன்றியிருக்கும்.

என் கணவர் ஒரு நாள் இதையே எனக்குப் புரியும்படி எடுத்துச் சொன்னார்; அன்று காலையில் ஒரு முஸ்லிம் கிழவர் தம் பேத்திக்கு வாந்திபேதி கண்டிருப்பதால் சிகித்ஸை செய்யும்படி அவரை அழைத்துக்கொண்டு போக வந்தார். கிழவர், "நான் ஏழை, ஐயா! ஆனால் அல்லா உங்களுக்கு நல்லது செய்வார்!" என்று வேண்டிக் கொண்டபோதிலும் என் கணவர், "அல்லா செய்வதெல்லாம் அப்புறம் ஆகட்டும். இப்போது என்ன தரப் போகிறாய்?" என்றார் இரக்கமின்றி. அதைக் கேட்டதும், 'கடவுள் என் கண்ணைத்தான் அவித்து விட்டார்; என்னைச் செவிடாகவும் செய்திருக்கக்கூடாதா?' என்று நினைத்துக்கொண்டேன். கிழவரும் ஆழ்ந்த பெருமூச்சு விட்டு, "ஏ, அல்லா!" என்று வருத்தத்துடன் திரும்பிப் போய்விட்டார். நான் உடனேயே வேலைக்காரியை ஏவி அந்தக் கிழவரை உட்புறம் அழைத்து வரச் சொன்னேன். "இந்தாரும், ஐயா! இதை வைத்துக் கொண்டு உம் பேத்திக்கு வைத்தியம் பார்த்துக்கொள்ளும். என் புருஷருடைய நன்மையைக் கோரிப் பக்கத்தில் இருக்கும் ஹரிஷ் டாக்டரிடம் போய்ப் பார்த்துக் கொள்ளும்" என்றேன்.

அன்று முழுவதும் எனக்குச் சாதமே பிடிக்கவில்லை. என் கணவர் பகல் தூக்கத்திலிருந்து எழுந்ததும் என்னைப் பார்த்து, "ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்?" என்று விசாரித்தார். பழைய வழக்கப்படி, "இல்லை; ஒன்றும்

இல்லை" என்ற ஒரு பதில் என் வாயில் காத்துக்கொண்டிருந்தது, ஆனால் பாசாங்கு செய்த காலமெல்லாந்தான் போய்விட்டதே!

நான் உடைத்தே கூறினேன் : "வெகு நாளாக உங்களிடம் சொல்ல வேண்டுமென்று இருந்தேன். ஆனால் எப்படி இதை எடுப்பதென்று நான் தயங்கினேன். என் உள்ளத்தில் செல்லும் விஷயங்களை என்னால் தெளிவாக உங்களுக்குச் சொல்லமுடியுமோ; முடியாதோ. ஆனால் நிச்சயமாக உங்கள் மனசுக்கு மட்டும் புரிந்திருக்கும். நாம் இருவரும் சேர்ந்து வாழ்க்கையை ஆரம்பத்தில் நடத்தியது போல் இப்போது நடத்த வில்லை. ஒருவரை விட்டு ஒருவர், மனம்வரைக்கும் அகன்றே இருக்கிறோம்."

அதற்கு என் கணவர் சிரித்துக்கொண்டே, "ஸம்ஸாரத்தில் மாறுதல் தோன்றுவது சகஜந்தானே?" என்றார். "பணம் பாக்கியம், அழகு இளமை எல்லாம் மாறினாலும் மாறலாம். ஆனால் நித்தியமான பொருள் ஒன்று இல்லையா ?" என்றேன். அப்பொழுது அவர், "குமு. பெண்கள் எப்போதும் ஏதாவது குறை இருந்தால்தான் வேதனைப்படுவார்கள். சிலர் கணவன் நிறையச் சம்பாதிக்கவில்லையே என்றும், சிலர் தம்மீது அன்பு வைக்கவில்லையே என்றும் வேதனைப்படுவர். நீயோ அநாவசியமாகத் துயரை வருந்தி அழைக்கிறாய்" என்றார். அந்த க்ஷணமே எனக்கு எல்லாம் புரிந்தது: இந்தக் குருட்டு நிலை என் கண்களில் ஓர் விசித்திர மையைத் தீட்டி, மாறிக்கொண்டே போகும் இந்த ஸம்ஸாரத்துக்கு வெளியே நிற்கும் ஓர் உலகை எனக்குக் காட்டியது. நான் வேறு பெண்களைப்போல் அல்லவே; என்னை என் கணவர் புரிந்துகொள்ளவே மாட்டார்!

இதற்கிடையே என் கணவருடைய அத்தை எங்களைப் பார்க்க வந்திருந்தாள். நாங்கள் இருவரும் அவளுக்கு வணங்கினோம். இதுவே அவள் தந்த முதல் ஆசீர்வாதம். "ஏண்டியம்மா, உன் தலை எழுத்துத்தான் இரண்டு கண்ணையும் அவித்துக்கொண்டாய். நம் அவிநாசன் எப்படித்தான் ஸம்ஸாரத்தை நடத்துகிறானோ! அவனுக்கு எங்கேயாவது ஒரு பெண் பார்த்து நீயே கட்டிக்கொடுக்கக் கூடாதா?" என்றாள்.

"நல்லது, அத்தை. நீங்கள்தாம் எங்கேயாவது ஒரு பெண்ணைப் பார்த்து முடித்துவிடுகிறதுதானே?" என்று வேடிக்கையாகச் சொல்லிவிட்டிருந்தால் எல்லாம் தீர்ந்து போயிருக்கும். ஆனால் அவர் எதனாலோ கூசிக்கொண்டு, "என்ன அத்தை, இதென்ன பேச்சு?" என்றார். அதற்கு அத்தைக்காரி, "நான் என்னடா தப்பாகச் சொல்லி விட்டேன்? அடி குமுதம், நீயே சொல்லு" என்றாள். நான் சிரித்துக்கொண்டே, "சரியான ஆளைத்தான் பிடித்தீர்கள், யோசனை கேட்க! இந்த முடியை அறுப்பதற்கு ஒருத்தருடைய சம்மதந்தான் எதற்கு?" என்றேன். அதற்கு அத்தையம்மாள், "சரியாகச் சொன்னாய். நீயும் நானும் இதைப்பற்றிக் கலந்து யோசிக்கலாம். நீ என்ன சொல்கிறாய், அவிநாசா? நல்ல குலீனப் பெண்கள்* சக்களத்திகளாக வருவதனால் புருஷனுக்கு உள்ள கௌரவம் அதிகரிக்கிறது. நம் பையன் டாக்டர் தொழிலே செய்யாமல் இந்த மாதிரி விவாகம் செய்துகொண்டால், வரும்படியைப்பற்றிய கவலையே இல்லை. டாக்டர் என்றால்

---

*** வங்காளத்தில் குலீனப் பெண்களைக் கொடுப்பவர்களுக்கு ஏராளமான சொத்து வரதக்ஷிணையாக வரும். இதனால் சிலர் ஐந்தாறு பெண்களைக்கூடத் தம் வாழ்நாளில் மணந்து கொள்கின்றனர்!**

கைராசி இராமல்கூட இருக்கலாம். அதனால் அவனுக்குப் பெயரும் கெடும்; வரும்படியும் குறையும். ஆனால் கடவுள் யத்தனத்தால் குலப் பெண்கள் சீக்கிரம் இறந்துவிடுவதில்லை. அவர்கள் உயிருடன் இருக்கும் வரைக்கும் புருஷனுக்கு எந்தவிதமான குறைவும் இல்லை" என்றாள்.

இரண்டு நாள் பொறுத்து என் கணவர் என் எதிரிலேயே அத்தையைப் பார்த்து, "அத்தை! தன் சொந்தச் சகோதரியைப் போல் பாவித்து இவளுக்கு உதவி புரியக்கூடிய நல்ல இடத்துப் பெண் யாராவது இருந்தால் பாரேன். இவளுக்கோ கண் தெரியாது. இவளுக்குப் பக்கத்தில் துணைக்கு யாராவது இருந்துவிட்டால் நான் நிம்மதியாக என் வேலையைச் செய்வேன்" என்றார்.

நான் குருடானபோது இந்த வார்த்தையைச் சொல்லியிருந்தால் ஒரு விதமாகப் போயிருக்கும். இத்தனை நாள் என்னுடன் இருந்துவிட்டு அவருக்குத் திடீரென்று என்ன அசௌகரியம் ஏற்பட்டதோ? என்னால் அவருடைய அலுவலுக்கு என்ன தடங்கல் ஏற்படுகிறதோ, தெரியவில்லை! ஆனால் இந்த வார்த்தையில் நான் குறுக்கிடாமல் மௌனமாக இருந்தேன். "பெண்களுக்கு என்ன குறை? இதோ என் பெரிய மைத்துனன் பெண் இருக்கிறாள். நல்ல அழகி, லக்ஷ்மீகரமான முகம்; வயதான பெண்தான். நல்ல இடம் வரவில்லை என்றுதான் இன்னும் கல்யாணம் ஆகவில்லை. உன்னைப்போல குலீனன் அகப்பட்டால் அவளைக் கொடுக்க அவர்களுக்கு என்ன தடை?" என்றாள். என் கணவர் விதிர்த்து, "நான் விவாகத்தைப்பற்றிப் பேசவில்லையே, அத்தை!" என்றார். அதற்கு அத்தை, "நல்ல இடத்துப் பெண் பின் எப்படி உன் வீட்டுக்கு வருவாள்? ரொம்ப அழகுதான்!" என்றாள். கொடுத்த சூடு சரியான சூடுதான்; என் கணவருடைய வாய் அடைத்துவிட்டது!

கண் இழந்து பயங்கர இருளில் தனியாக அலையும் நான் கடவுளை என் துணைக்கு அழைத்தேன் ; "பகவானே, என் புருஷனைக் காப்பாற்று" என்றேன்.

இது நடந்த சில தினங்களுக்கு அப்புறம், ஒரு நாள் காலையில் என் பூஜை யாவும் முடிந்த பிறகு அத்தை என்னிடம் வந்து, "அம்மா குமுதம், என் மச்சினன் பெண் ஹேமாங்கினி இதோ ஊரிலிருந்து வந்திருக்கிறாள். அடி ஹிமு, இவள்தான் உன் அக்கா, நமஸ்காரம் பண்ணு" என்றாள்.

இதே சமயம் என் கணவர் திடீரென அங்கே வந்தார். முன் பின் தெரியாத அந்தப் பெண்ணைப் பார்த்ததும் திரும்பிப் போகப் பார்த்தார். அத்தை அப்பொழுது, "எங்கே நழுவுகிறாய், அவினாசா?" என்றாள். "இந்தப் பெண் யார்?" என்று அவர் கேட்டார். அத்தை அதற்கு, "அன்றைக்குச் சொன்னேனே என் மச்சினன் பெண் இவள்—ஹேமாங்கினி" என்றாள். இவள் எப்போது வந்தாள், யார் அழைத்து வந்தது, என்ன விஷயம் என்றெல்லாம் என் கணவர் விசாரித்து அநாவசியமாகத் தம் வியப்பை வெளிப்படுத்தினார்.

எனக்குள்ளேயே சொல்லிக்கொண்டேன் : நடக்கிறதெல்லாம் நடக்கட்டும்: இப்பொழுது எல்லாம் புரிகிறது. இதற்காக இவ்வளவு ஒளிப்பாட்டம் ஏன் ? பொய் எதற்கு ? அதர்ம வழியில் நடப்பதாக இருந்தால் தைரியமாக நடக்கிறதுதானே! எனக்குப் பயந்து இந்த மாதிரி ஈனமாக நடந்துகொள்வானேன்! என்னை ஏமாற்றக் கபட நாடகமெல்லாம் எதற்கு ?

ஹேமாங்கினியின் கையைப் பற்றி அவளை என் படுக்கை அறைக்கு அழைத்துச் சென்றேன். அவள் அங்

கங்களைத் தொட்டுப் பார்த்தேன். 'பால் வடிகிற முகந்தான்; வயது பதினாலுக்கு மேல் இராது' என்று எனக்குள்ளேயே திருப்தி அடைந்தேன்.

அவள் இடி இடியென்று சிரித்து, "என்ன செய்கிறீர்கள்? அக்கா, என் உடம்பிலிருந்து ஏதாவது பேயை ஓட்டுகிறீர்களா என்ன?" என்றாள்.

கபடமற்ற அவளுடைய சிரிப்பின் மெல்லொலி என் மனத்துள் கவிந்திருந்த இருட்டைக் கணப்பொழுது விலக்கியது. என் வலது கையினால் அவளுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு, "எனக்குக் கண் இராதபோதிலும் உன்னை நன்றாகப் பார்க்கிறேன்'' என்றேன். மறுபடியும் அவள் அழகிய முகத்தைத் தடவிப் பார்த்தேன்.

''தெரிகிறதா?" என்றவுடன் அவள் மீண்டும் சிரித்தாள். ''நான் உங்கள் தோட்டத்தில் காய்த்திருக்கும் கத்தரிக்காயா என்ன, அப்படித் தடவிப் பார்க்கிறீர்களே!" என்றாள்.

நான் குருடி என்பது ஹேமாவுக்குத் தெரியாது என்று அப்பொழுதுதான் எனக்குப் புரிந்தது. ''அடி அம்மா! எனக்குக் கண் இல்லையடி, நான் குருடி" என்றேன். இதைக் கேட்டதும் அவள் சற்று நேரம் வியப்பில் ஆழ்ந்து மறு கணமே திடுக்கிட்டுப் போனாள். அவளுடைய விசாலமான கண்கள் என்னையே உற்று நோக்குவதை உணர்ந்தேன். அப்புறம் அவள், ''ஓஹோ, இதற்குத்தானா சித்தி இங்கே வந்திருக்கிறாள், சகாயத்திற்கு" என்றாள்.

"இல்லையே. நான் அவளை வரவழைக்கவில்லையே? அவளே தான் வந்தாள்."

மறுபடியும் அவள் சிரித்து, "பாவம், ரொம்ப இரக்கப்படுகிறவள். அவள் நகருகிற வழியாகக் காணோமே!

ஆனால் அப்பா இங்கே ஏன் என்னை அனுப்பினார்?'' என்றாள்.

அதே சமயம் அத்தையம்மாள் அறையினுள் வந்தாள். வருவதற்கு முன் என் கணவருடன் பேசிக்கொண்டிருந்தாள். அவள் நுழைந்ததுமே ஹேமாங்கினி, “சித்தி, நாம் எப்போது ஊருக்குப் போவது?” என்றாள்.

“வந்து எத்தனை நாளாச்சு? இதுக்குள்ளே போகணும் போகணுமென்று பறக்கிறாயே! இந்தமாதிரி ஒரு பெண்ணை நான் பார்த்ததே இல்லை” என்றாள் அத்தை.

ஹேமாங்கினி, “சித்தி, நீ இந்த இடத்தை விட்டுச் சீக்கிரம் கிளம்புவதாகத் தெரியவில்லையே! இவர்கள் உனக்கு நெருங்கிய உறவினர்கள். நீ எத்தனை நாள் வேண்டுமானாலும் தாராளமாய் இரு. நான் போக வேண்டும்” என்றதும் என் கையைத் தொட்டு, “என்ன அக்கா, நான் சொல்லுவது? நீங்கள் எனக்கு அவ்வளவாகப் பழக்கமில்லை அல்லவா!'' என்றாள். அவளுடைய கள்ளமற்ற இந்தக் கேள்விக்கு நான் பதில் பேசாமல் அவளை என் மார்போடு அணைத்துக்கொண்டேன். அத்தையம்மாள் எவ்வளவு கெட்டிக்காரியாக இருந்தாலும் அவளுடைய ஜபம் இந்தத் துளியுண்டு பெண்ணிடத்தில் சாயவில்லை. வெளிப்படையாகத் தன் கோபத்தைக் காட்டிக்கொள்ளாமல் ஹேமாங்கினியை நல்லதனமாகத் தன் பக்கம் திருப்பப் பார்த்தாள். ஆனால் ஹேமாங்கினி சட்டை செய்யாமல் அவளுடைய வார்த்தைகளைத் துடைத்துப் போட்டுவிட்டாள். அசட்டுப் பெண், விளையாட்டுத்தனமா யிருக்கிறாளென்று ஹேமாவின் பேச்சைப் பொருட்படுத்தாமல் அத்தைக்காரி சிரித்துக் கொண்டே வெளியே போக எழுந்தாள். சட்டென்று என்னவோ நினைத்துக்கொண்டு ஹேமாங்கினியைப் பார்த்து

"ஹிமு, நாழிகையாகிவிட்டது. குளிக்க வாயேன்" என்ருள். ஹேமா என் அருகில் வந்து, "அக்கா, நாம் இரண்டு பேருமாகப் போகலாமா படித்துறைக்கு?" என்ருள். இது அத்தைக்காரிக்குப் பிடிக்கவில்லை. இருந்தும் தடுக்கவில்லை. அதிகமாக இழுத்தால் ஹேமாங்கினியே அறுத்துக் கொண்டு போய்விடுவாள், அதனுல் வந்த காரியம் கை கூடாமல் போய்விடும் என்று பயந்தாள். புழைக்கடையின் வழியாகத் துறைக்குச் செல்லும் வழியில் ஹேமா என்னைப் பார்த்து, "உனக்குக் குழந்தை குட்டி ஏனோ இல்லை?" என்ருள். நான் மெல்லச் சிரித்து, "எனக்கென்ன தெரியும்? கடவுள் கொடுக்கவில்லை; அவ்வளவுதான்" என்றேன். ஹேமாங்கினி, "அப்படியானுல் நீ ஏதோ பாபம் செய்திருக்க வேண்டும்" என்ருள். "அதைப்பற்றி எனக்குத் தெரியாது. பகவானுக்குத்தான் தெரியும்" என்றேன். அத்தாட்சியாக அந்தப் பெண், "எங்கள் சித்தியைப் பாரேன். மனசில் அவ்வளவும் கெட்ட எண்ணங்கள். அதனுலேயே குழந்தை குட்டி பிறக்கவில்லை" என்ருள். பாபம் புண்ணியம், சுகம் துக்கம், வினைப்பயன் இதைப்பற்றி எல்லாம் எனக்கே ஒன்றும் விளங்காமல் இருக்கும்போது அவளுக்கு எப்படி விவரிப்பது! பெருமூச்சு விட்டு எனக்குள்ளேயே, "எல்லாம் அவனுக்குத்தான் தெரியும்" என்று சொல்லிக் கொண்டேன். ஹேமாங்கினி என்னைக் கட்டிக்கொண்டு, "நான் சொன்னதைக் கேட்டா பெருமூச்சு விடுகிருய், அக்கா? என் பேச்சைக்கூட லக்ஷ்யம் செய்பவர்கள் இருக்கிருர்களா?" என்ருள்.

என் புருஷன் நடத்தும் டாக்டர் தொழிலுக்கும் தடங்கல் ஏற்பட்டதை அறிந்தேன். யாராவது வந்து கூப்பிட்டால் அவர் போவதில்லை. கிட்டத்திலேயே எங்கேயாவது போனுல் உடனேயே திரும்பி வந்து

விடுகிறார். முன்னே எல்லாம் வெளிப்பக்கத்து அறையில் தம் காரியமாக இருப்பார். சாப்பிடும் பொழுதும், நித்திரைக்குப் போகும் சமயமுந்தான் உள்ளே வருவது வழக்கம். இப்பொழுதோ அத்தைக்காரி குரல் கொடுத்த வுடன் உள்ளே வந்து விடுகிறார். அத்தை உரக்கவே "அடி ஹிமு, வெற்றிலை பாக்கு எடுத்துக் கொண்டு வா" என்பாள். ஓஹோ, என் கணவர் வந்திருக்கிறார்போல் இருக்கிறது என்று எண்ணிக்கொள்வேன். முதலில் சில தினங்கள் ஹேமாங்கினி வெற்றிலைப் பேழை, எண்ணெய் இதெல்லாம் அத்தையின் சொல்படி எடுத்து வந்தாள். அதற்குமேல் எவ்வளவு குரல் கொடுத்தாலும் அவள் திரும்பி வருவதில்லை. கேட்ட சாமானை வேலைக்காரியின் மூலமாக அனுப்புவாள். அத்தைக்காரி மட்டும், "அடி ஹேமாங்கினி, அடி ஹிமு, அடி ஹிமு" என்று கத்திக் கொண்டே இருப்பாள்.

அப்பொழுதெல்லாம் ஹேமாங்கினி என்னை விட்டுப் பிரியாமல் என் அருகிலேயே உட்கார்ந்திருப்பாள், என்னவோ ஒரு திகில் அவள் மனத்தைப் பிடுங்கி எடுத்தது. இதற்கப்புறமே அவள் என் புருஷனைப் பற்றித் தப்பித் தவறிகூடக் குறிப்பிட்டதில்லை.

இதற்கிடையே, அண்ணா ஒருதரம் என்னைப் பார்க்க வந்திருந்தார். அண்ணாவுக்குக் கண் கூர்மை, எதையும் ஊடுருவிப் பார்ப்பான் என்று எனக்குத் தெரியும், விஷயத்தை அவனுக்குத் தெரியாமல் மூடிவைப்பது என்னவோ முடியாத காரியம். எதையும் கடினமாக விசாரிப்பவன். அநீதத்தைத் துளிகூடப் பொறுக்க மாட்டான். என் கணவருடைய குற்றம் அவனுக்குத்

தெரிந்து விடுமோ என்ற அச்சமே எனக்கு. நான் ரொம்ப ஸந்தோஷமாக இருப்பது போலவே காட்டிக்கொண்டேன். ஆனால் முழுவதும் நடிக்க என்னால் முடியவில்லை. அதிக நடிப்பு, விஷயத்தைக் காட்டிக் கொடுத்துவிட்டால் என்ன செய்வது? ஆனால் வெகு நாள் காத்திருக்கவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. என் கணவர் காட்டிய எரிமுகம் ஒருவாறு உண்மையை வெளிச்சமாக்கிவிட்டது. அண்ணா போய்விட்டார். போகுமுன், என் தலையை ஆதரவுடன் அவர் தொடும்பொழுது கை நடுங்குவதை உணர்ந்தேன். மனத்துள்ளேயே எனக்கு என்ன ஆசீர்வாதம் செய்தாரோ தெரியாது. அவர் உகுத்த கண்ணீர்த்துளி என் கன்னத்தின்மேல் விழுந்தது.

பங்குனி மாதம். அன்று மாலை சந்தைக்கடையிலிருந்து ஜனங்கள் திரும்பி வந்துகொண்டிருந்தார்கள். தொலைவில் காற்றும் மழையும் கலந்து நெருங்கிக்கொண்டு வந்தன. ஈர மண் வாசனையுடன் குளிர்ந்த காற்று வீசியது. வழி தப்பியவர்கள் அந்த இருளடைந்த வெளியில் ஒருவரை ஒருவர் கூப்பிடும் உருக்கமான குரல் கேட்டது. நான் தனியாக என் படுக்கையில் படுத்திருப்பேன். இன்னும் விளக்குக்கூட ஏற்றவில்லை. முன்தானையில் மூடிக்கொண்டு விளக்கை ஏற்ற எனக்குப் பயம்; ஒரு வேளை ஏதாவது நடந்துவிட்டால்? அந்தத் தனி அறையில் உட்கார்ந்தபடி இரு கைகளையும் கூப்பி, இருண்ட என் வாழ்வின் அதிதேவதையை நோக்கி முறையிடுவேன்; "பிரபு, உன் திருவுள்ளம் எனக்குப் புலப்படவில்லையே; உனது அளவற்ற கருணை எத்தன்மையதோ? இந்த இதயம் இரண்டாகப் பிளந்து போயும் அதை நான் வைத்துக் கொண்டிருக்கிறேன். இனி என்னால் தாங்கமுடியாது. எத்தனை நாள் இந்தச் சோதனையோ? போராட என்

உடலில்தான் பலம் ஏது?"-இவ்வாறெல்லாம் சொல்லிக் கொள்ளும்போது கண்ணீர் பீறிட்டு வரும் எனக்கு. கட்டிலின்மேல் தலையை இருத்தி அழுவேன். இதற்கிடையே வீட்டுக் காரியங்களைக் கவனித்தாகவேண்டும். ஹேமாங்கினி நிழல்போல என்னிடம் ஒன்றி இருப்பாள். மனம் விட்டு என் துக்கத்தைச் சொல்லி அழுவதற்கோ எனக்குச் சந்தர்ப்பம் ஏது? கொஞ்ச நாளைக்குப் பிறகு இந்தக் கண்ணீர் தங்கு தடையின்றிப் பெருகியது. அச்சமயம் கட்டில் அசைவதும், யாரோ செல்லும் அரவமும் கேட்கும். சற்று நாழிகைக்கெல்லாம் ஹேமாங்கினி அங்கே வந்து என் கழுத்தை அணைத்துக்கொண்டு, மௌனமாகவே தன் புடைவைத் தலைப்பால் என் கண்களைத் துடைப்பாள். அவள் வந்தது, படுக்கையில் படுத்தது எல்லாம் எனக்குத் தெரியாது. அவள் எதுவுமே என்னைக் கேட்பதில்லை. நானும் அவளுடன் எதையும் சொல்வதில்லை. மெல்ல அவள் தன் மிருதுவான கையால் என் நெற்றியைத் தடவினாள். இதற்கிடையே இடியும் புடையுமாக மழை கொட்டியது. ஒன்றுமே என் நினைவில் இல்லை. வெகு நாளைக்கப்புறம் தண்மையும் அமைதியும் எரிந்துபோன என் உள்ளத்திற்கு ஆறுதலைத் தந்தன.

மறு நாள் ஹேமாங்கினி, "சித்தி, நீ கிளம்பாவிட்டால், யாரையாவது துணைக்கு அழைத்துக்கொண்டு ஊருக்குத் திரும்பிவிடுகிறேன். இதோ சொல்லிவிட்டேன்" என்றாள். அதற்கு அத்தை, "அவ்வளவு தூரம் எதற்கடி? நாளைக்கு நானும் கிளம்பிவிடுகிறேன் உன்னோடு; இதைப் பார், ஹிமு. அவிநாசன் உனக்காக இந்த நல்முத்து மோதிரம் வாங்கியிருக்கிறானடி'' என்று பெருமையுடன் மோதிரத்தை ஹேமாவின் கையில் கொடுத்தாள். ஹேமாங்கினி, "சித்தி, நான் எவ்வளவு அழகி என்று

எனக்கு நன்ருகத் தெரியுமே" என்றதும் ஜன்னலின் மூலம் மோதிரத்தை புழைக்கடைப் பக்கமாகவுள்ள பாழுங் குட்டையில் வீசி எறிந்தாள். அத்தைக்காரிக்குக் கோபம், துக்கம், வியப்பு எல்லாம் கலந்து வந்தன.

என்னைத் தொட்டுத் தொட்டு அவள், "இந்த அசடு செய்த காரியம் அவிநாசன் வரைக்கும் எட்டப் போகிறது; தெரிந்தால் அவன் மனசு கஷ்டப்படும். சொன்னுல், என்னை அறுத்துத் தின்றது போல" என்ருள். நான், "நான் ஏன் சொல்லப்போகிறேன், அத்தை, இதை யெல்லாம் ?" என்றேன்.

அடுத்த நாள் ஊருக்குப் புறப்படும்பொழுது ஹேமாங்கினி என்னைத் தழுவிக்கொண்டு, "அக்கா, என்னை மறந்துவிடாதே" என்ருள். நான் என் இரு கைகளாலும் அவள் முகத்தை அடிக்கடி வருடி, "குருடர்கள் எதையுமே மறக்க மாட்டார்கள். என் உலகமோ இருளடைந்திருக் கிறது. மனத்தை வைத்துக்கொண்டுதான் உயிர் வாழ் கிறேன்" என்று உச்சி மோந்து அவள் நெற்றியில் முத்தம் கொடுத்தேன். அவளுடைய அடர்ந்த கூந்தல்மீது மழை யென என் கண்ணீர் சிந்தியது.

ஹேமாங்கினியைப் பிரிந்ததும் எனக்கு உலகமே வெற்றிடமாக ஆகிவிட்டது. என் வறண்ட வாழ்வு மீண்டும் தளிர்க்க அழகு, இசை, மணம், ஒளி, இளமை யாவும் கொண்டு வந்திருந்தாள். அவள் போனதுமே எத் திசையிலும் கையை நீட்டித் தடவிப் பார்த்ததும், சூனியமே நிலவியது. எனக்கென்ன இருக்கிறது, இந்த வாழ்வில் ? என் கணவர் வந்தார். எனக்குத் தென்பை உண்டாக்க, "அவர்கள் போனதே நல்லதாகப் போயிற்று. இனிமேல்

என் காரியத்தைக் கருத்துடன் செய்வேன்" என்ருர். அடி பைத்தியக்காரி என்று என்னையே நொந்துகொண்டேன். எனக்காகவா இந்தப் பாசாங்கெல்லாம்! நான் உண்மையைக் கண்டு நடுங்குகிறேனு! எவ்வளவோ அதிர்ச்சிகளைத் தாங்கி இருக்கிறேனே! இது எம்மாத்திரம்! கண் இரண்டையும் கொடுத்து நிரந்தர இருள் கவிந்த இந்த வாழ்வினை அமைதியுடன் நான் ஏற்றிருப்பது எதனுல்? இது என் கணவருக்குத் தெரியவில்லையே?

இத்தனை நாள் வரை என் கணவருக்கும் எனக்கும் இடையே இருளின் திரைமட்டும் இருந்தது. இன்று தொட்டு மற்றென்றும் எங்களுக்குக் குறுக்கே நிற்க ஆரம்பித்துவிட்டது. கவனப்பிசகாகக் கூட என் கணவர் ஹேமாங்கினியின் பெயரை என் எதிரே எடுத்தது கிடையாது. எங்கள் குடும்பத்தில் அவள் சில தினங்கள் இருந்த சுவடே தெரியாததுபோல நடந்துகொண்டார். ஆனுல் அவர் கடிதங்கள் மூலமாக அவளைப்பற்றி விசாரிப்பது எனக்குத் தெரியாமல் போகவில்லை. புது வெள்ளம் குளத்தை நிரப்ப நிரப்ப அல்லிக்கொடி உயர்வது போல, அவர் மனத்துள் இன்பம் பொங்கும்பொழுதெல்லாம், அது என் இதயத்தின் உட்புரையைத் தொடும். கடிதம் அவர் போடுவதும், பதில் கடிதம் வருவதும் எனக்குத் தெரியாத விஷயமல்ல. நான் இதைப்பற்றி யெல்லாம் அவரிடம் கேட்பதில்லை. என் இருண்ட இதயத்துள் கண நேரம் உதயமாகியிருந்தது, ஒளிமயமான ஓர் அழகிய தாரகை. அதைப்பற்றித் தெரிந்துகொள்ள என் மனம் அலை பாய்ந்தது. ஆனுல் அதன் பெயரை என் கணவர் முன்னிலையில் எடுக்க எனக்கு என்ன உரிமை இருக்கிறது? எங்கள் இருவருக்கும் நடுவில்தான் விலகாததோர் மௌனம் நிற்கிறதே!

சித்திரை மாதத்தின் நடுவில் ஒரு நாள் வேலைக்காரி என்னிடம் வந்து, "அம்மா துறையில் படகு நிறையச் சீர் வகைகள் ஏற்றிக் கொண்டு ஐயா எங்கேயோ புறப்படுகிறார்போல் இருக்கிறது" என்று அறிவித்தாள். ஓஹோ! என்னவோ சூழ்ச்சி நடக்கிறது என்று எண்ணிக் கொண்டேன். இதுவரை என் பாக்கிய ஆகாசத்தில் நிகழ்ந்த நிச்சலம் புயலுக்குமுன் தோன்றும் அமைதியே தான். இப்போது பிரளய மேகங்கள் நாலுபக்கமும் அதைச் சூழ்ந்துவிட்டன. நாசமூர்த்தியான சிவன் தன் சக்தி கணங்களை ஒன்றாகத் திரட்டி என்னை அழிக்கத்தான் முனைந்துவிட்டான் என்று அறிந்தேன். வேலைக்காரியிடம், "எங்கேயடி, என்னிடம் ஒன்றும் சொல்லவில்லையே அவர்?" என்றேன். அதற்குமேல் பேச அஞ்சியவளாக அவள் பெருமூச்செறிந்து அகன்றாள்.

இரவு வெகு நேரம் இருக்கும். என் கணவர் அறைக்குள் வந்து, "நான் தொலைவில் அவசியமாகப் போக வேண்டிய காரியம் இருக்கிறது. நாளைப் பொழுது விடிவதற்குள் நான் அங்கே இருக்கவேண்டும். திரும்பி வர இரண்டு மூன்று தினங்கள் செல்லும்" என்றார்.

படுக்கையைவிட்டு எழுந்து நின்றேன். "என்னிடம் ஏன் இந்தப் பொய் புரட்டெல்லாம்?" என்றேன்.

என் கணவர் குரல் தடுமாற, "நான் என்ன பொய் சொல்லிவிட்டேன்?" என்றார்.

"தெரியுமே! நீங்கள் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறீர்கள்."

அவர் ஒன்றும் பேசவில்லை. நானும் நிலைத்து நின்றேன். வெகு நேரம் வரையில் ஒருவரும் பேசவில்லை.

கடைசியாக, "ஆமாம், கல்யாணம் செய்துகொள்ளத்தான் போகிறேன் என்று சொல்வதற்கென்ன ?" என்றேன்.

எனக்கு எதிரொலி தருவது போல, "ஆமாம், விவாகம் செய்துகொள்ளத்தான் போகிறேன்" என்றார்.

"உங்களை நான் போக விடமாட்டேன். இந்தப் பெரிய பாபத்திலிருந்து உங்களைக் காப்பாற்ற வேண்டியது என் கடமை. இதைச் செய்யாதுபோனால் நான் உங்களுக்கு மனைவியாக இருப்பது எதற்காக? நான் சிவபூஜை பண்ணதெல்லாம் வீணே!" என்றேன்.

மீண்டும் வெகு நேரம் மௌனத்தில் கழிந்தது. நான் தரையில் விழுந்து கணவரின் பாதங்களைப் பற்றிக்கொண்டு, "நான் என்ன தவறு செய்துவிட்டேன், இப்படி என்னை விட்டு நீங்கள் வேறு விவாகம் செய்துகொள்வதற்கு! என் மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன்!" என்றேன். அப்போது என் கணவர் மெதுவாகவே, "நிஜத்தைச் சொல்கிறேன். உன்னிடம் எனக்குப் பயமே! உன்னுடைய இந்தக் குருட்டு நிலை என்னைவிட்டுப் பிரித்து உன்னை ஒரு தனி உலகில் மூடி வைத்திருக்கிறது. அங்கே நுழைய எனக்கு இடமில்லை. உன்னை ஒரு தெய்வம்போல் அஞ்சுகிறேன். உன்னை வைத்துக்கொண்டு வீட்டுக் காரியங்களைச் செய்ய என்னால் இயலவில்லை. எரிந்து விழுவதற்கும், உடனே கட்டியணைப்பதற்கும், அழுதபோது கண்ணீரைத் துடைப்பதற்கும், ஒரு சாதாரண உலகத்துப் பெண் எனக்கு இப்பொழுது தேவையாக இருக்கிறாள்" என்றார்.

"என் நெஞ்சைப் பிளந்து பாருங்கள். நான் சாதாரணப் பெண் அல்லவா ? நீங்கள் மணந்த புதிதில் கண்ட அதே இளம் பார்வைதான் இன்னும்; இன்னும் உங்களையே நம்பியிருக்கிறேன் ; உங்களையே நாடி வழிபடுகிறேன்.

ஏனோ உங்களுடைய உயர்ந்த தன்மைக்கு இழிவு தேடிக் கொள்கிறீர்கள்? என் மனத்தைப் புண்படுத்தி இப்படி ஏன் என்னை உயர்த்திவிட்டு அகற்றி வைக்கிறீர்கள்? ஒவ்வொரு விஷயத்திலும் உங்கள் அடிச்சுவட்டைப் பின் பற்றுபவளல்லவா நான்!'' என்றேன்.

நான் என்ன என்ன வார்த்தைகள் சொன்னேனோ அதெல்லாம் கவனத்தில் இருக்கிறதா என்ன! பொங்கும் கடலுக்கு அதன் ஓலம் செவியில் படுமா என்ன! இந்த வார்த்தைமட்டும் கவனம் இருக்கிறது: "நான் மட்டும் ஸதியானால், இதோ கடவுளுக்குப் பொதுவாகச் சொல்லுகிறேன்: நீங்கள் ஒருகாலும் எனக்குத் தந்த வாக்கைமீறி நடக்கக் கூடாது. அப்படி மீறுவதாக இருந்தால், நானாவது ஒன்று விதவை ஆகிவிடவேண்டும், ஹேமாங்கினியாவது இறந்து போய்விடவேண்டும்'' இதைக் கூறியதும் நான் மூர்ச்சை அடைந்தேன்.

ஸ்மரணை வந்தபொழுது, இரவு கழிந்து பொழுது விடியும் சமயம்; பறவைகளின் குரல்மட்டும் கேட்க வில்லை. பக்கத்தில் என் கணவர் இல்லை. அவர் போய் விட்டார்.

நான் பூஜை அறைக்குள் சென்று தாழிட்டுக்கொண்டு தியானத்தில் ஆழ்ந்துவிட்டேன். அன்று முழுவதும் நான் வெளியிலேயே வரவில்லை. மாலை நேரம் ஒரு பலத்த சூறுவளி வீடு வாசலையெல்லாம் குலுக்கிப் போட்டது. ஆனால் நான் மட்டும், 'பகவானே! என் கணவர் இந்தச் சமயத்தில் படகில் சென்றுகொண்டிருப்பார். அவரைக் காப்பாற்று' என்று வேண்டிக்கொள்ளவில்லை. ஆனால் மனத்துள் மட்டும், "பகவானே, என் தலை எழுத்து எப்படி வேண்டுமானாலும் ஆகட்டும். ஆனால் இந்தப் பெரும்

பாபத்திலிருந்து என் கணவரை மீட்பாய்'' என்று பிரார்த்தனை செய்துகொண்டேன். இரவெல்லாம் இப்படியே கழிந்தது. அடுத்த நாளும் என் இடத்தைவிட்டு நான் எழுந்திருக்கவில்லை. தூக்கமில்லை ; வயிற்றுக்கோ ஆகாரமில்லை. இந்த நிலையில் எனக்கு யார் இந்த அமோக பலம் தந்தார்களோ! அந்தச் சிலாவிக்கிரகத்தின் முன்பு நானும ஒரு சிலைபோல உட்கார்ந்திருந்தேன்.

அந்தி நேரம்; கதவை அசைக்கும் சப்தம் கேட்டது. யாரோ உடைத்துக்கொண்டு உள்ளே வந்து நான் நினைவற்றுக் கிடப்பதைப் பார்த்தார்கள்.

மூர்ச்சை தெளிந்தபொழுது, ''அக்கா'' என்ற குரல் என் செவியில் விழுந்தது. விழித்துக்கொண்டபொழுது ஹேமாங்கினியின் மடிமீது நான் சாய்ந்திருப்பதை உணர்ந்தேன். அவள் உடம்பு அசையும்பொழுதெல்லாம் புதுக் கூறைச் சேலை விசுவிசுத்தது. 'ஐயோ தெய்வமே! என் பிரார்த்தனை உன் செவியில் ஏறவில்லையா? கடைசியில் என் கணவர் பெரும் பாபத்திற்குள்ளானரே!'' என்று எனக்குள் சொல்லிப் புலம்பினேன். ஹேமாங்கினி என் மேல் கவிந்து மெதுவான குரலில், "அக்கா, உன் ஆசிர்வாதம் பெறவே இங்கு வந்தேன்" என்றாள்.

என் உடம்பு மரத்துவிட்டது. ஆனால் மறு கணமே, எழுந்து உட்கார்ந்தேன். ''உன் மேலென்ன தவறம்மா? நான் ஆசிர்வாதம் செய்கிறேன்" என்றேன்.

ஹேமாங்கினி அருவிச் சிரிப்புடன், "தவரு, அக்கா? நீ விவாகம் செய்துகொள்வது தவறில்லை; நான் செய்துகொண்டால் தவரு ?" என்றாள்.

ஹேமாவை அணைத்துக்கொண்டு நானும் சிரித்தேன். இந்த உலகில் என் ஒருத்தியின் வேண்டுகோள்தான்

பிரதானமா என்ன! எல்லாம் இறைவனுடைய இஷ்டமே! அடி எவ்வளவு வேண்டுமானாலும் என் தலையில் விழட்டும். ஆனால் ஒரு தர்மத்தைக் கடைபிடிக்கும் – ஓர் உண்மையை நம்பும் – இந்த இதயத்துள் அது விழ நான் இடந் தரமாட்டேன். எப்படி இருந்தேனோ அப்படியே இருப்பேன். ஹேமாங்கினி என் காலடியில் விழுந்து என் பாததூளிகளை ஏற்றுக்கொண்டாள். "அம்மா, நீ நல்ல பாக்கியத்துடன் இருக்கவேண்டும். நீடித்த சுகம் உனக்கு ஏற்படவேண்டும்" என்று ஆசி கூறினேன். "இந்த ஆசீர்வாதம்மட்டும் போதாது. ஸதியான உன் கையால் என்னையும், உன் தங்கையின் புருஷரையும் ஏற்றுக் கொள்ளவேண்டும். அவரை மட்டும் நீ ஒதுக்கி விடுவது நல்லதல்ல. உத்தரவு கொடுத்தால் உள்ளே அழைத்து வருகிறேன்."

"அழைத்து வா" என்றேன்.

கொஞ்ச நாழிகைக் கெல்லாம் என் அறையில் புதிய காலடியின் சப்தம் கேட்டது. "குமு, சௌக்கியமா?" என்று ஒரு குரல் கேட்டது; ஆதரவுடன் விசாரித்தது. நான் வாரிப் போட்டுக்கொண்டு படுக்கையை விட்டு எழுந்து, உடனே நமஸ்கரித்து, "அண்ணா" என்றேன்.

"அண்ணா யாரது? உன் தங்கையின் புருஷன் அல்லவா!"

எல்லாம் எனக்குப் புரிந்தன. விவாகம் செய்து கொள்ளக்கூடாதென்பது அண்ணாவின் பிரதிக்ஞை. பண்ணிக் கொள் என்று உறுத்திச் சொல்வதற்கு அம்மாவோ, வேறு பெரியவர்களோ யாரும் இல்லை. இப்பொழுது என்னாலேயே இந்த விவாகம் ஆகிவிட்டது. என் கண்களிலிருந்து ஆறாய்ப் பெருகியது கண்ணீர்.

சற்றும் நில்லாமல். அண்ணு என் தலைமயிரை நீவிக் கொடுத்தார். ஹேமாங்கினி என்னைக் கட்டிக்கொண்டு கலகலவென்று சிரித்தாள்.

இரவு தூக்கமே வரவில்லை. கணவனை எதிர்பார்த்து என் உள்ளம் ஏங்கி இருந்தது. அவர் எப்படித்தான் அவமானத்தையும் ஏமாற்றத்தையும் சகித்துக்கொள் வாரோ என்ற வேதனையே எனக்கு.

இரவு வெகு நேரம் இருக்கும். என் அறைக் கதவு மெல்லத் திறந்தது. திக்கென்றது என் உள்ளம். என் புருஷரின் காலடிதான். என் மார்பு படபடத்தது.

அவர் படுக்கையண்டை வந்து என் கையைப்பிடித்துக் கொண்டு, "உன் அண்ணன்தான் என்னைக் காப்பாற்றினுன். மோகத்தில் சிக்கி நான் அழிந்து போகப் போனேனே! படகில் ஏறும்போது என் உள்ளத்துள் ஏதோ ஒன்று கனமாக அழுத்தியது. அது கடவுளுக்குத் தெரியும். நடு ஆற்றில் பெரும் புயலில் சிக்கியபோது என் பிராணன் துடிதுடித்தது. மூழ்கி இறந்துபோனுலே இந்தப் பெரும் பாபத்திலிருந்து மீண்டதுபோல் ஆகும் என்று எண்ணிக் கொண்டேன். மதுர்கஞ்ஜை அடைந்தபொழுது கேள்விப் பட்டேன்: முந்திய தினமே உன் அண்ணுவுக்கும் ஹேமாவுக்கும் கல்யாணம் நடந்தேறிவிட்டதாம். ஒரு பக்கம் தலைதூக்க முடியாதபடி அவமானம்; ஒரு பக்கம் சந்தோஷம். வந்த படகிலேயே திரும்பிவிட்டேன். இப் போதுதான் எனக்கு வெளிச்சமாயிற்று; உன்னை விட்டு அரை நிமிஷமாயினும் பிரிந்திருந்தால் எனக்குச் சுகமேது? நீதான் என்னுடைய தேவி" என்ருர்.

நான் சிரித்துக்கொண்டே, "என்னை ஏன் தேவியாக ஆக்குகிறீர்கள்? நான் உங்கள் வீட்டுக்காரி; சாமானியமான பெண்" என்றேன்.

"என் வார்த்தையை நீயும் கேட்கவேண்டும் : என்னை தெய்வமாகக் கொள்ளாமல் உலகத்திலுள்ள ஒரு மனிதனுகவே பாவிக்கவேண்டும்."

மறுநாள் மங்கள சங்க வாத்தியங்களும் பெண்களின் இன்னிசைக் குரலும் அந்த இடத்தைக் கலகலப்பாக்கின. ஹேமாங்கினி, என் கணவரைச் சாப்பிடும்போதும் போகும்போதும் விடாமல் ஏதாவது பரிகாசம் செய்து கொண்டே இருந்தாள். அவள் செய்த தொந்தரவுக்கு ஓர் அளவே இல்லை. ஆனுல் என் கணவர் எங்கேயோ போனது, அங்கே நடந்த சமாசாரம் இவற்றையெல்லாம் யாருக்குமே நான் எட்ட விடவில்லை.

# விடுதலைக்கு வழி

## 1

பக்கீர்சந்த் சின்ன வயதிலிருந்தே நிதான புத்தி உள்ளவன்; பெரியவர்களோடு பழகத் தகுந்தவன். குளிர்ந்த நீர், பனி, விளையாட்டு, வேடிக்கை என்றால் அவனுக்குப் பிடிக்கவே பிடிக்காது. அதிகமாகப் பேசாதவன். வருஷத்தில் ஒன்பது மாதம் அவன் முகத்தைச் சுற்றிக் கறுப்பு மப்ளர் சுற்றிக்கொண் டிருந்த தால், ஏதோ பெரிய ஆசாமிபோலவே தோன்றியது. தவிர, சின்ன வயதிலேயே அவனுக்கு மீசையும் தாடியும் வளர்ந்து விடவே சிரித்தால்கூட நன்றாக எடுத்துக் காட்டாது.

மனைவி ஹைமவதி சின்னவள். அவள் உள்ளம் சதா ஸம்ஸாரத்திலேயே அழுந்திக்கிடந்தது. பங்கிம் பாபுவின் நாவல் படிக்க ஆசைப்படுவாள். கணவனைத் தெய்வமென்று கொண்டாடுவது அவளுக்குப் பிடிக்காது. அவள் சிரிப்பும் குதூகலமுமாக இருக்க விரும்புபவள்; காற்றின் அசைவு, கதிரவனின் ஒளி இவைகளுக்காக மலரும் அரும்பு காத்திருப்பதுபோல, அவளும் புது இளமையில் கணவனிட மிருந்து ஆதரவையும் அன்பையும் எதிர்பார்த்தாள். ஆனால் அவனோ ஒழிந்த நேரங்களில் அவளைப் பாகவதம் படிக்கச் சொல்லுவான்.

அந்தி வேளைகளில் பகவத் கீதையைப் பாராயணம் பண்ணு என்பான். அவளுடைய ஆத்மிக வளர்ச்சிக்காக நடுநடுவே மெய் வருந்த வேலை செய்யும்படி அவளுக்கு

உபதேசங்கள் செய்வான். ஒரு நாள் ஹைமவதியின் தலையணைக்குக் கீழேயிருந்து, 'கிருஷ்ணகாந்தன் உயில்' வெளிப்பட்டது. அன்று அந்த உல்லாசப் பேர்வழியான யுவதியை ராத்திரியெல்லாம் உபத்திரவம் செய்து அழ மூட்டினான். நாவல் படித்தது ஒரு பிசகு; அதற்குமேல் கணவன் சொல்படி நடக்காதது பெருங் குற்றமல்லவா? மிரட்டி அதட்டி உருட்டி அடித்து ஹைமவதியின் சிரிப்பு, மன அமைதி, இளமையின் ஆவல் எல்லாவற்றையும் பாழாக்கிய பின்னரே அவனுக்குத் திருப்தி ஏற்பட்டது.

ஆனால், பற்றில்லாத ஆட்களுக்கு ஸம்ஸாரம் பெரியதோர் இடைஞ்சல்! அடுத்தடுத்துப் பக்கீருக்கு ஒரு பிள்ளையும் பெண்ணும் பிறந்துவிடவே, ஸம்ஸாரத் தொல்லை பெருகியது. தகப்பனார் தூண்ட நிதானப் பிரகிருதியான பக்கீரும் வேலைக்காக ஒவ்வோர் ஆபீஸுக்கும் மனுப் போட வேண்டியதாயிற்று. ஆனால் வேலை கிடைக்கும் வழியாகக் காணவில்லை.

புத்தரைப்போல் வீட்டைத் துறந்துவிடுவது என்று தீர்மானம் செய்தான். இதே யோசனையுடன் ஒரு நாள் ராத்திரி வீட்டைவிட்டு வெளியேறினான்.

## 2

இதற்கிடையே இன்னொரு வரலாறு சொல்ல வேண்டியது அவசியம்.

நவக்கிராமத்தில் ஷஷ்டிசரணர் என்பவருக்கு ஒரு பிள்ளை. அவன் பெயர் மாகன்லால். கல்யாணமானதும் குழந்தை பிறக்காமல் போகவே அவன் தகப்பனார் இன்னொரு கல்யாணம் செய்துகொள்ளத் தூண்டினார்.

இந்த விவாகம் ஆனதும், நாளடைவில் இருவருக்குமாக ஏழு பெண்களும் ஒரு பிள்ளையும் பிறந்தனர்.

மாகன் கொஞ்சம் சுகப் பிரியன். சபல சுபாவம் அவனுக்கு. பொறுப்பான விஷயத்தைத் தன்மேல் போட்டுக்கொள்ள மாட்டான். ஏற்கனவே பிள்ளைகுட்டி களின் தொந்தரவு; அதனுடன் இரண்டு மனைவிகளுமாகக் காதைத் திருகவே, பொறுக்க முடியாமல் ஒரு நாள் ராத்திரி இருளில் பிடித்தான் ஓட்டம்!

அதற்கப்புறம் வெகு நாட்களாக அவன் தென்படவே இல்லை. ஒரு மனைவியோடு நின்றுவிட்டால் வரும் பாக்கியத்தைப் பரீக்ஷை செய்வது எப்படியென்று, காசிக் குப் போய் இன்னொரு கல்யாணம் பண்ணிக்கொண்டிருப்ப தாகக் கேள்வி. பாவம், அந்தத் துரதிருஷ்டசாலி, ஏதோ நிம்மதியாக இருந்தான். ஊரைப் பார்க்கவேண்டும் என்ற ஆசை நடுநடுவே இருந்தாலும், மாட்டிக்கொண்டுவிடப் போகிறோமே என்ற பயத்தினால் வரவில்லை.

3

கொஞ்ச நாட்கள் ஊரெல்லாம் சுற்றி அடித்து விட்டு நவக்கிராமத்துக்கு வந்து சேர்ந்தான் பக்கீர்சந்த். வழியோரத்தில் இருந்த ஆலமரத்தடியில் உட்கார்ந்து பெரு மூச்செறிந்து, "ஆகா! வைராக்கியமே அபயம். பெண்டு, பிள்ளை, வீடு, பணம் எல்லாம் என்ன! காதே காந்தா, கஸ்தே புத்ர :" என்று ஒரு பாட்டை எடுத்தான் :

"பாழும் மனமே, நீ கேள்!
விடுதலைக்கான வழி நாடு!
பிரபஞ்சமென்னும் ஓடு விண்ட ஞானமுத்தைத் தேடு!
பாழும் மனமே, நீ கேள்!"

சட்டென்று பாட்டு நின்றது. "யாரது? அப்பாவா! தெரிந்துவிட்டதுபோல் இருக்கிறதே! அப்போ நாசந்தான். திரும்பவும் என்னை ஸம்ஸாரப் படுகுழியில் வீழ்த்தி விடுவார். தப்பித்துக்கொள்ள வேண்டும்!"

4

பக்கீர் சரசரவென்று பக்கத்திலிருந்த வீட்டுக்குள் புகுந்தான். வீட்டுக்காரக் கிழவர் இடைகழியில் அமர்ந்து ஹுக்கா பிடித்துக்கொண் டிருந்தார். பக்கீர் உள்ளே நுழைந்ததுமே, "யாரப்பா, நீ?" என்றார்.

**பக்கீர் :** ஐயா! நான் சந்நியாசி.

கிழவர், "சந்நியாசியா! வா, வா, வெளிச்சத்தில் பார்க்கலாம்" என்று அவனை வெளியே அழைத்துப் போய் முகத்தைக் கூர்ந்து நோக்கினார்; கிழவர் புஸ்தகம் படிப்பதுபோல் என்னவோ முணுமுணுத்துக் கொண்டார்.

"அட! நம்ப மாகனேதான். அதே மூக்கு, அதே கண்; நெற்றிதான் கொஞ்சம் மாறியிருக்கிறது. அந்த அழகான மூஞ்சியில் தாடியும் மீசையும் முளைத்து விட்டதே!" என்று அவர் அன்புடன் பக்கீரின் மயிர் செறிந்த முகத்தை இரண்டு கைகளாலும் தடவினார். "அப்பா மாகன்!" என்றார் உரக்க.

அந்தக் கிழவர் ஷஷ்டிசரணர்தாம் என்று சொல்ல வேண்டியதில்லை.

பக்கீர் வியப்புடன், "மாகனா! என் பெயர் மாகன் இல்லையே! முன்னால் என் பெயர் என்னவோ; இப்போது என் பெயர் சிதானந்தஸ்வாமி. பரமானந்தன் என்றுகூடச் சொல்லலாம்" என்றான்.

"அப்பா, நீ சித்திரான்னம் என்றாலும் சரி, பரமான்னம் என்றாலும் சரி; நீ என் மாகன் (வெண்ணெய்) தான். அது எனக்கு மறக்கவே மறக்காது. உனக்கு என்ன கஷ்டம், இந்தமாதிரி ஸம்ஸாரத்தைத் துறக்க? என்ன குறைச்சல் உனக்கு? இரண்டு பெண்டாட்டிகள். பெரியவள் பிடிக்காவிட்டால் சின்னவள் இருக்கவே இருக்கிறாள். குழந்தை குட்டிகளுக்கும் குறைவில்லை. ஏழு பெண்களும் ஒரு பிள்ளையும் இருக்கிறார்கள் உனக்கு; நானோ கிழவன். இன்னும் எத்தனை நாள்தான் இருப்பேன்? உன் ஸம்ஸாரத்தை நீதானே பார்த்துக்கொள்ள வேண்டும்?"

இதைக் கேட்டதும் பக்கீருக்குத் தூக்கி வாரிப் போட்டது. "என்னது! கேட்டாலே பயமாக இருக்கிறதே!" என்றான்.

இவ்வளவு நேரங் கழித்து விஷயம் என்னவென்று தெரிந்தது. 'இதில் என்ன நஷ்டம்? இரண்டு நாட்கள் இந்தக் கிழவரின் பிள்ளையைப்போல் இருப்போமே; அப்பா என்னைத் தேடிவிட்டுப் போனதும் ஓடிவிடலாம்' என்று நினைத்தான்.

பக்கீர் பதில் சொல்லாமல் இருக்கவே கிழவரின் சந்தேகம் தீர்ந்தது. வேலைக்காரனைக் கூப்பிட்டார். "அடே கிஷ்டா! எல்லாருக்கும் போய்ச் சொல்லிவிட்டு வா; நம்ப மாகன் திரும்பி வந்துவிட்டான்" என்றார்.

பார்த்துக்கொண் டிருக்கும்போதே ஜனங்கள் கூடினர். கிராமத்தில் முக்கால்வாசிப்பேர் அவனேதான் என்றனர். சிலர் சந்தேகப்பட்டனர். சந்தேகப்பட்டவர் மேல் மற்றவர்கள் எரிந்து விழுந்தனர். "சே! வீணுக்கு இந்தச் சுவாரஸ்யத்தைக் கெடுக்கத்தான் இவர்கள் வந்திருக்கிறார்கள். பேய் பிசாசை நம்புவதில்லை; மந்திரங்களை

நம்புவதில்லை. ஆச்சரியமான விஷயம் ஒன்றைக் கேட்டு எல்லாரும் பிரமித்து நிற்கும்போது இவர்கள் கேள்வி கிளப்புகிறார்கள். இதை ஒருவித நாஸ்திகம் என்றே சொல்லலாம்; பேயை நம்பவேண்டாமையா; போனால் போகிறது. பாவம், கிழவரின் காணாமல்போன பிள்ளை அவரைக்கூட நம்பாவிட்டால்! என்ன கல்நெஞ்சு" என்று எல்லாரும் மிரட்டவே சந்தேகம் கிளப்பியவர்கள் ஓய்ந்தனர்.

பக்கீரின் ஆழ்ந்த முகத்தையும் அசையாத நிலையையும் கண்டு முகஞ் சுளிக்காமல் ஊரார் அவனைச் சுற்றிக் கொண்டனர். "அடேடே! நம்ப மாகன் ரிஷியாக மாறி விட்டார் டோய்! தபஸ்வியாகிவிட்டார். காலமெல்லாம் வம்பு பேசிக் கழித்தாகிவிட்டது. இன்று திடீரென்று சித்த புருஷராகிவிட்டார்" என்றனர்.

உயர்ந்த மனோபாவம் உள்ள பக்கீருக்கு இந்த வார்த்தைகள் உறைத்தன. ஆனால் வேறு வழி இல்லாமல் பொறுத்துக்கொண்டான். ஓர் ஆள் மேலே விழுந்து, "டேய் மாகன்! கன்னங் கறேலென்று இருந்தாயே, எப்படியடா சிவப்பானாய்!" என்றான்.

"எல்லாம் யோகாப்பியாசம்" என்றான் பக்கீர்.

"யோகாப்பியாசத்தின் மகிமையைத்தான் பாரேன்!" என்று எல்லாரும் பேசிக்கொண்டார்கள்.

"இதிலென்ன, ஐயா, ஆச்சரியம்! புராணமே சொல்லுகிறதாம்: பீமன் ஹநுமானின் வாலைத் தூக்க முயன்ற போது அவனால் முடியவே இல்லை. எப்படி? யோக பலந்தான் எல்லாம்" என்றான் ஒருவன்.

இதை எல்லோரும் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று.

இதற்குள் ஷஷ்டிசரணர் வந்து, "அப்பா, கொஞ்சம் உள்ளே வாயேன்" என்றார்.

இந்த விஷயத்தைப்பற்றிப் பக்கீர் யோசிக்கவே இல்லை. இடிபோல் இருந்தது அவனுக்கு இந்தச் சமாசாரம். ஊரார் பலவிதமாக ஏளனம் செய்தபின் கடைசியில், "ஐயா, நானோ சந்நியாசி. உள்ளே வரக்கூடாதே" என்றான்.

ஷஷ்டிசரணர் ஊராரைப் பார்த்து, "அப்படியானால் நீங்கள் வருகிறீர்களா? மாட்டுப் பெண்களை இங்கேயே அழைத்து வருகிறேன். எவ்வளவு கவலையுடன் இருக்கிறார்கள் தெரியுமா? பாவம்" என்றார்.

எல்லாரும் எழுந்து சென்றனர். 'இதுதான் சமயம் ஓட்டம் பிடிக்க' என்று பக்கீர் நினைத்தான். ஆனால், 'வெளியில் போனால், ஊரார் துரத்திக்கொண்டு வருவார்களே' என்று எண்ணி அவன் அசையாமல் நின்றான்.

மாகன்லாலின் மனைவிகள் இருவரும் உள்ளே வந்ததும், பக்கீர் தலைவணங்கி, "அம்மா, நான் உங்கள் பிள்ளை" என்றான்.

இதைச் சொன்னதுதான் தாமதம், வளையணிந்த கை ஒன்று கத்திபோல் அவன் மூக்கோடு உராய்ந்து சென்றது. வெண்கலத்தைப் பழிக்கும் குரல் ஒன்று, "ஏ குருட்டுக் கிழமே! அம்மா யாருன்னு பார்த்துட்டுச் சொல்லு" என்றது.

அதற்குள் இன்னொரு குரல் இரண்டு மடங்கு உரக்க ஊரைக் கலக்கியவாறு, "கண் பொட்டையாயிட்டுதா என்ன? நீ நாசமாகப் போக!" என்றது.

தன் மனைவி இந்தமாதிரி பேசிக் கேட்டு வழக்கமில்லையாதலால், பக்கீர் பயத்துடன் கைகூப்பி, "நீங்கள்

எண்ணியது தவறு; இதோ நான் வெளிச்சத்தில் நிற்கிறேன்; நன்ருகப் பாருங்கள்" என்ருன்.

மூத்தாளும் இளையாளுமாக, "நன்ருகப் பார்த்தாச்சு! பார்த்துப் பார்த்துக் கண் பூத்துப் போச்சு. நீ பச்சைக் குழந்தை இல்லே. தெரியுமா? பிறந்த குழந்தைன்னு நினைச்சுக்காதே. கடைவாய்ப் பல் போகிற வயசாச்சு. உன்னை யமன் மறந்துட்டான் என்று நாங்களும் மறந்து விடுவோமா?" என்ருர்கள்.

தம்பதிகளுக்கிடையே இந்த மாதிரிச் சம்பாஷணை எவ்வளவு நேரம் நடந்ததென்று சொல்ல முடியாது. பக்கீர் பேசச் சக்தியின்றி நின்ருன். அதே சமயம் வீட்டினுள் உரத்த சப்தம் கேட்கவே வழியில் ஜனங்கள் கூடினர். அதைக் கண்டு ஷஷ்டிசரணர் உள்ளே வந்தார்.

"இத்தனை நாள் என் வீட்டில் ஒரு துளி ஓசை கேட்டதில்லே. இன்று என் மாகன் திரும்பி வந்துவிட்டானே இல்லேயோ?" என்ருர்.

பக்கீர் கைகூப்பி, "ஸ்வாமி! உங்கள் மாட்டுப்பெண்களின் கையிலிருந்து என்னை விடுவியுங்களேன்" என்ருன்.

"அப்பா, ரொம்ப நாள் கழித்து வந்திருக்கிருய். அதுதான் முதலில் கொஞ்சம் பொறுக்க முடியாமல் இருக்கும். அம்மா, நீங்கள் போகலாம். இனிமேல் மாகன் என்னவோ எங்கேயும் போகமாட்டான், நான் விட்டால் தானே........."

பெண்கள் இருவரும் உள்ளே போனதும், பக்கீர் ஷஷ்டிசரணரைப் பார்த்து, "ஸ்வாமி, உங்கள் பிள்ளை ஏன் வீட்டைவிட்டு ஓடினுன் என்று தெரிகிறது எனக்கு. நமஸ்காரம்; நான் வருகிறேன்" என்ருன்.

கிழவர் இதைக் கேட்டு உரக்க அழ, ஊரார், மாகன் தன் அப்பனை அடித்துவிட்டான் என்று எண்ணிக்கொண்டு

'ஆ! ஆ!' என்று ஓடி வந்தனர். "இந்த மாதிரி போலிச் சாமியார் வேஷம் இங்கே பலிக்காது. பெரிய மனிதன் வீட்டுப்பிள்ளை போல் நடந்துகொள்ளவேண்டும்" என்று பக்கீரிடம் சொன்னார்கள். ஒருவன், "இவன் பரமஹம்ஸனில்லை; பரமபகன் (கொக்கு)" என்றான். முகத்தில் சுருக்கங்கள், தாடி, மீசை, காஷாயம் இவை இருக்கவே இந்த மாதிரிப் பேச்சையெல்லாம் பக்கீர் கேட்டுக்கொள்ள வேண்டியதாயிற்று. எப்படியாவது ஆள் ஓடிவிடப் போகிறான் என்று ஊரார் முன் ஜாக்கிரதையாக இருந்தார்கள். ஜமீன்தாரும் ஷஷ்டிசரணரின் பக்கம் சேர்ந்தார்.

## 5

ஆட்கள் உஷாராகப் பாரா கொடுக்கவே, செத்தால் ஒழிய வெளியே போக முடியாதென்று பக்கீர் கண்டு கொண்டான். தனியாக உள்ளே உட்கார்ந்து பாட்டுப் பாடலானான் :

"பாழும் மனமே நீ தேடு!
ஞான முத்தையே நாடு."

பாட்டின் வேதாந்தக் கருத்துப் பெரும்பாலும் மங்கிவிட்டது என்றே சொல்ல வேண்டும்.

இவ்வாறு சில தினங்கள் கழிந்தன. மாகனின் வருகையைக் கேட்டு, இரு மனைவிகளின் உறவில் ஒரு மைத்துனனும் ஒரு மைத்துனியும் வந்து சேர்ந்தனர்.

வந்ததுமே அவர்கள் பக்கிரின் தாடி மீசையைப் பிடித்து இழுத்தனர். "இது நிஜ தாடி இல்லை. வேஷம்; மரத்துப் பாலால் ஒட்டியது" என்றனர்.

மூக்கின் அருகே இருக்கும் மீசையைப் பிடித்து இழுத்தால் பக்கீரைப் போன்ற பெரிய மகான்களும் தங்களைக் காப்பாற்றிக்கொள்ளக் கஷ்டப்படுவார்கள். அவர்கள்

காதைத் திருகியும் பலவிதப் பேச்சுக்களைப் பேசியும் கஷ்டப்படுத்தினர். அவர்கள் சொன்ன வார்த்தைகள் திருகாமலேயே அவனுடைய காதைச் சிவக்க அடித்தன.

பலவிதமான பாட்டுக்களைப் பாடச் சொன்னார்கள். அவற்றின் கருத்தை விரித்துரைக்க இப்போது இருக்கும் பெரிய பெரிய பண்டிதர்களால் கூட முடியாது. தூங்கும் போது அவன் கழுத்தில் செம்புள்ளி கரும்புள்ளி குத்தினார்கள். சாப்பிடும்போது தூதுவளைக்குப் பதிலாகத் துத்திக்கீரையும், பாலுக்குப் பதிலாகச் சுண்ணும்புச்சாறும் இளநீருக்குப் பதில் கழுநீரும் தர ஏற்பாடு செய்தார்கள். தட்டின் கீழே பாக்கை வைத்து அவனைச் சாப்பிடச் சொன்னார்கள். எப்படியோ, பக்கீரின் சிதையாத பொறுமையையும் தவிடு பொடி செய்தார்கள்.

பக்கீர் கோபித்துக்கொண்டான்; எரிந்து விழுந்தான்; அதட்டினன்; கதறினன். ஒன்றும் பயன்படவில்லை. வெளி மனிதர்களுக்கு அது வேடிக்கையாக இருந்தது. இதற்கும் மேலே, மறைவாக, ஓர் இனிய குரல் சிரிப்பது நடுநடுவே கேட்கும். அது பழக்கமானதுபோல் தோன்றவும், அவன் உள்ளம் இரு மடங்கு திகில்படும்.

அந்தக் குரலை வாசகர்கள் அறிவார்கள். இதைச் சொன்னலே போதும். ஷஷ்டிசரணர் ஒரு வகையில் ஹைமவதிக்கு மாமா. விவாகமானபின் மாமியாரின் உபத்திரவம் தாங்காமல், எப்போதாவது ஹைமவதி குடும்பஸ்தர்கள் வீட்டில் போய்க் கொஞ்ச நாள் இருப்பது வழக்கம். வெகு நாள் கழித்து அவள் மாமாவீட்டுக்கு வந்து இந்தக் கூத்தையெல்லாம் ஆனந்தமாகப் பார்த்துக்கொண்டிருந்தாள். ஹைமவதிக்கு வேடிக்கையுடன் பழிக்குப் பழி வாங்கும் ஆவலும் இருந்ததா என்ற விஷயம் மனத்தத்துவம் அறிந்தவர்களால்தான் சொல்ல முடியும்.

ஏளனம் செய்யும் ஆட்கள் நடுநடுவே இளைப்பாறு வார்கள். ஆனால் அன்புத் தளையால் பிணையுண்டிருந்த வர்கள் மாகனின் ஏழு பெண்களும் ஒரு பிள்ளையும். அவர்கள் பக்கீரை ஒரு கணமும் விட்டுப் பிரிவதில்லை. தந்தையின் அன்பைச் சம்பாதிக்க அவர்களின் தாய்மார்கள் அவர்களை ஏவி இருந்தார்கள். இரு தாய்மார்களுக்குள் போட்டி வேறு. தம்தம் குழந்தைகளே அதிக ஆதரவு பெறவேண்டும் என்ற ஆவல். குழந்தைகளைத் தூண்டி விடலானார்கள். இரு சாராரும் பக்கீரின் கழுத்தைக் கட்டிக்கொள்வதும் மடியில் ஏறுவதும் முத்தம் தருவதுமாகத் தங்கள் அன்பைக் காட்டித் தந்தையின் ஆதரவைப் பெற முயன்றனர்.

பக்கீர் எதிலும் பற்றில்லாதவன். இல்லாவிட்டால் தன் சொந்தக் குழந்தைகளை அநாதையாக விட்டுவிட்டு வருவானா? குழந்தைகளுக்குப் பக்தி சிரத்தை இல்லை; சாதுவிடம் மரியாதையாக நடந்துகொள்ளத் தெரியாது. ஆகவே, பக்கீருக்குக் குழந்தைகள் என்றால் அவ்வளவாகப் பிடிக்காது. அவர்களிடமிருந்து விலகியே இருப்பான். வயது வந்த அவனிடம் நடந்துகொள்ள அவர்களுக்குத் தெரியவில்லை. சரித்திரக் கட்டுரைகளில் வரும் பல தினுசான எழுத்துக்களைப்போல் இந்தப் பிள்ளை குட்டிகள் பிலு பிலுவென்று அவனைச் சூழ்ந்துகொண்டனர். பக்கீரின் கண்களில் நீர் ததும்பும் - அன்புக் கண்ணீர் அல்ல!

பிறனுடைய குழந்தைகள் அவனைப் பல குரல்களில், "அப்பா, அப்பா" என்று அழைக்கும்போது தன் முரட்டுத்தனத்தைக் காட்டலாமா என்று எண்ணுவான். ஆனால் பயம்; முகஞ் சுளித்து வாயை மூடிக்கொண்டு உட்கார்ந்திருப்பான்.

கடைசியில் பக்கீர் உரக்கக் கூவினன்; "நான் போகத் தான் போகிறேன். யார் தடுப்பது, பார்க்கலாம்!" என்ருன்.

அப்போது ஊரார் எல்லோருமாகக் கூடி ஒரு வக்கீலே அழைத்து வந்தார்கள். அவர், "உங்களுக்கு இரண்டு மனைவிகள், தெரியுமா?" என்ருர் பக்கீரை விளித்து.

"இங்கே வந்த பிறகு அது முதல் தடவையாகத் தெரிந்தது."

"ஏழு பெண்கள், ஒரு பிள்ளை உங்களுக்கு. அவர்களுள் இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் செய்ய வேண்டிய வயதாகிவிட்டது."

"என்னைவிட உங்களுக்கு அதிகமாகத் தெரிகிறதே!"

"நீங்கள் இந்தக் குடும்பத்தினருக்கு உணவு, உடை அளிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளாவிட்டால், உங்கள் அநாதை மனைவிகள் இருவரும் கோர்ட்டார் உதவியை நாடுவார்கள். இதை முதலிலேயே சொல்லி விடுகிறேன்."

கோர்ட் என்ருல் பக்கீருக்குப் பயம்; கேள்வி கேட்கும் போது பெரிய மனிதனின் மானம் மரியாதைக்கு மதிப்புத் தரமாட்டார்கள் என்பது அவனுக்குத் தெரியும். வெளிப்படையாக அவமானம் செய்வதுடன், அந்தச் செய்தி பத்திரிகையில் வேறு வெளியாகும். கண்களில் நீர் வடியப் பக்கீர் தன் விஷயத்தைச் சொன்னன். அவன் சமயோசித புத்தியையும், கதை கட்டும் திறமையையும் வக்கீல் புகழ்ந்தபோது வெடுக்கென்று தன் கையைக் கடித்துக் கொள்ளலாமா என்று இருந்தது அவனுக்கு.

பக்கீர் திரும்பவும் ஓட முயல்வதைக் கண்டு கிழவருக்குக் கவலை மூண்டது. ஊரார் அவனைச் சூழ்ந்து

பலவாருக வைதார்கள். வக்கீல் வேறு அதட்டவே, அவன் பாடு வாய் திறக்க முடியவில்லை.

இதைத் தவிர எட்டுப் பிள்ளை பெண்களாகக் கூடி அவனை ஆழ்ந்த அன்புடன் அணைத்துக்கொண்டபோது மூச்சுத் திணறியது அவனுக்கு. மறைவிலிருந்த ஹைமவதிக்குச் சிரிப்பதா, அழுவதா என்று தெரியவில்லை.

பக்கீர் வேறு வழி தோன்ருமல் இதற்குள் தன் தகப்பனுருக்குத் தன் நிலையை எல்லாம் தெளிவாக எழுதியிருந்தான். அந்தக் கடிதம் கிடைத்ததும் ஹரிசரண பாபு வந்து சேர்ந்தார். ஊரார், ஜமீன்தார், வக்கீல் ஒருவரும் உரிமையை விடவில்லை,

இவன் பக்கீர் அல்ல, மாகன்தான் என்று அவர்கள் ஆயிரம் விதமாகப் பிரமாணம் செய்யலானுர்கள். மாகனை வளர்த்த கிழவியையே கொண்டுவந்து நிறுத்திஞர்கள். அவள் நடுங்கும் கைகளால் பக்கீரின் மோவாயைப் பிடித்து, முகத்தைப் பார்த்து, அவன் தாடியில் கண்ணீர் வடித்தாள்.

அதனுல்கூடப் பக்கீரைத் திருப்ப முடியாமல் போகவே இரண்டு பெண்டாட்டிகளுமாக முட்டாக்கை இழுத்துவிட்டுக்கொண்டு வந்து நின்றனர். ஊரார் பரபரப்பாக வெளியே சென்றனர். இரு தந்தைமார்கள், பக்கீர், குழந்தைகள், இவர்கள்மட்டும் உள்ளே இருந்தனர்.

இரண்டு மனைவிகளும் கைகளை ஆட்டிக்கொண்டு பக்கீரை, "எந்த நரகத்துக்குப் போக ஆசை என்கிறேன்?" என்று விசாரித்தனர்.

பக்கீர் ஒன்றும் தோன்ருமல் மௌனமாக நின்ருன். அவன், 'யமலோகத்தில் எந்த வாசல் தேவலை?' என்று

யோசிப்பவனைக் காணவில்லை. "எது கிடைத்தாலும் தேவலை; இங்கிருந்து போனால் போதும்" என்றான்.

அப்போது இன்னொரு பெண் உள்ளே வந்து பக்கீரை நமஸ்கரித்தாள்.

பக்கீர் முதலில் திடுக்கிட்டு நின்றான். பின்னர்ச் சந்தோஷத்துடன், "ஹைமவதியா!" என்றான்.

தன் மனைவியையோ, பிறர் மனைவியையோ பார்த்து அவன் இதுவரையில் இவ்வளவு காதல் கொண்டதில்லை. விடுதலையே உருவெடுத்து வந்தது போல் இருந்தது அவனுக்கு.

• • •

இன்னோர் ஆள் முகத்தைப் போர்வையால் மூடிக் கொண்டு பார்த்துக்கொண் டிருந்தான். அவன்தான் மாகன். முன்பின் தெரியாத ஆள் ஒருவன் தன் ஸ்தானத்தில் இருப்பதைக் கண்டு இவ்வளவு நேரம் சுகத்துடன் இருந்தான். கடைசியில் ஹைமவதியைக் கண்டதும், மேலே சொன்ன ஆள் தன் தங்கை புருஷனே என்று தெரிந்தது. தயை மேலிட்டு முன் வந்து, "உங்களைப் போன்ற ஆட்களைக் கஷ்டப்படுத்துவது தவறு" என்றான். பின் தன் மனைவிகளைச் சுட்டி, "இதோ என் கயிறு. இதோ என் குடம்*" என்றான்.

மாகன்லாலின் இந்த அசாமானியமான பெருந் தன்மையையும் வீரத்தையும் கண்டு ஊரார் வியப் படைந்தார்கள்.

---

* குளத்தில் அமிழ்ந்து உயிர் விடுவதற்கான இரு சாதனங்கள்.

# கெட்ட புத்தி

ஊரை விட்டு வெளியேற வேண்டியதாயிற்று. அது எதனுல் என்பதை உடைத்துக் கூற என்னுல் ஆகாது. குறிப்பாகச் சொல்லிவிடுகிறேன் :

நாட்டுப்புறத்தில் பழகிவரும் டாக்டர் நான். போலீஸ் தாணுவுக்கு எதிரிலேயே என் வீடு. போலீஸ் இன்ஸ்பெக்டருக்கும் எனக்கும் உள்ள நட்பு யமதர்ம ராஜனுடன் எனக்கு எவ்வளவு நெருங்கிய உறவோ அந்த அளவில் சற்றும் குறைந்ததல்ல. ஒரு மனிதனுக்குத் தெய்வத்தினுலும் தன் இனத்தைச் சேர்ந்தவன் மூலமாகவும் ஏற்படக்கூடிய உபத்திரவங்கள் யாவும் எனக்குத் தெரிந்தவையே. மணிகளின் சேர்க்கையினுல் வளையலுக்கு அழகும், வளையினுல் மணிகளுக்கு அந்தமும் உண்டாவதைப் போல இன்ஸ்பெக்டருக்கு என் உதவி வேண்டியிருந்தது. அவருடைய சகாயத்தினுல் என் பண வருவாயும் நாளுக்கு நாள் விருத்தி அடைந்தது.

இந்த மாதிரியான ஆழ்ந்த காரணங்களைத் தவிர்த்தும், தற்காலத்துச் சூழ்ச்சிகளில் பரிபக்குவமுள்ள இன்ஸ்பெக்டர் லலித சக்கரவர்த்தியுடன், நான் பிரத்தியேகமான நட்பும் பாராட்டி வந்தேன். அவருக்கு நெருங்கிய உறவினளாகிய திக்கற்ற ஒருத்தியின் பெண்ணை விவாகம் செய்துகொள்ளும்படி அவர் சமயம் வாய்த்தபோதெல்லாம் என்னைத் தூண்டியது தர்மசங்கடமாக இருந்தது. சசி என்னுடைய ஒரே பெண்; அதோடு தாயற்றவள்;

அவளை ஒரு மாற்றாந்தாயின் கையில் விட எப்படி என் மனம் ஒப்பும்? ஒவ்வொரு வருஷமும் விவாக முகூர்த்த தினங்கள் வந்து போகும். என் கண்ணெதிரே கல்யாணப் பிள்ளைகள் புஷ்பச் சிவிகைகளில் ஊர்வலம் போவார்கள். கல்யாண வீடுகளில் ருசியான சாப்பாட்டை உட்கொண்டு விட்டுப் பெருமூச்சுடன் திரும்புவதுதான் நான் கண்ட சுகம்.

சசிக்கு வயது பன்னிரண்டு நிரம்பிப் பதின்மூன்று நடக்கிறது. வேண்டிய அளவு பணம் கையில் சேர்ந்திருக்கும்பட்சத்தில் என் பெண்ணையும் பெரிய இடத்து வரனுக்குக் கட்டிக் கொடுத்திருப்பேன். இந்த பெருஞ் சுமையைக் கழித்துவிட்டால், வேறொரு சுப காரியத்தில் நிச்சிந்தையாக இறங்க எனக்கு அநுகூலமாக இருக்கும்.

இதைச் செய்து முடிக்க வேண்டிய அளவு பணம் இல்லையே என்ற குறையுடன் இருக்கும் சமயத்தில் துளஸி பாடாவில் வசிக்கும் ஹரிநாத மஜும்தார் திடீரென்று வந்து என் கால்களைப் பிடித்துக்கொண்டு கோவென்று அழுதார். விஷயம் இதுதான்: அவருடைய விதவைப் பெண் ராத்திரி எதிர்பாராதபடி இறந்து போய்விட்டாள். தான் கருவுற்றதனால், மானத்துக்கு அஞ்சி அந்தப் பெண் எதையோ தின்று தற்கொலை செய்துகொண்டாள் என்று அவருடைய விரோதிகள் ஒரு வதந்தியைக் கிளப்பிப் போலீஸ்வரைக்கும் எட்டவிட்டனர். போலீஸார் அவளுடைய தேகத்தை என்ன கோலமெல்லாம் செய்வார்களோ என்று அவர் பயந்தார்.

மகளை இழந்த சோகத்தோடு, மேலும் இவ்வாறெல்லாம் அவதூறு நேருவதுதான் அவருக்குத் தீராத் துயரை அளித்தது. நான் டாக்டரானதாலும், போலீஸ் இன்ஸ்பெக்டரின் ஆப்த நண்பன் ஆனபடியாலும் இந்தச்

சங்கடத்திலிருந்து அவரை மீட்க ஒரு வழி செய்ய வேண்டியது அவசியமே.

வேளை வந்துவிட்டால், வருகிற லக்ஷ்மி புழைக்கடை வழியாகக்கூட வந்தே தீருவாள். நான் ஹரிநாதரை நோக்கி, "ஓய், விஷயம் ரொம்ப மோசமாயிருக்கிறதே......" என்று இழுத்துவிட்டு, அவருக்கு இதைப்போல நடந்த இரண்டொரு பயங்கரமான திருஷ்டாந்தங்களைச் சட்டென்று ஜோடித்துக் கூறினேன். என் கூற்றை நம்பி அந்தக் கிழவர், "ஆனால் தப்ப வழி இல்லையா?" என்று குழந்தையைப் போல் குலுங்கக் குலுங்கக் கதறினார்.

நடந்ததை விஸ்தரிப்பதில் பயனில்லை. ஏதோ ஒரு விதமாக, அவருடைய மகளின் அபரக்கிரியைகள் பங்கமுறாமல் முடிவடைந்தன. என்றால் கிழவருடைய மானம் தப்பியது!

என் பெண் சசி பரிதாபகரமான குரலில், "அப்பா, அந்தக் கிழவர் உன் காலைப் பிடித்துக்கொண்டு எதற்காக அழுது கெஞ்சினார்?" என்று கேட்டபோது, "போம்மா, உனக்கென்ன அதைப்பற்றியெல்லாம்?" என்று கடிந்து கொண்டேன்.

அவள் நல்ல இடத்தில் வாழ்க்கைப்பட வழி திறந்தது. முகூர்த்த தினமும் நிச்சயிக்கப்பட்டது. என் ஒரே பெண்ணின் கல்யாணம் அல்லவா? தடபுடலான ஏற்பாடுகள் செய்திருந்தேன். எனக்கு ஸம்ஸாரம் இல்லாததால், அயலாரே வெண்டியவர்களைப்போல் எனக்குத் துணையாக நின்றனர். நன்றியுள்ள கிழவர் ஹரிநாதரும் கல்யாணத்தின்போது தம் உடலை ஓடாக உழைத்தார்.

'காயே ஹலுத்' (வசந்த நீராட்டம்) அன்றிரவே சசிக்குக் காலரா கண்டது. மடமட வென்று கவலைக்

கிடமான நிலைக்கு வந்துவிட்டாள். எவ்வளவோ முயன்றும் என் கையிலிருந்து அவள் நழுவினாள். மருந்துப் புட்டிகளை வீசி எறிந்துவிட்டு, நான் ஹரிநாதரின் பாதங்களைப் பிடித்துக்கொண்டேன். "என்னை க்ஷமிக்க வேண்டும், இந்தக் கல்நெஞ்சனை க்ஷமியும், ஸ்வாமி! ஐயோ! என் ஒரே பெண்! எனக்கு யாரும் இல்லையே!" என்று புலம்பினேன்.

ஹரிநாதர் பிரமித்தவராய், "டாக்டர், நீர் இந்தமாதிரி செய்யக்கூடாது. நானல்லவோ உமக்கு என்றென்றும் நடைமைப்பட்டவன்!...என் காலை விட்டுவிடும்" என்றார்.

"நிரபராதியான உம்மைக் கெடுத்துவிட்டேன். அதற்குப் பழிவாங்க என் பெண்ணை யமன் கொண்டுபோய் விட்டான். ஐயோ!" என்று கதறினேன்.

எல்லோர் எதிரிலும் நான் வெளிப்படையாகவே கூவினேன் : "ஐயா, இந்தக் கிழவனாரை நாசம் செய்தவன் நான்தான்; அதற்கான தண்டனையை அடைந்தேன். என் சசி பகவானுடைய திருவடியை அடையவேண்டும்."

ஹரிநாதர் காலில் போட்டிருந்த செருப்பை நான் கழற்றி என் தலைமேல் பன்முறை மொத்திக்கொண்டேன். கிழவருக்குத் தம் செருப்பை என் கையிலிருந்து பிடுங்குவதற்குள் போதும் போதும் என்று ஆகிவிட்டது.

மறு நாள் பத்து மணிக்கு மஞ்சள் புடைவை கட்டிய கோலத்துடன், என்னம்மா, என் சசி, நித்திய லோகத்துக்குப் பிரயாணமானாள். இது நடந்த மறு நாளே இன்ஸ்பெக்டர் என்னிடம் வந்து, "ஏன் அப்பேன், இனிமேல் என்ன, விவாகம் செய்துகொள்ளலாமே; உன் காரியங்களைக் கவனிக்க வீட்டில் ஓர் ஆள் தேவை அல்லவா?" என்றார்.

மனிதன் சோகத்தில் ஆழ்ந்திருக்கும் சமயம் அதைப் பொருட்படுத்தாமல் இப்படிக்கூட ஒரு கல்மனம் பேசுமா? பேயும் மனம் இளகுமே! என் நடத்தை எவ்வளவு அழகானதென்று இன்ஸ்பெக்டருக்குத் தெரியுமாதலால் பதில் சொல்ல முடியாதபடி என் வாய் அடைத்துவிட்டது. இன்ஸ்பெக்டரின் நட்பும் அன்று என்னைச் சவுக்கடியால் அவமானப் படுத்துவதுபோல் இருந்தது.

என் உள்ளம் எவ்வளவு வேதனைப்பட்டும் என்ன? வினைச் சக்கரம் அதன் வழியே சுழன்றுதான் செல்லும். பழையபடியே பசித்தபோது வயிற்றில் கொட்டிக்கொள்வதும், சரீரத்துக்குச் சுகம் தேடிக்கொள்வதும் நடந்து வந்தன.

வேலையெல்லாம் முடிந்ததும் தனியாக என் அறையில் உட்கார்ந்திருக்கையில் ஒரு பரிதாபகரமான குரல் என் செவியில் மட்டும் ஒலிக்கும்: "அப்பா, பாவம், அந்தக் கிழவர் ஏன் கண்ணும் கண்ணீருமாய் நிற்கிறார்?"

முன்னே ஏழையான ஹரிநாதரின் எஞ்சி நின்ற ஆஸ்தியெல்லாவற்றையும் என் காரியார்த்தம் சிரோகத் துடைத்து விட்டேன். என் மனம் அடித்துக்கொண்டது. பாபத்தைப் போக்கிக்கொள்ள அவருக்குப் பசுவும் கன்றும் தானம் கொடுத்தேன்: அவர் அடகு வைத்த சொத்துக்களை மீட்டேன்.

எனக்குச் சமீபத்தில் மூண்ட பெருந் துயரினால் இரவெல்லாம் தூக்கம் இல்லாமல் கஷ்டப்படுவேன். இளகிய மனத்தினளான என் பெண் இறந்தும், நான் செய்திருக்கும் பாப காரியங்களுக்குப் பரலோகத்திலும் அமைதியைக் காணுமல், வேதனையினால் துடித்து, "அப்பா, ஏனோ இந்த மாதிரியான காரியம் செய்தாய்?" என்று சொல்லி அவள் அழுவதுபோல் இருக்கும்.

சில நாட்கள் இவ்வாறு கழிந்த பிறகு, ஏளியோருக்குச் சிகிச்சை செய்யத் தொடங்கினேன். அவர்களிடம் காசு பறிப்பதில்லை. யாராவது ஒரு சிறு பெண் நோய் வாய்ப்பட்டு என்னிடம் வந்தால், என் சசிதான் அச் சிறுமியின் வடிவில் தோன்றி ரோகத்தினுல் தவிக்கிருளோ என்று வேதனைப்படுவேன்.

ஒரு சமயம் நல்ல மழை பெய்ததால் எங்கள் கிராமமே வெள்ளக்காடாகியது. வயல்களிலும் வீதிகளிலும் ஒரே ஜலத்தேக்கம். படகில் செல்லவேண்டியிருந்தது. விடாமழை ஒரு வாரம் சக்கையாக அடித்தது.

ஜமீன்தார் வீட்டிலிருந்து ஓர் ஆள் என்னை அழைத்துப் போக வந்தான். நான் புறப்படச் சற்றுத் தாமதிக்கவே படகோட்டி மிகவும் கோபங் கொண்டுவிட்டான்.

இதற்கு முன் இந்த மாதிரி சங்கடமான சந்தர்ப்பங்களில் நான் வெளியே கிளம்பவேண்டியிருந்தால், ஒரு சிறிய ஆத்மா முன் ஜாக்கிரதையுடன் என் பழங் குடையைப் பிரித்துச் சரிப்படுத்திக் கவலை தோய்ந்த குரலில், "காற்று மழை; பார்த்துப் போ, அப்பா!" என்று எச்சரிக்கை செய்யும். இன்று, சூனியமாயிருக்கும் என் வீட்டில் எந்த மூலையிலோ கிடக்கும் குடையை நான் தானே தேடிக்கொள்ள வேண்டும்? அதனுல் சற்றுத் தாமதமாயிற்று. என் சசியின் படுக்கையறை தாழிடப்பட்டுக் கிடந்தது. அதை நோக்கியபோது, பிறர் துயருக்குச் சிறிதும் கண் கலங்காதவனுடைய வீட்டில் அன்பின் களஞ்சியத்தைக் கடவுள் ஏன் வைப்பாரென்று எண்ணினேன்.

சூனியமாயிருந்த அந்த அறையின் பக்கமாகச் சென்றபோது என் மூளையில் ஏதோ ஒன்று ஓ என்று இரைச்சலிடும். வாசலில் பெரிய மனிதர் வீட்டு ஆள்

மிரட்டும் தொனியில் கூப்பிடுவதைச் செவியுற்று, பொங்கி வரும் துக்கத்தை நான் ஒருவாறு அடக்கிக்கொண்டு வெளிப் போந்தேன்.

படகில் ஏறிக்கொண்டபோது, தாணுவுக்கு அருகில் பரிசலொன்று ஒதுங்கியிருந்தது. ஒரு குடியானவன்: கோவணம் மட்டும் இருந்தது, அவன் உடலில். மழையில் நின்றுகொண்டிருந்தான். "என்னப்பா?" என்று விசாரித்தேன் அவனை. இரவு அவனுடைய மகளைப் பாம்பு கடித்து விட்டதாம். அதைப் போலீஸுக்குத் தெரியப்படுத்த, பாவம், அந்த உழவன் தொலைவிலிருந்து வந்திருப்பதை அறியலானேன். தான் சுற்றிக்கொண் டிருந்த ஒரு கிழிந்த ஆடையைக் களைந்து பெண்ணின் பிணத்தின்மேல் போர்த்திருந்தான். அவனைக் கவனிக்க எனக்குச் சமயம் இல்லை. ஜமீன்தாரின் படகோட்டி எரிகொள்ளியாக இருந்தான்.

மணி ஒன்று இருக்கும், நான் வீடு திரும்புகையில். அப்போதும் அந்தக் குடியானவன் கைகளைக் கட்டியபடி குளிரினால் உடல் நடுங்கக் குந்தியிருந்தான். இன்ஸ்பெக்டரின் தரிசனம் கிடைப்பது அரிதாயிருந்தது. என் மனம் கேட்கவில்லை. எனக்கு வைத்திருந்த சோற்றில் அவனுக்குக் கொஞ்சம் அனுப்பினேன். அதை அவன் தொடவே இல்லை.

துரிதமாக ஆகாரத்தை முடித்துக்கொண்டு, நோயாளிகளைக் கவனிக்க என் வைத்தியசாலைக்குச் சென்றேன். பொழுது போய் வீட்டை நோக்கி நான் திரும்பும் சமயங் கூட அதே இடத்தில் குன்மம் பிடித்தவன் போல் அந்த உழவன் காத்திருந்தான். ஏதாவது கேட்டால் அவனுக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. பேதை போல்

விழித்தான். அவன்வரைக்கும் அந்த ஊர், ஆறு, போலீஸ் தாணு, மேலே கறேலெனக் கார் கவிந்த வானம், கீழே மழையினுல் சதசதப்பான பூமி - யாவும் ஒரு கெட்ட கனவு போல் இருந்திருக்கும். மீண்டும் மீண்டும் வினவியதால், இதுமட்டும் அவன் மூலமாகத் தெரிந்து கொண்டேன் : தாணுக்காரன் ஒருவன் அவனிடம் வந்து ரூபாய் ஏதாவது பெயருமா என்று அவனைக் கேட்ட தாகவும், தான் மிகவும் ஏழை, கையில் காசில்லையென்று அவன் கூறியபோது, "இந்த இடத்திலேயே கிட" என்று 'தாணுக்காரன் சொல்லிவிட்டுப் போனதாகவும் தெரிய வந்தது.

இந்தமாதிரியான காட்சிகளை முன்பு எத்தனையோ முறை நான் பார்த்ததுண்டு. அப்போதெல்லாம் என் மூளையில் உறைக்கவில்லை. இன்றோ இது என்னுல் சகிக்க வொண்ணுததாயிருந்தது, என் சசியின் கருணை நிரம்பிய குரலோசை - அது எனக்குமட்டுமே புரியும் - அழுது வடியும் வானெங்கும் விம்மிற்று. மகளைப் பறிகொடுத்துப் பேசச் சக்தியற்றிருந்த இந்த உழவனுக்கு நேரிட்ட அளவிடற்கரிய துன்பம் என் உள்ளத்தையும், என் ஒவ் வோர் எலும்பையும் ஊடுருவி அசைத்துவிட்டது.

இன்ஸ்பெக்டர் துரை பிரம்பு நாற்காலியில் சொஸ்த மாக வீற்றிருந்து ஹுக்காவிலிருந்து புகை குடித்துக் கொண்டிருந்தார். பிறர் உறும் இடும்பையினுல் சற்றும் கலங்காத மனம் அது! கல்யாணமாக வேண்டிய பெண்ணை வைத்துக்கொண்டு அலையும் அவருடைய பந்து என்னைக் குறியில் கொண்டு அந்தச் சமயம் ஊரிலிருந்து வந்திருந்தார். எதிரே அமர்ந்து இன்ஸ்பெக்டருடன் வம்பளந்து கொண் டிருந்தார். அப்போது நான் புயல் விசையுடன் அவ்விடத் தில் தோன்றினேன். உரத்த குரலில், "நீங்களெல்லாம்

மனிதர்களா அல்லது பிசாசுகளா?'' என்று கூவிவிட்டு, அன்றெல்லாம் உழைத்து நான் சேமித்த ஒரு ரூபாயை இன்ஸ்பெக்டர் எதிரே வீசி, "ரூபாய்தானே வேண்டும்? இதோ எடுத்துக்கொள்ளும். சாகும்போது இது கூடவா உங்களுடன் வரப்போகிறது? ஓர் ஏழைக் குடியானவன், இந்த மழையிலும் காற்றிலும் அடிபட்டு நேற்றுக் காலேயே பிடித்து நிற்கிருனே, கண்ணில்லேயா உங்களுக்கு? அவனே அனுப்பிவிடுங்கள். அவன் மகளுக்குச் செய்ய வேண்டிய சடங்குகளேக் கவனிக்க அவனே விடுங்கள்" என்றேன்.

பலரைக் கசக்கிப் பிழிந்து, அவர்களேக் கண்ணீர் விடச் செய்த இன்ஸ்பெக்டருக்கும் எனக்கும் இடையே வளர்ந்த ஒற்றுமை, அன்று அந்தப் பெரும் புயலினுல் அறுந்து விழுந்து தரைமட்டம் ஆயிற்று.

கொஞ்ச நாளேக்கெல்லாம், இன்ஸ்பெக்டரின் காலேத் தொட்டு, "போதும், ஐயா, தங்கள் பொன்னுன உறவு" என்று அவரை வாழ்த்திவிட்டு, எனக்கு முன்பு இருந்த புத்திப் பிரமையை நினேத்து நொந்துகொண்டு, இது வரை வசித்து வந்த இடத்துக்கும் ஒரு தண்டம் சமர்ப்பித்து வெளியேறினேன்.

# அண்டை வீட்டுக்காரி

என் பக்கத்து வீட்டுக்காரி ஓர் இளவிதவை. பனி தோய்ந்த பவளமல்லிகை போல் காம்பிற்றுக் கிடந்தாள். பள்ளியறைக்கு உவந்த மலர் அல்ல; கடவுள் பூஜைக்கே தகுதி வாய்ந்த மலர் அவள்.

நான் அவளை உள்ளூறப் பூஜித்தேன். என் உள்ளத்தில் அவள்மேல் எனக்கு இருந்த ஒரு பற்றைப் பூஜை என்றுதான் சொல்ல முடியும். வேறு சொல்லால் விளக்க இயலாது. அது இன்னதென்று எனக்கே தெரியவில்லை.

நவீனமாதவன் என் ஆப்த நண்பன். அவனுக்குக் கூடத் தெரியாது, இந்த உணர்ச்சியை மனத்துக்குள் மறைத்துக்கொண்டு அதைப் புனிதமாக வைத்திருப்பதைப்பற்றி! என் பேரிலேயே எனக்குப் பெருமை.

ஆனால் உணர்ச்சியின் வேகம் காட்டாற்றின் வேகம் போல் பிறந்த இடத்திலேயே கட்டுண்டு கிடக்கவிரும்பாது; ஏதாவது ஒரு வழியால் வெளியேற முயலும். முயற்சி பலன் தராவிட்டால் உள்ளத்தில் வேதனையை மூட்டும். ஆகவே, கவிதையில் என் மனத்தை வெளிப்படுத்தலாம் என்று எண்ணினேன். ஆனால் பேனா இரண்டு வரி எழுதக்கூடக் கூசுகிறதே!

இதில் வியப்பு என்னவென்றால், அதே சமயத்தில் என் நண்பன் நவீன மாதவனுக்குத் திடும் என்று கவிதை எழுதும் சக்தி வந்துவிட்டது, எதிர்பாராது வருகிற பூகம்பம் போல்!

அந்தப் பாவிக்கு இந்த மாதிரியான தெய்விக விபத்து என்றுமே உண்டானதில்லை. புது விதமான இந்தமாதிரிக் கிளர்ச்சி வரும் என்று அவன் துளிகூட எதிர்பார்க்க வில்லை. அவனுக்குச் சந்தம், சீர் என்ற விஷயமே தெரியாது. இருந்தாலும் அவன் சளைக்காமல் எழுதிக்கொண்டே போனதைக் கண்டு ஆச்சரியம் அடைந்தேன். கிழ வயதில் இரண்டாம் பெண்டாட்டி மோகம் போல் கவிதைப்பித்து அவனைப் பிடித்துக்கொண்டுவிட்டது. நவீனன், சந்தக் கட்டு, சீர் இவைகளைத் திருத்தித் தர என்னைச் சரண் புகுந்தான்.

கவிதைக்கு வேண்டிய விஷயம் ஒன்றும் புதிதான தல்ல; பழையதும் அல்ல. அதை என்றும் புதுமையானது என்றும் சொல்லலாம்; அதே சமயம் என்றும் பழமை யானதாகவும் எண்ணலாம். அது ஒரு காதல் கவிதை; காதலியைக் குறித்துப் பாடியது. அவனை மெல்ல அசைத் துச் சிரித்துக்கொண்டே நான், "யாரடா? அவள் யார்?" என்று கேட்டேன்.

நவீனன் சிரித்து, "இன்னும் கண்டுபிடிக்கவில்லை யாடா?" என்றான்.

நவீனன் எழுதியதைத் திருத்தும் வேலையில் எனக்கு ஓர் ஆறுதல் ஏற்பட்டது. நவீனனின் கற்பனைக் காதலியை நோக்கி என்னுள் அடங்கி இருந்த உணர்ச்சிக ளெல்லாம் தாவிச் சென்றன. குஞ்சு பொரிக்காத கோழி, வாத்து முட்டையைக் கண்டால்கூட அதை அடை காக்கும். அதிருஷ்டக் கட்டையான நானும், நவீனனின் பாவங்களின் மேல் என் இதய ஆவேசம் அனைத்தையும் தந்து அடைகாத்தேன். பக்குவமாகாத அந்தக் காவியத் தைத் திருத்தினேன். அதில் முக்கால் பாகம் என்னுடைய சிருஷ்டியாகவே அமைந்துவிட்டது.

நவீனன் வியந்து, "நானும் இதைத்தானடா சொல்ல நினைத்தேன். ஆனால் முடியவில்லையே! உனக்கு எங்கே இருந்து இந்தப் பாவனையெல்லாம் வந்து குவிகிறதடா?" என்றான். நான் ஒரு கவியைப்போல, "கற்பனை ஊற்றி லிருந்து. உண்மை எப்போதும் மௌனி. கற்பனைதான் வம்பளக்கும். உண்மை நிகழ்ச்சி பாவ ஓட்டத்தின் குறுக்கே கல்போல் நின்று தடுத்துவிடும். கற்பனைதான் அதன் வழியைத் திறந்துவிடுகிறது" என்றேன்.

நவீனன் யோசனையில் ஆழ்ந்து, "அதுதான் பார்க்கிறேன். சரிதான்" என்றான். மறுபடியும் சற்று யோசனை செய்துவிட்டு, "நீ சொல்வதுதான் சரி" என்றான்.

என் காதலின் நடுவே ஒரு பரிதாபகரமான கூச்சம் இருந்ததனால்தான் நானாக ஒன்றும் என் பாஷையில் எழுத முடியவில்லை என்று முன்னாலேயே சொல்லியிருக்கிறேன். நவீனனைத் திரைக்குப் பின்னால் வைத்துவிட்டே என் பேனா ரசனையில் சுவை ததும்பத் தன் வேலையை ஆரம்பித்தது.

நவீனன், "இது உன்னுடைய சிருஷ்டி; உன் பேரிலேயே வெளியிடப் போகிறேன்" என்றான்.

நான், "நாசமாய் போச்சு! இது நீ எழுதினது தானேடா? நான் கொஞ்சம் மாற்றி இருக்கிறேன். அவ்வளவுதானே?" என்றேன்.

படிப்படியாக நவீனனுக்கும் அந்த எண்ணம் உண்டாகிவிட்டது.

ஜோசியப்புலி நக்ஷத்திரங்களின் வரவுக்காக வானை நோக்கி இருப்பதுபோல நானும் நடுநடுவே பக்கத்து வீட்டின் ஜன்னலை நோக்கியவாறு இருப்பேன். நடுநடுவே இந்த எளிய பக்தனுக்குத் தரிசனமும் கிடைக்கும். கர்ம

யோகத்தில் ஈடுபட்டிருக்கும் அந்தப் பெண்மணியின் செவ்விய முகத்தில் ஒரு சாந்தம், தண்மை நிறைந்த ஓர் ஒளி பிரதிபலித்தது. நொடிப் பொழுதில் என் மனக்கிளர்ச்சிகளை அடக்கி ஆண்டது அது.

ஆனல் அன்று நான் கண்டது என்ன? நிலவில்கூட எங்கேயாவது நெருப்பு உண்டாகுமா? அந்தக் குளிர்ந்த சந்திரனில் என்றைக்கோ வெம்மை ஆறி அடங்கிவிட்டதே; இன்னுமா நெருப்பு இருக்கும்?

அன்று வைகாசி மாதத்தின் பிற்பகலில் ஈசானிய மூலையில் மேகம் திரண்டெழுந்தது. சூருவளி வருவதன் முன் மேகங்களிலிருந்து சிதறும் ஒருவித ஒளியில் அவள் ஜன்னலருகே தனியாக நின்றுகொண் டிருந்தாள். கருமை பாய்ந்த அவளுடைய கண்கள் சூனியத்தை நோக்கிப் பறந்தன. அந்த நோக்கில் ஏதோ தொலைவானது ஒன்றைக் குறித்து வேதனை தென்பட்டது.

என்னுடைய சந்திரபிம்பத்தில் இன்னும் வெம்மை தணியவில்லை. இன்னும் வெம்மை இருக்கிறது அங்கே! தெய்வத்திற்காகவா மனிதன் இருக்கிறன்? மனித னுக்காகத்தான் மனிதன் இருக்கிறன். அவள் இரு அசல் விழிகளில் தென்பட்ட வியாகுலம், அந்தப் புயல் ஒளியில் பறவை போல் ஆவலுடன் வெளியேறப் பார்த்தது - சொர்க்க வாழ்வை நோக்கி அல்ல - ஒரு மனிதனின் உள்ளமென்னும் குடம்பையினுள் அடைக் கலம் புகவேதான்.

ஆவல் கனலும் அவள் கண்ணேக்கைக் கவனித்த பிறகு என் உள்ளத்தில் மூண்ட அலைகளை அடக்க என்னல் முடியாமல் போய்விட்டது. பிறர் அரை குறையாக எழுதிய கவிதையைச் செப்பனிடுவதோடு

திருப்தி அடையாமல் ஏதாவது ஒரு காரியத்தைச் செய்ய வேண்டுமென்ற பரபரப்பு எனக்கு ஏற்பட்டது. உடனே பிரதிக்ஞை செய்துகொண்டேன்; வங்காளத்தில் விதவா விவாக முறையைப் பரப்ப வேண்டும். சொற்பொழிவோடும் எழுதுவதோடும் நிற்காமல் பண உதவியும் செய்ய முன் வந்தேன்.

நவீனன் என்னுடன் வாதாட ஆரம்பித்தான்; "நிரந்தர வைதவ்யத்தில் ஒரு தூய்மை இருக்கிறது. மங்கிய நிலவொளியில் மயானத்தில் திகழும் அமைதி போல் ஓர் அழகும் இருக்கிறது. மறு மணம் அத்தகைய அழகைக் குலைத்துவிடும்" என்றான்.

இந்த மாதிரி சாதுரியமான பேச்சைக் கேட்டாலே எனக்கு எரிச்சல் வரும். பசியால் வாடும் ஒருவன் எதிரே வயிறு புடைக்கத் தின்றிருக்கும் ஓர் ஆள், உண்பதனால் வரும் கேடுகளைப்பற்றிச் சொல்லி, பூவின் நறு மணத்தையும் பறவைகளின் தீங்குரலையும்பற்றி வருணித்தால் அவன் வயிறு நிரம்பிவிடுமா? இது போலத்தான் நவீனன் சொன்ன கதையும்.

நான் கோபத்துடன், 'பார், நவீனா, கலைஞனுடைய கண்ணுக்கு இடிந்த வீட்டிலும் ஓர் அழகு தென்படும். ஆனால் வீட்டைக் கலைநோக்கிலிருந்து பார்த்தால் மட்டும் போதுமா? அது வசிப்பதற்கும் இசைவாக இருக்க வேண்டுமே! ஆகவே 'ஆர்ட்டிஸ்ட்' என்ன சொன்னாலும் அதை மராமத்துச் செய்துதானே ஆகவேண்டும்? வைதவ்யத்தைத் தொலைவிலிருந்து பார்த்து அதைப்பற்றி அழகான காவியம் புனைந்துவிட முடியும்; ஆனால் அதனுள்ளே எரிந்து சாம்பராகும் ஒரு வேதனையை நீ புகுந்து பார்த்தாயா?" என்றேன்.

நவீனனை என் கட்சியில் இழுத்துக்கொள்வது சிரமம் என்று எண்ணியிருந்தேன். அன்று அதற்காகத்தான் வெகு சுடச் சுடவே பேசினேன். ஆனால் என் சொல்மாரி முடிந்ததும் நவீனன் ஓர் ஆழ்ந்த பெருமூச்சுடன் என் வார்த்தைகளை ஒப்புக்கொண்டான். இன்னும் நல்ல நல்ல பேச்சுகள் என்னிடத்திலிருந்து வர இடந் தரவில்லை.

ஒரு வாரம் கழித்து நவீனன் என்னிடம் வந்து, "டேய், நீ கொஞ்சம் உதவி செய்தால் நான் ஒரு விதவா விவாகம் செய்துகொள்ளத் தயார்" என்றான்.

எனக்கு வந்த ஆனந்தத்தில் நவீனனைத் தழுவிக் கொண்டு குதித்தேன். "எவ்வளவு ஆனாலும் சரி, நான் கொடுக்கிறேனடா" என்றதும் நவீனன் விஷயம் முழு வதையும் சொன்னான்.

அவனுடைய அன்புக்கு உரியாள் வெறும் கற்பனைப் பாவை அல்ல; சில காலமுதலே ஒரு கைம்பெண் மேல் அவன் காதல் கொண்டிருந்தான். யாரிடமும் அதை வெளிப்படுத்தவில்லை. நவீனனின் கவிதை, அதாவது நான் எழுதியது பத்திரிகையில் வெளியாகிச் சரியான இடத் துக்குப் போய்ச் சேர்ந்திருக்கும். கவிதைகள் பலன் தராமல் போகவில்லை; பார்க்காமலேயே மனத்தைக் கவர ஒரு வழி கண்டுபிடித் திருந்தான் என் நண்பன்.

ஆனால் நவீனன், "முன்னாலேயே சூழ்ச்சிகள் செய்து இந்தக் காரியத்தைச் சாதிக்கவில்லை" என்றான். அந்த விதவைக்குப் படிக்கத் தெரியாது என்றே அவன் எண்ணி யிருந்தான். விதவையின் தம்பிபேருக்கு விலையின்றிப் பெய ரின்றிப் பத்திரிகையை அனுப்பிவிடுவான். மனத்துக்கு ஆறுதலைத் தேடித் தரும் ஒரு பைத்தியக்காரத்தனந்தான்! தேவதைக்குப் புஷ்பாஞ்சலி அளித்தாகிவிட்டது. அவ

ளுக்குத் தெரிகிறதோ, இல்லையோ! ஏற்றுக்கொண்டாலும் சரி, தள்ளிவிட்டாலும் சரி!

பலவித வியாஜமாக விதவையின் தம்பியுடன் நவீனன் சிநேகம் செய்துகொண்டிருந்தான். ஆனால் அதில் எந்த உத்தேசமும் இல்லை என்றான். தன் காதலிக்கு நெருங்கிய உறவினன்மேல் எப்போதும் அன்பு படருவது சகஜந் தானே?

கடைசியில் அவள் தம்பி கடுமையான நோய் வாய்ப் பட்டிருக்கும் சமயம் அவளைச் சந்திக்கச் சந்தர்ப்பம் நேரிட்டது. கவியுடன் காவிய சம்பந்தமாகப் பல விஷயங்களைப்பற்றிச் சில ஆலோசனைகள் நடந்தன. ஆலோசனை, அச்சான சில கவிதைகளோடுமட்டும் நிற்கவில்லை.

ஆகவே, என்னுடன் விவாதத்தில் தோற்றுப்போன கையோடு, நவீனன் அந்த விதவையைக் கண்டு கல்யாண ஏற்பாட்டை எடுத்திருக்க வேண்டும். முதலில் அவளுக்குச் சிறிதும் சம்மதமில்லை. நவீனன் என் வாயில் வெளியான பல யுக்திகளைக் கையாண்டு தன் கண்ணீரையும் உகுத்து அவளை வசம் செய்துகொண்டான். இப்போது விதவையின் போஷகரான சிற்றப்பாவுக்குக் கொஞ்சம் பணம் தேவையாக இருந்தது. நவீனன் இதை என்னிடம் தெரிவித்தான்.

நான், "இப்போதே வாங்கிக்கொண்டு போயேன்" என்றேன்..

நவீனன், "இந்தக் கல்யாணம் ஆன ஐந்து ஆறு மாதங்களுக்கெல்லாம் அப்பா பணம் அனுப்புவதைக் கட்டாயம் நிறுத்திவிடுவார். நீதான் ஏதாவது வழி காட்ட வேண்டும்" என்றான். நான் பதில் பேசாமல் செக் எழுதிக் கொடுத்தேன். "அடே, அவள் பெயர் என்னடா?

நான் உன்னோடு போட்டியிடப் போகிறேனா என்ன! அவள் யார் என்று சொல்லு? உன்னைத் தொட்டுச் சொல்கிறேன். அவள் பேரிலே நான் காவியம் எழுத மாட்டேன். அப்படி எழுதினாலும்கூட அவள் தம்பிக்கு அனுப்பாமல் உனக்கே அனுப்பி விடுகிறேன்" என்றேன்.

நவீனன், "அட, அதற்காக எல்லாம் எனக்குப் பயமில்லையடா. விதவா விவாகம் என்றால் அவளுக்குத் தலை இறக்கமாக இருக்கிறதாம். அதுதான் உன்னிடம் அவளைப்பற்றி ஒன்றும் சொல்ல வேண்டாம் என்று என்னைத் தடுத்திருக்கிறாள். ஆனால் இனிமேல் மூடி வைத்திருப்பது தப்பு. அவள் உன் பக்கத்து வீட்டுக்காரிதான்; பத்தொன்பதாம் நம்பரிலே இருக்கிறாள்" என்றான்.

என் இருதயம் மட்டும் இரும்பு 'பாய்லராக' மாறி விட்டிருக்குமானால் படீரென்று வெடித்துப் போயிருக்கும். "விதவா விவாகத்தில் அவளுக்குப் பிடிப்பில்லையா?" என்றேன்.

நவீனன் சிரித்து, "இதுவரைக்கும் அந்த மாதிரி ஒன்றையும் காணோம்" என்றான்.

நான், "வெறுங் கவிதையைக் கண்டே சொக்கிப் போய்விட்டாளா?" என்றேன்.

நவீனன், "ஏன், என் கவிதை அவ்வளவு மோசமா என்ன?" என்றான்.

நான் உள்ளுக்குள்ளேயே, "அட சே!" என்றேன்.

யாரை வெறுப்பது? அவளையா, என்னையா, இல்லை, அந்தக் கடவுளையா? அட சே!

---

# மாதிரி நாவல்

## முதல் அத்தியாயம்

"அல்லா ஹோ அக்பர்" என்ற முழக்கம் போர்க் களமெங்கும் எதிரொலி செய்தது. ஒரு புறம் மூன்று லக்ஷம் யவன வீரர்கள். மற்றொரு பக்கம் மூவாயிரம் ஹிந்து வீரர்கள். வெள்ளத்தின் நடுவே தனியாக நிற்கும் அசுவத்த மரம்போல ஹிந்து வீரர்கள் ஓரிரவும் ஒரு பகலும் நின்ற இடத்தில் சிதைவுறாமல் போர் புரிந்தனர். இம்முறை தோல்விக்குரிய சின்னங்கள் தென் பட்டன. அதோடுகூடப் பாரத பூமியின் வெற்றிக் கொடி புழுதியில் புரளும். இன்று மலைவாயில் விழும் ஆயிரங் கதிர்க்கரம் படைத்த ஆதவனுடன் ஹிந்து ஸ்தானத்தின் கௌரவ சூரியனும் என்றென்றும் எழாத வாறு அஸ்தமித்துவிடும்.

"ஹர ஹர பொம். ஹர பொம்!" வாசகர்களே, இரு பத்தைந்தே வீரர்களுடன், வாளேந்திய கரத்தினனாகக் குதிரைமேலேறி, பாரத தேவி தன் கையிலிருந்து வீசும் வஜ்ரப்படை போல எதிரிகள்மேல் பாயும் இந்த இளைஞன் யார்? எண்ணிறந்த யவனர்களை, சண்டமாருதத்தில் முறியும் காட்டு மரங்களைப்போல அடித்து வீழ்த்தும் இப் பராக்கிரமசாலி யாரோ? மூன்று லக்ஷம் யவனரின் குரல்கள் எழுப்பும் "அல்லா ஹோ அக்பர்" என்ற கோஷத்தை எந்த வீரனுடைய "ஹர ஹர பொம்" என்ற இடியேறு போன்ற முழக்கமோ அமிழ்த்தியது! வேங்கையின் முன் மருண்டோடும் ஆட்டு மந்தைபோல, யவன சத்துருக்கள் எந்த வீரனுடைய வாளுக்குப் பயந்து புறங்காட்டி ஓடினர்? அன்று ஆரிய தேசத்தின்

வானில் தாழும் செங்கதிரோன் முத்தமிட்ட குருதி சொட்டும் அவ்வாள் யாருடையது தெரியுமா?

அவன்தான் லலிதசிம்மன்-காஞ்சி சேனாதிபதி. பாரத நாட்டின் சரித்திர வானில் நிலை பிறழாத வடமீன் அனையான்.

## இரண்டாம் அத்தியாயம்

இன்று காஞ்சி நகரில் எதற்காக இவ்வளவு கோலாகலம்? வாசகர்களே! உங்களுக்குத் தெரியுமா? மாடங்களின்மேல் வெற்றிப் பதாகை காற்றில் பறப்பதேன்? காற்று வேகத்தினாலா, இல்லை உவப்பினாலா அவை அவ்வாறு பறக்கின்றன? வாயில்தோறும் வாழை மரங்களும் மங்கல கலசங்களும்! வீடுகளெங்கும் சங்கநாதம்! வீதி தோறும் விளக்கொளி. நகர மதில்களின்மேல் ஜன சமுத்திரம். பட்டணத்து மக்கள் யாருக்காக இவ்வளவு ஆவலுடன் காத்திருக்கின்றனர்! திடீரென்று ஆடவரின் ஜயகோஷங்களும் பெண்பாலாரின் மங்கலத்வனியும் ஒன்றுகூடி வானைக் குடைந்துகொண்டு இமைக்கும் நேரத்துக்குள் நக்ஷத்திர லோகத்தை நோக்கித் தாவின. விண்மீன் கூட்டங்கள் காற்றால் அலைக்கப்பட்ட தீபச் சுடர்கள் போன்று நடுங்கிக்கொண்டிருந்தன.

மிடுக்கான புரவிமீது வீற்று நகரவாயிலுள் நுழையும் அவ்வீர சிகாமணியை நீங்கள் அறிவீர்களா? அவன் தான் நமக்கு முன் பரிசயமான லலிதசிம்மன்; காஞ்சியின் சேனாதிபதி. எதிரிகளைக் கொன்று, தன் பிரபுவான காஞ்சி மன்னனின் கழலடியில் எதிரிகளின் உதிரத்தில் தோய்ந்த வாளைக் காணிக்கையளிக்க வந்திருக்கிறான். அதன் பொருட்டுத்தான் இவ்வளவு அல்லோல கல்லோலம்.

ஆனால் ஜய கோஷங்கள் நாற்றிசையும் பரவி யிருந்தும் சேனாதிபதியின் கவனம் அங்கே இல்லை. சாளர வாயில்கள் மூலம் நகர அரம்பையர் பொழியும் மலர் மாரியிலும் அவன் கவனம் செல்லவில்லை. கானகத்தி னூடே தாகத்தால் தவிக்கும் வழிப்போக்கன் குளத்தை நோக்கி விரையுங்கால் பழுத்த இலைகள் அவன் தலைமேல் உதிர்ந்து விழுந்தால் அவன் அதைக் கவனிப்பானா? பர பரப்புடன் விரையும் லலிதசிம்மனுக்கு இவர்கள் செய்யும் சம்மானங்கள் யாவும் உலர்ந்த சருகு போல் பயனற்றுப் போயின.

முடிவில், குதிரை அந்தப்புர வாயிலின் அருகே வந்ததும் நின்றது. லலிதசிம்மன் ஒரு முறை மாளிகை யின் ஜன்னலை ஆவலுடன் நோக்கினான்; நாணம் சிந்தும் இரு கயல் விழிகள் அவனை நோக்கின. வடிவார்ந்த இரு கைகள் வீசிய ஒரு மலர் மாலை அவன் முன்பு தரையில் விழுந்தது. அக்கணமே அவன் குதிரையிலிருந்து இறங்கி அம் மலர் மாலையை மகுடத்தில் அணிந்துகொண்டான். நன்றியுடன் அவன் அண்ணாந்து பார்த்தான். சாளரக் கதவு மூடிக் கிடந்தது. விளக்கும் மறைந்துவிட்டது.

## மூன்றாம் அத்தியாயம்

ஆயிரம் பகைவர்களுக்கெதிரே கலங்காத தீரன் ஒரு மான் விழியாளின்முன் தோல்வியுற்றான். சேனாதிபதி வெகு நாட்களாகத் துணிவைக் கல்லரண்போலத் தன் இதயத்துள் அடக்கிக்கொண் டிருந்தான். நேற்று அந்தி நேரத்தில் இரு கரு விழிகளில் தோன்றிய சுடர் அக்கோட் டையைத் தகர்த்தது, இவ்வளவு காலமாக இருந்த துணிச்சல் கணப்பொழுதில் தரைமட்டம் ஆகிவிட்டது. சீ! சீ! சேனாதிபதி, அதற்காக மாலையின் மங்கலில்

கள்ளனைப் போல மன்னனின் அந்தப்புரத் தோட்டத்துச் சுவரைத் தாவிக் குதிக்க வேண்டுமா? உலகத்தை வென்று வரும் வெற்றி வீரனல்லவா அவன்!

ஆனால் கதை எழுதுபவனுக்கு எங்கேயும் தடையே கிடையாது. வாயில் காப்போர் வழியைத் தடுக்க மாட்டார்கள். சூரியனொளியைக் காணுக் காரிகையரும் தடைமொழி கூற மாட்டார்கள். ஆகவே, இளந்தென்றல் வீசும் மனோரஞ்சிதமான இந்த வசந்த ருதுவின் மாலைப் பொழுதில், ராஜ அந்தப்புரத்தின் ரகசியத் தோட்டத்தில், நுழைவோம். இதை வாசிக்கும் பெண்மணிகளே! நீங்களும் வாருங்கள். வாசகர்காள்! விரும்பினால் நீங்களும் பின் தொடரலாம், நான் உங்களுக்குத் துணையாக இருப்பேன்.

மகிழ மரத்தடியில், பசும் புல் தரையில் அந்தி வெள்ளி போன்றிருக்கும் இவ்வழகி யார்? வாசகர்களே! இத்தகைய ரூபலாவண்யம் எங்கேயாவது கண்டதுண்டா நீங்கள்? அழகை எங்கேயாவது சொற்களின் மூலம் விஸ்தரிக்க முடியுமா? வார்த்தைகளில் இவ்வளவு உயிரும் பொலிவும் அழகும் சொட்டி வழியுமா? வாசகனே! உனக்கு இரண்டாம் முறை விவாகம் ஆகியிருந்தால் உன் மனைவியின் அழகிய வதனத்தை நினைத்துக்கொள். அழகு சொட்டும் வாசகியே! எவளைப் பார்த்து உன் தோழியிடம், "இவள் என்ன அவ்வளவு அழகா?" என்று பொருமையுடன் சொன்னாயோ, அந்தப் பெண்ணின் முகத்தை நினைத்துக்கொள். மரத்தடியில் இருக்கும் ராஜகுமாரியுடன் நீங்கள் நினைக்கும் உருவம் ஒற்றுமைப் படும். இப்போதாவது தெரிந்ததா? அவள்தான் ராஜ குமாரி வித்யுன்மாலா.

அரசகுமாரி மடியில் மலர்களுடன் தலை குனிந்தவாறு மாலை தொடுத்துக்கொண் டிருக்கிருள். நடுநடுவே அவளுடைய மெல்லிய விரல் தன் மென்மையான வேலை தாங்காது துவளுகின்றது. அவளுடைய கண்பார்வை ஒரு சிந்தனை உலகில் உலவிக்கொண்டிருக்கிறது. ராஜகுமாரிக்கு என்ன சிந்தனையோ?

ஆனல், அந்தக் கேள்விக்கு விடை நான் தரமாட்டேன். ராஜகுமாரி, தன் இதயத்துள் மறைவில் ஒரு தெய்வத்தை வழிபடுகிருள். அதோ கவனியுங்கள்; அவள் விடும் பெருமூச்சு, தூபத்தின் நறுமணம்போல மெல்ல அந்தி மாலைத் தென்றல்காற்றில் கலந்து மறைகிறது. அவள் கண்களிலிருந்து உதிர்ந்த இரு துளிகள், சிறு மலர்போல அவள் பூஜிக்கும் தேவனின் தாள்களுக்கே அர்ப்பணமாகின்றன. தூய்மையற்ற நம் ஆவலுடன் அந்த இடத்தில் நுழைந்து பார்ப்பது உசிதமல்ல.

அதே சமயம், பின்னுலிருந்து ஓர் ஆடவனின் குரல் ஆவேசத்துடன் ஒலித்தது; "ராஜகுமாரீ!"

ராஜகுமாரி திடுக்கிட்டுப் பயத்துடன் கூச்சல் போட்டாள். நாலு பக்கங்களிலிருந்தும் காவலாளர் பாய்ந்து குற்றவாளியைக் கைது செய்தனர். அரசகுமாரிக்கு மறுபடியும் நினைவு வந்தபோது சேனுதிபதி கட்டுண்டு நிற்பதைக் கண்டாள்.

## நான்காம் அத்தியாயம்

இந்தக் குற்றத்துக்காக மரணதண்டனை. ஆனல் முன் செய்த உதவியை எண்ணி அரசன் அவனை நாடு கடத்தினன். சேனுதிபதி தனக்குள்ளேயே, "தேவி, உன்

விழிகளே என்னை ஏமாற்றும்போது உலகில் சத்தியம் எங்காவது நிலைக்குமா? இன்று தொட்டு நான் மனிதவர்க் கத்துக்கே சத்துரு" என்று சொல்லிக்கொண்டான். ஒரு பெரிய கள்வர் கூட்டத்தின் தலைவனாகி லலிதசிம்மன் ஓர் இருண்ட காட்டில் வசிக்கத் தொடங்கினான்.

வாசகனே! உன்னையும் என்னையும் போன்ற மானிடன் இந்தச் சந்தர்ப்பத்தில் என்ன செய்யமுடியும்? தேசப் பிரஷ்டமாக வாழும் இடத்திலேயே வேறு வேலையைத் தேடுவோம். இல்லாவிட்டால் ஒரு புதிய பத்திரிகையை வெளியிடுவோம். ஆனால் கஷ்டம் ஏற்படத்தான் ஏற்படும். இதில் சந்தேகம் இல்லை; அது வயிற்று இடும்பைதான். ஆனால் சேனாதிபதியைப் போன்ற பெரிய மனிதர்களை எளிதாகக் கதையில் காணலாம்; ஆயினும் உலகத்தில் கிடைக்க அரிதானவர்கள் - வேலைக்காக அலைவதில்லை; பத்திரிகையும் வெளியிடுவதில்லை - மனத்தெம்பு இருக்கும் வரையில் ஒரே மூச்சில் உலகத்துக்கே பெரிய உப காரத்தைச் செய்வார்கள். அவர்கள் விரும்பிய ஒரு விஷயம் எள்ளளவு பங்கமுற்றாலும் கடுகடுத்துக் கதக் கண்களுடன், "இது ராக்ஷச உலகம்; பொய்ச் சமூகம்; இதோ இதை அழித்துவிட்டு மறு வேலை செய்வேன்" என்று உடனேயே கொடிய கள்வர் தலைவர்களாக மாறி விடுவார்கள். இந்த மாதிரி இங்கிலீஷ்க் கவிதைகளில் படிக்கிறோம். முக்கியமாக ராஜபுத்திரர்களிடையேயும் இந்தக் குண விசேஷம் உண்டு.

கள்வர் தொந்தரவால் நாட்டு ஜனங்கள் நடுங்கினர். ஆனால் அந்த அசாமானியமான கள்வர்கள் திக்கற்றவர் களுக்கு உதவுபவர்கள்; எளியவனுக்குத் தோழர்கள்; பலவீனர்களுக்கு உற்ற துணை. வெறும் பணக்காரர்கள்,

அரசாங்க உத்தியோகஸ்தர் இவர்களுக்குத்தான் அவர்கள் யமனைப் போல் இருந்தனர்.

பயங்கரமான காடு; சூரியாஸ்தமன நேரம். இரவு வருவதற்குமுன் வனத்தில் இருள் படர்ந்துவிட்டது. ஓர் இளைஞன் தான் அறியாத வழியே தன்னந் தனியாகச் சென்றுகொண் டிருக்கிறான். அவன் மிருதுவான தேகம் களைத்திருந்தது. இருந்தும் அவன் சென்றுகொண் டிருந்தான். இடையில் தரித்திருந்த வாளே தூக்க முடியாத சுமையாகத் தோன்றியது. காட்டில் துளி சப்தம் உண்டானால்கூட அவனுடைய உள்ளம் பயந்து மானைப்போல விதிர்த்தெழும். இரவோ பின்னும் கருக்கவிட்டது. அரணியமோ புதியது. இளைஞன் தன் தைரியத்தை விடாமல் முன்னே சென்றுகொண் டிருந்தான்.

கள்வர் ஓடி வந்து தலைவனிடம், "எஜமான்! உமக்கு நல்ல வேட்டை; ராஜ உடை உடுத்து இடுப்பில் வாளுடன் ஓர் இளைஞன் வருகிறான்" என்ற செய்தியை எட்டவிட்டார்கள்.

தலைவன், "அப்படியானால், இந்த வேட்டை என்னுடையது. நீங்கள் இங்கேயே இருங்கள்" என்றான்.

வழிப்போக்கன் சென்றுகொண் டிருந்தபோது உலர்ந்த சருகுகள்மீது காலோசை கேட்கவே நாற்புறமும் பயத்துடன் நோக்கினான்.

திடீரென்று மார்பில் ஒரு கணை வந்து பொத்தியது. அவன், "அம்மா" என்று அலறி மண்ணில் சாய்ந்தான்.

தலைவன் அருகே வந்து மண்டியிட்டு, அடிபட்டவனின் முகத்தைக் கூர்ந்து கவனித்தான். மண்மீதிருந்த வழிப்போக்கன் ஒரு முறை மெதுவான குரலில், "லலித்" என்றான்.

கண நேரத்தில் தலைவனின் உள்ளம் சுக்கல் சுக்கலாக நொறுங்கிப் பிறந்து ஒரு கூக்குரல் வெளியே வந்தது: "ராஜகுமாரீ!"

கள்ளர்கள் வந்து பார்த்தபோது, வேட்டை, வேட்டைக்காரன் இருவருமே பிணைந்து இறந்து கிடப்பதைக் கண்டனர்.

ராஜகுமாரி ஒரு நாள் அந்திப்பொழுதில் தன் அந்தப்புரத் தோட்டத்தில் தெரியாமல் லலிதசிம்மன் மேல் ராஜதண்டனையைச் சுமத்தினாள். அவன், மற்றொரு நாள் மாலையில் காட்டின் நடுவே, இன்னாரென்று தெரியாமல் ராஜகுமாரியின்மேல் அம்பை எய்தான். இம் மண்ணுலகைக் கடந்த ஓர் அதிசய உலகில் அவ்விருவரும் கூடுவார்களேயானால், நிச்சயமாகப் பரஸ்பரம் செய்துள்ள குற்றங்களுக்காக மன்னிப்புக் கேட்டுக்கொண் டிருப்பார்கள்.

# சுப திருஷ்டி

**கா**ந்திசந்திரன் வயதில் சின்னவன்தான். இருந்தாலும் மனைவி இறந்தபின் இரண்டாம் தாரத்தைத் தேடாமல், வேட்டைமேல் கருத்தாக இருந்தான். இறுகிய ஒற்றை நாடியான தேகம், கூர்மையான பார்வை; தவருத குறி. மேற்குப் பிரதேச ஆள் மாதிரி உடுப்பு அணிவான். பயில்வான் ஹீராசிங் சக்கன்லால், பாடகன் கான்சாகேப் மியாசாகேப் இவர்கள் அவன் கூடவே சுற்றிக்கொண்டிருப்பார்கள். வேலை இல்லாத பல பேர் அவனை மொய்த்துக்கொண் டிருப்பார்கள்.

இரண்டொரு வேட்டைக்காரர்களுடன், கார்த்திகை மாதத்தின் நடுவில் காந்திசந்திரன் ஆற்றங் கரையில் வேட்டையாடச் சென்றான். அவன் தங்குவதற்கென்று இரண்டு பெரிய படகுகள். இன்னும் இரண்டு மூன்று ஓடங்களில் அவனுடைய பரிவாரங்கள் ஊர்த்துறையில் நின்றன. ஊர்ப் பெண்டுகள் ஜலம் மொண்டு போவதையும் குளிப்பதையும் நிறுத்திவிட்டார்கள். நாளெல்லாம் துப்பாக்கிவெடியின் ஓசையால் நீரும் நிலமும் அதிரும். அந்தி நேரங்களில் பாடகர்களின் ராக ஆலாபனைகளால் ஊரார் தூக்கம் கலைந்து போய்விடும்.

ஒரு நாள் விடியற்காலையில் காந்திசந்திரன் படகில் அமர்ந்து துப்பாக்கியின் குதிரையைத் தானே துடைத்துக்கொண் டிருந்தான். இந்தச் சமயத்தில் அருகிலேயே வாத்துக்களின் குரல் கேட்டது. அவன் திரும்பிப் பார்த்

தான். ஒரு சிறுமி இரண்டு வாத்துக் குஞ்சுகளைத் தன் மார்போடு அணைத்தபடி துறையை நோக்கி வந்துகொண்டிருந்தாள். சிறிய ஆற்று மடு; அவ்வளவாக நீரோட்டம் இல்லை. பலவகைப் பாசிகள் மண்டிக் கிடந்தன. சிறுமி வாத்துக்களை நீரில் விட்டுவிட்டு, கைக்கெட்டாத தூரம் போய்விடாதபடி பார்த்துக்கொண்டிருந்தாள். மற்றத் தினங்களில் அவைகளை நீரில் விட்டுவிட்டுப் போய் விடுவாள். இன்று வேட்டைக்காரனின் பயத்தால் அவ்வாறு விட அவள் மனம் ஒப்பவில்லை.

சிறுமியின் அழகு புதிய ரகமானது. சற்று முன்னே தான் பிரமன் அவளைச் சிருஷ்டித்தானே என்று நினைக்கும்படி இருந்தாள். வயதைச் சரியாகச் சொல்ல முடியாது. நன்றாக மலர்ந்த அங்கங்கள். முகத்தில் இளமை ததும்பியது. யௌவனம் முற்ற வில்லை. சம்சாரத் தொல்லை எதுவும் அதை மாசுபடுத்தவில்லை. யௌவனத்தின் ஆரம்ப தசை வந்திருப்பது அவளுக்கே தெரியாது.

காந்திசந்திரன் கொஞ்ச நேரம் தன் வேலையை நிறுத்திவிட்டான். அவன் பிரமித்துப் போனான். இத்தகைய இடத்தில் இந்த அழகிய முகத்தைக் காண்போம் என்று அவன் நினைக்கவே இல்லை. அரசனின் அந்தப்புரத்தைவிட அந்த அழகு பளிச்சென்று திகழ இந்த இடமே ஏற்றதாயிருந்தது. பொன் கிண்ணத்தில் இருப்பதைவிட மரத்திலேயே மலர்கள் அழகுடன் விளங்கும். அன்று சரத்காலத்தின் மெல்லிய பனி தோய்ந்த காலையின் இளவெயிலில் ஆற்றங்கரையில் இருந்த, நாணல்கள் அசைந்தாடின. அதன் நடுவே இந்தப் புது எழில் வாய்ந்த முகத்தைக் கண்டு காந்திசந்திரன் சொக்கிப் போனான். வரப் போகும் பூஜைக் கொண்டாட்டத்தின்

இன்பச் சித்திரம் அவன் மனக் கண்முன் நின்றது. மந்தாகினியின் கரையில், பார்வதி ஹம்ஸக் குஞ்சுகளைத் தான் மார்பில் தழுவிக்கொள்வாள். காளிதாஸன் இதை வர்ணிக்க மறந்து போய்விட்டானே!

இந்தச் சமயத்தில், அந்தச் சிறுமி சட்டென்று பயந்து அழுகை வெடித்து வரப் பரபரவென்று வாத்துக் குஞ்சுகளை எடுத்துக்கொண்டு வாய் ஏதோ குழற, துறையை விட்டு அகன்றாள். காந்திசந்திரன் காரணம் என்ன என்று வெளியே வந்து பார்த்தபோது, அவன் கூட்டத்தாரில் ஒருவன், வேடிக்கையாக, அவளுக்குப் பயங் காட்ட வாத்துக்களைக் குறி பார்த்துச் சுடுவதுபோலத் துப்பாக்கியைத் தூக்கிக்கொண் டிருந்தான். காந்திசந்திரன் பின்னாலிருந்து துப்பாக்கியைப் பிடுங்கி அவன் முதுகில் பளீரென்று ஓர் அறை விட்டான். தன் விளையாட்டுச் சிதையவே, அந்த ஆள் தொப்பென்று உட்கார்ந்து விட்டான். காந்திசந்திரன் திரும்பித் தன் அறைக்குள் வந்து துப்பாக்கியைத் துடைக்கலானான்.

ஆவல் குடி கொண்ட காந்திசந்திரன் பறவையைத் தேடித் தோப்புத் தூரவெல்லாம் சுற்றி அலைந்தான். ஒரு குடியானவன் வீடு. முற்றத்தில் வரிசை வரிசையாக நெல் உறைகள், சுத்தமான பெரிய மாட்டுத் தொழுவம். அதன் பக்கத்தில் இருக்கும் நெல்லி மரத்தின்கீழ், காலையில் பார்த்த சிறுமி உட்கார்ந்து அடிபட்ட புறா ஒன்றை மார் போடு அணைத்தவாறு அழுதுகொண் டிருந்தாள். தொட்டியிலிருந்த ஜலத்தில் தன் புடைவைத் தலைப்பை நனைத்துப் பறவையின் அலகினுள் சொட்டுச் சொட்டாகப் பிழிந்தாள். வளர்ப்புப் பூனை ஒன்று அவள் மடியின்மேல் தன் கால்கள் இரண்டையும் தூக்கி வைத்து, ஆவலுடன் புறாவைப் பார்த்துக்கொண் டிருந்தது. சிறுமி நடுநடுவே

அதன் மூக்கைத் தன் விரலால் தட்டி அந்தப் பிராணியின் குரூர ஆவலை அடக்கினுள்.

ஒலி அடங்கிய பகல்வேளையில், ஒரு குடியானவன் வீட்டு முற்றத்தில் அமைதி திகழும்போது இந்த உருக்கமான காட்சி ஒரே கணத்தில் காந்திசந்திரனின் உள்ளத்தில் பதிந்துவிட்டது. இலைகள் அவ்வளவாக இல்லை மரத்தில்; நிழலும் வெயிலும் சிறுமியின் மடியில் விழுந்துகொண் டிருந்தன. பக்கத்திலேயே வயிறு நிரம்பத் தின்று கொழுத்த பசு ஒன்று வாலாலும் கொம்புகளாலும் ஈயை ஓட்டிக்கொண்டு தரையில் படுத் திருந்தது. மூங்கில் புதர்கள், வாடைக் காற்றில் பலவித மான சப்தங்களை உண்டாக்கின. அன்று விடியற்காலையில் ஆற்றங்கரைக்கே பேரழகு அளித்துக் கானக அரம்பை போல் தோன்றியவள், இந்த நடுப்பகல் வேளையில் நிச்சப்தமான தொழுவத்தின் நிழலில், அன்பால் நெக்குருகும் கிருகலக்ஷ்மியாகத் தென்பட்டாள்.

கையில் துப்பாக்கியுடன் சட்டென்று இந்தப் பெண்முன் வந்து நின்றதும், அவனுக்குக் கூச்சம் வந்துவிட்டது. கையும் பிடியுமாகத் திருடன் அகப் பட்டுக்கொண்டதுபோல் பட்டது அவனுக்கு. தான் புருவைச் சுடவில்லை என்று சொல்ல அவன் மனம் அலைந்தது. எப்படிப் பேச்சை எடுப்பது என்று எண்ணிக் கொண் டிருந்தபோது யாரோ, "ஸுதா" என்று கூப் பிட்டார்கள். சிறுமி திடுக்கிட்டு எழுந்தாள். இன்னொரு முறை, "ஸுதா" என்று குரல் வந்தது. உடனே அவள் புருவைக் கையில் எடுத்துக்கொண்டு குடிசையை நோக்கிச் சென்றுள். என்ன அழகான பெயர் என்று எண்ணினுன் காந்திசந்திரன்.

காந்தி தன் ஆட்களிடம் துப்பாக்கியைக் கொடுத்து விட்டு, ரஸ்தா வழியாக அந்தக் குடிசையின் எதிரே வந்து நின்றான். க்ஷவரம் செய்த தலையுடன், வயதான பிராம் மணர் ஒருவர் சாந்தமூர்த்தியாக இடைகழியில் உட்கார்ந்து ஹரிபக்தி விலாசம் படித்துக்கொண் டிருந்தார். அவர் முகஜாடைக்கும், அந்தப் பெண்ணின் முகத்துக்கும் ஒற்றுமை இருப்பதை உணர்ந்தான் காந்தி.

காந்திசந்திரன் அவரை நமஸ்காரம் செய்து, "ஸ்வாமி, தாகமாக இருக்கிறது. குடிக்க ஜலம் தர முடியுமா?" என்றான். பிராம்மணர் பரபரப்புடன் எழுந்து அவனை வர வேற்று உட்கார வைத்தார். உள்ளேயிருந்து ஒரு பித்தளைத் தட்டில் சில சோமாசிகளையும், வெண்கலக் கூஜாவில் ஜலத்தையும் கொண்டுவந்து அதிதியின் எதிரே வைத்தார்.

காந்தி ஜலம் சாப்பிட்டதும், பிராம்மணர் அவனைப் பற்றி விசாரித்தார். காந்தி தன் வரலாற்றைச் சொல்லி விட்டு, "ஸ்வாமி, என்னால் ஏதாவது உதவி செய்ய முடிந்தால் நான் கிருதார்த்தனாவேன்" என்றான்.

நவீன பந்த்யோபாத்யாயர், "அப்பா, எனக்கு வேறு என்ன உதவி செய்யப் போகிறாய்? எனக்கு ஸுதா என்று ஒரு பெண்; அவளுக்கு வயதோ ஆகிவிட்டது. ஒரு நல்ல வரனுக்கு அவளைத் தானம் செய்துவிட்டால் என் ஸம் ஸாரக் கடன் தீரும். இங்கே நல்ல பையனாக எவனும் அகப்படவில்லை. தூரத்தில் தேடக்கூடிய திறமை எனக்கு இல்லை. வீட்டில் கோபீநாதர் விக்கிரகம் இருக்கிறது. அதை விட்டுவிட்டு எங்கேயும் செல்வதற்கில்லை" என்றார்.

"நீங்கள் படகுக்கு வந்து என்னைப் பாருங்கள். வரனைப்பற்றி யோசிக்கலாம்" என்று சொல்லிவிட்டுக் காந்தி எழுந்தான்.

இந்தப் பக்கம் காந்திசந்திரன் அனுப்பிய ஒற்றர்கள் பந்த்யோபாத்யாயரின் பெண் ஸுதாவைப்பற்றிக் கேட்ட போது எல்லாரும் ஒரே மாதிரியாக அவளைப்போல் அழகும் குணமும் உள்ள பெண் கிடைப்பது அரிதென்று சொன்னார்கள்.

மறு நாள் நவீனர் படகுக்கு வந்து சேர்ந்தபோது காந்தி தரையில் விழுந்து வணங்கி, அவர் பெண்ணைத் தான் மணந்துகொள்வதாகச் சொன்னான். பிராம்மணர் எதிர்பாராத இந்த அதிர்ஷ்டத்தை எண்ணி ஒன்றும் பேச முடியாமல் நின்றார்.

ஏதாவது பிரமையா என்று எண்ணினார். "என் பெண்ணை நீயா மணந்துகொள்வாய்?" என்றார்.

"உங்களுக்குச் சம்மதமானால் நான் தயார்" என்றான் காந்தி.

"ஸுதாவையா?"

"ஆமாம்."

"பார்க்காமல் கொள்ளாமல்........"

காந்தி முதலே பார்த்திராதவன் போல, "சுபதிருஷ்டியின்போது பார்த்துக்கொண்டால் போகிறது" என்றான்.

நவீனர் குரலில் இளக்கம் தொனிக்க, "என் ஸுதா நல்ல குணவதி; சமையல், வீட்டு வேலைகளையெல்லாம் நன்றாகச் செய்வாள். அவளைப் பார்க்காமலே நீ கல்யாணம் செய்துகொள்கிறேன் என்கிறாய். ஸுதாவும் அதேபோல் பதிவிரதையாக, சௌபாக்கியத்துடன் உனக்குப் பணி செய்யட்டும் என்று ஆசீர்வாதம் செய்கிறேன். நீ இதை எண்ணி எப்போதும் துளிகூடக் கவலைப்பட மாட்டாய்" என்றார்.

காந்தி அதற்குமேல் தாமதம் செய்ய விரும்பவில்லை. மாசி மாதமே விவாகம் நடக்க ஏற்பாடாயிற்று.

ஊரில் மஜூம்தார்களின் பெரிய மாளிகையில் கல்யாணம் நடக்க ஏற்பாடாயிற்று. மாப்பிள்ளை, யானையின் மேல் ஏறி, மேள தாளத்துடன் வந்து சேர்ந்தான்.

சுப திருஷ்டியின்போது மணமகன் பெண்ணின் முகத்தை உற்று நோக்கினான். தலை குனிந்து, கிரீடம் அணிந்து, சந்தனத் தொய்யிலுடன் விளங்கிய ஸுதாவை நன்றாகப் பார்க்க முடியவில்லை. பொங்கி எழும் இன்பத்துடன் அவன் கண்கள் கூசிக்கொண்டன.

பள்ளியறையில் ஊரைச் சேர்ந்த அம்மாமி ஒருத்தி மணமகனைக் கொண்டு பெண்ணின் முகக்கை விலக்கிய போது, காந்தி திடுக்கிட்டான்.

இவள் அந்தப் பெண் இல்லையே!—அவன் மார்பில் திடுமென்று இடி விழுந்ததுபோல் ஆயிற்று. மூளை குழம்பியது. கண நேரம் அங்கே இருந்த விளக்குகள் எல்லாம் அவன் கண்கள் எதிரே இருண்டன. அந்த இருள் வெள்ளத்தில் புது மணப்பெண்ணின் முகமும் கறுத்தது.

இரண்டாந் தடவை விவாகம் செய்துகொள்ளக் கூடாது என்று தனக்குள் சபதம் செய்துகொண்டிருந்தான் காந்தி. அந்தப் பிரதிக்ஞையை, எதிர்பாராதபடி விதியின் செயல் தோற்கடித்துவிட்டதே! எத்தனையோ நல்ல நல்ல இடங்களை யெல்லாம் உதறித் தள்ளினான். சிநேகிதர்கள் காலைப் பிடித்தபோதும் அவன் சம்மதிக்கவில்லை; உயர்குலத்துப் பெண்களை வெறுத்தான். பணம் தருவதாகச் சொன்னபோதும் உதறினான். அழகைக் கண்டும் மயங்கவில்லை. கடைசியில் இன்று முன் பின் தெரியாத இந்த எளிய பிராம்மணரின் வீட்டில் இந்த

மாதிரி ஏமாந்தோமே என்று வருந்தினன். ஜனங்களுக் கெதிரே எப்படி முகத்தைக் காட்டுவது?

மாமனர் மேல் கோபமாக வந்தது. 'ஏதோ ஒரு பெண்ணைக் காட்டி ஏமாற்றி இன்னொரு பெண்ணை எனக்கு விவாகம் செய்துவைத்தானே! கல்யாணத்துக்கு முன் பெண்ணைக் காட்டவில்லையே! பார்க்க வேண்டிய அவசியம் இல்லை என்று நாம்தானே சொன்னோம்! இவ்வளவு பெரிய ஏமாற்றம் நம் முட்டாள்தனத்தால்தானே ஏற்பட்டது? இதை ஒருவரிடமும் வெளியிடக் கூடாது' என்று தீர்மானம் செய்துகொண்டான்.

மருந்தை விழுங்கியாகிவிட்டது. முகத்தில் இருந்த அதன் கசப்பு மாறவில்லை. பள்ளி அறையில் நடந்த பரிகாசம், ஏளனம் எதுவும் அவனுக்கு ருசிக்கவில்லை. தன் மேலும் ஜனங்கள் மேலும் ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது அவனுக்கு.

இந்தச் சமயத்தில் சட்டென்று அவன் பக்கத்தில் இருந்த பெண் பயந்து கூச்சலிட்டாள். அவள் மடிமீது முயல்குட்டி ஒன்று ஓடியது. மறு கணமே அன்று பார்த்த அந்தச் சிறுமி முயல் குட்டியைத் தேடிக்கொண்டு வந்து அதைப் பிடித்துத் தன் மார்போடு அணைத்துக்கொண்டு தடவிக் கொடுத்தாள். "அடே, இந்தப் பைத்தியம் வந்து விட்டதே!" என்று எல்லோரும் அவளைப் போகும்படி ஜாடை செய்தனர். அவள் அதை லக்ஷ்யம் செய்யாமல் தம்பதிகளுக்கெதிரே உட்கார்ந்து குழந்தையைப் போல என்ன நடக்கிறதென்று பார்க்கலானள். வீட்டு வேலைக் காரி ஒருத்தி அவளைப் பிடித்து இழுத்துக்கொண்டு போக வந்த சமயம் மணமகன், "இருக்கட்டுமே; அதனல் என்ன?" என்ருன்.

“உன் பேரென்ன?” என்று சிறுமியைக் கேட்டான் காந்திசந்திரன்.

அவள் பதில் ஒன்றும் சொல்லாமல் ஆடலானாள். அறைக்குள் இருந்த பெண்கள் சிரித்தார்கள்.

காந்தி மீண்டும், “உன் வாத்துக் குஞ்சு எவ்வளவு பெரிதாச்சு?” என்றான்.

பெண் கூச்சம் என்பதே இராமல் அவன் முகத்தைப் பார்த்தாள்.

காந்தி ஒன்றும் தோன்றாமல் திரும்பவும், “அந்தப் புறாவுக்குக் காயம் தேவலையா?” என்றான். பதில் ஒன்றும் இல்லை. மணமகனைப் பார்த்துப் பெண்களெல்லாம் கொல்லென்று சிரித்தனர்.

கடைசியில் கேட்டபோது விஷயம் வெளிச்சமாயிற்று. அவள் ஊமை, செவிடுங்கூட; ஊரிலிருக்கும் பிராணிகளுக்கெல்லாம் பிடித்தவள். ‘ஸுதா’ என்று அழைத்தபோது அவள் உள்ளே சென்றது உடன் நிகழ்ச்சியே தவிர, பெயருக்கும் அவளுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை.

உள்ளூறக் காந்திக்குத் தூக்கி வாரிப் போட்டது. நல்ல காலம்! துயர் நிரம்பிய வாழ்வில் சிக்கிக்கொள்ளாமல் பிழைத்தோமே என்று பெருமூச்சு விட்டான். ‘இந்தப் பெண்ணின் தகப்பனைக் கேட்டிருந்தால் இவளை என் கையில் தள்ளிவிட்டுச் சந்தோஷமாகப் போயிருப்பானே’ என்று எண்ணினான்.

அந்தப் பெண்ணின்மேல் மோகம் இருந்தவரையிலும் தான் மணந்த பெண் விஷயத்தில் அவன் குருடனாகவே இருந்தான்; ஆறுதல் அடையக் காரணம் இருப்பதைக் கூட அவன் கவனிக்கவில்லை. அந்தப் பெண் ஊமை,

செவிடு என்று தெரிந்ததும், உலகத்தைச் சூழ்ந்திருந்த மாயத் திரை அறுந்து விழுந்தது. எட்டாத ஆசை விலகி அருகில் இருந்த பொருள் தெளிவாகத் தெரிந்தது. தப்பி னேம் என்று பெருமூச்செறிந்தான். இப்போதுதான் அவனுக்கு, நாணித் தலை குனிந்திருந்த மணமகளின் முகத்தை நன்ருகப் பார்க்கும் சந்தர்ப்பம் வாய்த்தது. இப் போதுதான் உண்மையில் சுபதிருஷ்டி. அவனது மனக் கண்ணை மூடியிருந்த கலக்கம் தெளிந்தது. இருதயத்தி லிருந்து எழுந்த அபூர்வ ஒளியில் இளமையின் செவ்வி வாய்ந்த ஒரு முகத்தை நேரில் கண்டான். தணிந்த அழகும், அமைதி தரும் லாவண்யமும், மணப் பெண்ணின் முகத்தில் மலிந்து விளங்கின. நவீனரின் ஆசி வீண் போகவில்லையென்பதை உணர்ந்தான் காந்திசந்திரன்.



முற்றும்

